# பொருளடக்கம்

# கருத்தும் வாழ்த்தும்

தமிழ் சித்திர அகராதியைப் பார்க்கவா, படிக்கவா என்று எண்ணுவோரையும் (படம்) பார்த்துப் படிக்க வா என்று அழைக்கிறது இந்நூல்.

சிலர் படிக்கத் தொடங்கும்போது நேரடியாக முதன்மை பாகத்தில் தொடங்கிப் படிப்பர். ஆனால் இப்புத்தகத்தைப் பொறுத்தவரை நாம் முன்னுரையை முதலில் முழுவதும் உள்வாங்கிப் பின்தொடர்வதே நன்று.

ஏனெனில் ஓசையும் மொழியும் பின்னிப் பிணைந்து ஓர் சொல்லின் பொருளுக்குப் பின்புலமாக அமைவதை மிக எளிதில் புரிந்து கொள்ள அது உதவும்.

பல சொற்கள் அரிதாகவும் ஏதோ புதியது போலும் தோன்றினாலும் நாம்தான் இவ்வரிய சொற்களை காலப்போக்கில் இழந்து விட்டோமோ என்று ஏங்க வைக்கிறது, இந்நூல். உதாரணமாக சாவேறு, கடகம், சாக்கை மற்ற பிற.

ஒவ்வோர் சொல்லுக்கும் உகந்ததோர் சித்திர இணைப்பில் ஆசிரியரின் கடின உழைப்பும் ஆராய்ச்சியும் தெரிகிறது.

இந்நூலைப் படிப்பதால் என்ன சொல்கிறோம் என்று விளங்காதவரும் அதை ஏன் அப்படிச் சொல்கிறோம் என்பதும் எப்படிச் சொல்கிறோம் என்பதையும் மிக எளிதாக மனதில் உணர வழிவகை செய்கிறது.

இது போன்ற நூல்கள் மாணவப் பருவத்தில் இருந்தே சிறார் கல்வித் திட்டத்தில் அமையப்பெறின் அது தமிழன்னைக்குச் செய்யும் உவப்பு மிகு தொண்டாகும் என்றால் அது மிகையல்ல.
மிகவும் வித்தியாசமான புதினம்.
திரு.சொல்லாக்கியரின் இத்தொண்டு சிறக்க இறைவனருள் அவருக்குத் துணை புரிவதாக.

எண்சீர்:

சித்திரமும் செந்தமிழும் சேர்ந்து விளையாடும்
    சீர்மிகு சொற்களை செவ்வனே தந்திடும்

முத்திரைப் பதித்திட முன்வந்து நின்றிடும்
    முதன்மை இதுவென மொழியெல்லாம் கூறிடும்

உத்தரம் தருவதால் உலகினோர் மெச்சிடும்
    உள்ளத்தில் அச்சுபோல் உடனே பதிந்திடும்

புத்தகம் இதுபோலே யாமென்றும் கண்டதில்லை
    புவிபோற்ற சொல்லாக்கியர் புகழோடு வாழ்கவே!!

**ஹரிஹரன், சென்னை**

# முன்னுரை

தமிழ்ச் சொற்கள் எப்படி உருவாகின? கேள்வியே தவறானதோ? மொழிகளோ, சொற்களோ தாமாக உருவாவதில்லை. இயற்கையாலோ, இறைவனாலோ, ஒரு தனி முனிவனாலோ மொழிகள் உருவாக்கப்படவில்லை. அடிப்படைகள் இல்லாமல், புராணங்கள் ஆயிரம் கூறலாம். ஆனால், அறிவியல் கேள்விக்குள்ளாக்கிய வரலாறு மட்டுமே ஏற்கக் கூடியது. மொழி என்பது, ஒரு வரலாற்று மற்றும் சமூக உற்பத்திப் பொருள் (Language is a Historical and Social product). பலப்பல சாதாரண மக்களும், பற்பல அறிஞர்களும், பல கவிஞர்களும், வெவ்வேறு காலகட்டங்களில் பேசியதும், எழுதியதும் திருத்தப்பட்டு, மறுக்கப்பட்டு, ஏற்கப்பட்டு, செழுமைப்படுத்தப்பட்டு உருவானதே, உலகில் உள்ள ஒவ்வொரு மொழியும். தமிழ் மொழியும் அவ்வாறு உருவானதே. தமிழ் மொழியின் தனிச்சிறப்பு என்னவென்றால், அதை வளர்த்தது, தமிழ்ச்சங்கங்கள். தமிழ் மொழியின் ஒலிப்பும், வரிவடிவமும், பொருளும் நீண்ட விவாதங்களின் ஊடே அச்சங்கங்களால் செம்மையாக்கப்பட்டுள்ளது. பிற மொழிச் சொற்களை, தமிழ்ப்படுத்தும் விதிகளும் உருவாக்கப்பட்டுள்ளன. தன்னுடன் உரையாடிய பல்வேறு மொழிகளுக்கு, தன் சொல்வளத்தை, தமிழ் வாரி வழங்கி உள்ளது.

நமக்கு கிடைக்கப்பெற்ற முதல் தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம், அடிப்படையான தமிழ்ச் சொற்கள் யாவை என்றும், அவை புணர்ந்து / புணர்க்கப்பட்டு எவ்வாறு பிற சொற்கள் யாவும் உருவாக்கப்படுகின்றன என்றும் உரைக்கின்றது. அதற்கான புணர்ச்சி விதிகளையும் மிகவும் விளக்கமாக கூறுகின்றது. விதிவிலக்குகளையும், கூறப்பட்ட விதிகளின்படி வருங்காலத்தில், சமூக வளர்ச்சி மற்றும் தேவைக்கேற்ப புதிய விதிகளையும் உருவாக்கிக் கொள்ள புறநடைகள் மூலம் இடம் அளிக்கின்றது. அதே சமயம், கூறப்பட்ட விதிகளைக் காக்கவும், அறிஞர்களை அறிவுறுத்துகின்றது. தொல்காப்பியம், எழுத்து அதிகாரம், மொழிமரபு நூற்பா 45-ல், தமிழ்ச்சொற்கள் தனிச்சொற்களாக நிற்பதற்குரிய நெறிகளைக் கூறுகின்றார், தொல்காப்பியர்:

*45. ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி*
*இரண்டிறந் திசைக்கும் தொடர்மொழி உளப்பட*
*மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே.*

**1. ஓர் எழுத்து ஒருமொழிகள் யாவை?**

*43. நெட்டெழுத் தேழே ஓரெழுத் தொருமொழி.*

''ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ'' ஆகிய 7 உயிர் நெட்டெழுத்துக்களோடு, சொல்லுக்கு முதலில் வரும் 50 உயிர்மெய் நெட்டெழுத்துகளும் சேர்ந்து மொத்தம் 57 ஓரெழுத் தொருமொழிகள்.

உயிர்மெய் நெட்டெழுத்துகள்: கா, கீ, கூ, கே, கை, கோ, கௌ, சா, சீ, சூ, சே, சை, சோ, சௌ, ஞா, தா, தீ, தூ, தே, தை, தோ, தௌ, நா, நீ, நூ, நே, நை, நோ, நௌ, பா, பீ, பூ, பே, பை, போ, பௌ, மா, மீ, மூ, மே, மை, மோ, மௌ, யா, யௌ, வா, வீ, வே, வை, வௌ,

**ஆனாலும், ''கீ, கே, தௌ, மௌ, யௌ,'' போன்றவற்றிற்கு, அகராதிகள் பொருள் கூறவில்லை.**

*42. குற்றெழுத் தைந்தும் மொழிநிறை பிலவே.*

''அ, இ, உ, எ, ஒ'' ஆகிய 5 உயிர் குற்றெழுத்துகளோடு, சொல்லுக்கு முதலில் வரும் 33 உயிர்மெய் குற்றெழுத்துகளும், ஆக மொத்தம் 38 குற்றெழுத்துகளும் முழுமையான பொருள் தராத சொற்கள்.

உயிர்மெய் குற்றெழுத்துகள்: க, கி, கு, கெ, கொ, ச, சி, சு, செ, சொ, த, தி, து, தெ, தொ, ந, நி, நு, நெ, நொ, ப, பி, பு, பெ, பொ, ம, மி, மு, மெ, மொ, வ, வி, வெ.

இந்நூற்பாவிற்கு உரை காணும் இளம்பூரணர், **''குற்றெழுத்தாகிய ஐந்தும் ஓரெழுத்தாய் நின்று ஒரு மொழியாய் நிறைதல் இல, அவற்றுள் சில நிறைக்கும்''** என்கிறார். **''து, நொ''** என்பன நிறைமொழி என்கிறார். இளம்பூரணர், ''அ, இ, உ, எ'' ஆகியவற்றை இடைச் சொல் என்றது ஏனோ அறிகிலம்.

ஆனால், **அ** + து = அது, **இ** + து = இது, **உ** + து = உது, **எ** + து = எது எனும் புணர்ச்சிகளில், ''அந்த'', ''இந்த'', ''உந்த'', ''எந்த'' எனும் சுட்டுப் பொருளுடையானவாய் மொழிக்கு முதலான குற்றெழுத்துகள் உள்ளன.

''கற்க'' எனும் சொல் எவ்வாறு புணர்த்தப்பட்டது எனப்பார்த்தால், ''கல் + க'' என்றே இருக்கும். ''கல்'' எனும் ஈரெழுத்து ஒரு மொழியும், ''க'' எனும் குற்றெழுத்தும் சேர்ந்தே, ''கற்க'' எனும் சொல் உருவாகியுள்ளது. ''நிற்க'' என்பதும், ''நில் + க'' எனும் சேர்க்கையால் விளைந்தது. ''கற்ப'' என்பதும், ''கல் + ப'' எனும் சேர்ப்பே. ''கல் + கி'' என்பதே ''கல்கி'' ஆகும். ''நல் + கு'' = ''நல்கு'' என்றாகும். ''என் + க'' = ''என்க'' என்றாகும்.

அவ்வாறே, ''ஈ + ச'' = ''ஈச'', ''ஊ + ச'' = ''ஊச'', ''ஏ + ச'' = ''ஏச'', ''சி + அம்'' = ''சிவம்'', ''சி + அன்'' = ''சிவன்'', ''கல் + சு'' = ''கஃசு'', ''ஆ + சு'' = ''ஆசு'' என்றும்,

''ஆ + த'' = ''ஆத'', ''ஆ + தி'' = ''ஆதி'', ''சில + தி'' = ''சிலதி'', ''பகு + தி'' = ''பகுதி'', ''மிகு + தி'' = ''மிகுதி'', ''விகு + தி'', = ''விகுதி'', ''அ + து'' = ''அது'', ''ஆ + து'' = ''ஆது'', ''இ + து'' = ''இது'', ''உ + து'' = ''உது'', ''எ + து'' = ''எது'' என்றும்,

''என் + ப'' = ''என்ப'', ''கல் + பி'' = ''கற்பி'', ''கல் + பு'' = ''கற்பு'', ''சால் + பு'' = ''சால்பு'', ''நள் + பு'' = ''நட்பு'' என்றும்,

''என் + ம'' = ''என்ம'', ''உ + மி'' = ''உமி'', ''பூ + மி'' = ''பூமி'' ''மா + மி'' = ''மாமி'' என்றும்,

''செல் + வ'' = ''செல்வ'' என்றும் ஆகும்.

''வி = விசும்பு'' எனப் பொருள்படும்.

எனவே, ''அ'', ''இ'', ''உ'', ''எ'', ''க'', ''கி'', ''கு'', ''ச'', ''சு'', ''த'', ''தி'', ''ப'',, ''பி'', ''பு'', ''ம'', ''மி'', ''வ'' என்பன தனித்து நின்று **முழுமையானப் பொருள் தராமல் இருப்பினும்** (து, நொ, சி, வி போன்றவை தவிர), அவை, பிற சொற்களோடு சேர்ந்து / சார்ந்து பொருள் தருவன. எனவே, பொதுவாக, **குற்றெழுத்துகளை பகுதிப்பொருண்மை தருவன** எனலாம்.

### 2. ஈர் எழுத்து ஒருமொழிகள் யாவை?

உயிர் குற்றெழுத்தை அடுத்தும், உயிர் நெட்டெழுத்தை அடுத்தும், மொழிக்கு முதலில் வரும் உயிர்மெய் குற்றெழுத்தை அடுத்தும், உயிர்மெய் நெட்டெழுத்தை அடுத்தும், மொழிக்கு இறுதியாக வரும் மெய்யெழுத்துகள் வருவது, ஈர் எழுத்து ஒரு மொழிகளாகும். இவை, முழுமைப் பொருண்மைகளைத் தருவன / தரவல்லன.

அண், ஆண், இண், ஈண், உண், ஊண், எண், ஏண், ஐண், ஒண், ஓண், ஔண், அம், ஆம், இம், ஈம், உம், ஊம், எம், ஏம், ஐம், ஒம், ஓம், ஔம், அய், ஆய், இய், ஈய், உய், ஊய், எய், ஏய், ஐய், ஒய், ஓய், ஔய், அர், ஆர், இர், ஈர், உர், ஊர், எர், ஏர், ஐர், ஒர், ஓர், ஔர், அல், ஆல், இல், ஈல், உல், ஊல், எல், ஏல், ஐல், ஒல், ஓல், ஔல், அவ், ஆவ், இவ், ஈவ், உவ், ஊவ், எவ், ஏவ், ஐவ், ஒவ், ஓவ், ஔவ், அழ், ஆழ், இழ், ஈழ், உழ், ஊழ், எழ், ஏழ், ஐழ், ஒழ், ஓழ், ஔழ், அள், ஆள், இள், ஈள், உள், ஊள், எள், ஏள், ஐள், ஒள், ஓள், ஔள், அன், ஆன், இன், ஈன், உன், ஊன், என், ஏன், ஐன், ஒன், ஓன், ஔன்,

கண், காண், கிண், கீண், குண், கூண், கெண், கேண், கைண், கொண், கோண், கௌண், கம், காம், கிம், கீம், கும், கூம், கெம், கேம், கைம், கொம், கோம், கௌம், கய், காய், கிய், கீய், குய், கூய், கெய், கேய், கைய், கொய், கோய், கௌய், கர், கார், கிர், கீர், குர், கூர், கெர், கேர், கைர், கொர், கோர், கௌர், கல், கால், கில், கீல், குல், கூல், கெல், கேல், கைல், கொல், கோல், கௌல், கவ், காவ், கிவ், கீவ், குவ், கூவ், கெவ், கேவ், கைவ், கொவ், கோவ், கௌவ், கழ், காழ், கிழ், கீழ், குழ், கூழ், கெழ், கேழ், கைழ், கொழ், கோழ், கௌழ், கள், காள், கிள், கீள், குள், கூள், கெள், கேள், கைள், கொள், கோள், கௌள், கன், கான், கின், கீன், குன், கூன், கென், கேன், கைன், கொன், கோன், கௌன்.

சண், சாண், சிண், சீண், சுண், சூண், செண், சேண், சைண், சொண், சோண், சௌண், சம், சாம், சிம், சீம், சும், சூம், செம், சேம், சைம், சொம், சோம், சௌம், சய், சாய், சிய், சீய், சுய், சூய், செய், சேய், சைய், சொய், சோய், சௌய், சர், சார், சிர், சீர், சுர், சூர், செர், சேர், சைர், சொர், சோர், சௌர், சல், சால், சில், சீல், சுல், சூல், செல், சேல், சைல், சொல், சோல், சௌல், சவ், சாவ், சிவ், சீவ், சுவ், சூவ், செவ், சேவ், சைவ், சொவ், சோவ், சௌவ், சழ், சாழ், சிழ், சீழ், சுழ், சூழ், செழ், சேழ், சைழ், சொழ், சோழ், சௌழ், சள், சாள், சிள், சீள், சுள், சூள், செல், சேள், சைள், சொள், சோள், சௌள், சன், சான், சின், சீன், சுன், சூன், சென், சேன், சைன், சொன், சோன்.

ஞண், ஞாண், ஞிண், ஞீண், ஞுண், ஞூண், ஞெண், ஞேண், ஞைண், ஞொண், ஞோண், ஞௌண், ஞம், ஞாம், ஞிம், ஞீம், ஞும், ஞூம், ஞெம், ஞேம், ஞைம், ஞொம், ஞோம், ஞௌம், ஞய், ஞாய், ஞிய், ஞீய், ஞுய், ஞூய், ஞெய், ஞேய், ஞைய், ஞொய், ஞோய், ஞௌய், ஞர், ஞார், ஞிர், ஞீர், ஞுர், ஞூர், ஞெர், ஞேர், ஞைர், ஞொர், ஞோர், ஞௌர், ஞல், ஞால், ஞில், ஞீல், ஞுல், ஞூல், ஞெல், ஞேல், ஞைல், ஞொல், ஞோல், ஞௌல், ஞவ், ஞாவ், ஞிவ், ஞீவ், ஞுவ், ஞூவ், ஞெவ், ஞேவ், ஞைவ், ஞொவ், ஞோவ், ஞௌவ், ஞழ், ஞாழ், ஞிழ், ஞீழ், ஞுழ், ஞூழ், ஞெழ், ஞேழ், ஞொழ், ஞோழ், ஞௌழ், ஞள், ஞாள், ஞிள், ஞீள், ஞுள், ஞூள், ஞெள், ஞேள், ஞைள், ஞொள், ஞோள், ஞௌள், ஞன், ஞான், ஞின், ஞீன், ஞுன், ஞூன், ஞென், ஞேன், ஞைன், ஞொன், ஞோன், ஞௌன்.

தண், தாண், திண், தீண், துண், தூண், தெண், தேண், தைண், தொண், தோண், தௌண், தம், தாம், திம், தீம், தும், தூம், தெம், தேம், தைம், தொம், தோம், தௌம், தய், தாய், திய், தீய், துய், தூய், தெய், தேய், தைய், தொய், தோய், தௌய், தர், தார், திர், தீர், துர், தூர், தெர், தேர், தைர், தொர், தோர், தௌர், தல், தால், தில், தீல், துல், தூல், தெல், தேல், தைல், தொல். தோல், தௌல், தவ், தாவ், திவ், தீவ், துவ், தூவ், தெவ், தேவ், தைவ், தொவ், தோவ், தௌவ், தழ், தாழ், திழ், தீழ், துழ், தூழ், தெழ், தேழ், தைழ், தொழ், தோழ், தௌழ், தள், தாள், திள், தீள், துள், தூள், தெள், தேள், தைள், தொள், தோள், தௌள், தன், தான், தின், தீன், துன், தூன், தென், தேன், தைன், தொன், தோன், தௌன்.

நண், நாண், நிண், நீண், நுண், நூண், நெண், நேண், நைண், நொண், நோண், நௌண், நம், நாம், நிமி, நீம், நும், நூம், நெம், நேம், நைம், நொம், நோம், நௌம், நய், நாய், நிய், நீய், நுய், நூய், நெய், நேய், நைய்,, நொய், நோய், நௌய்., நர், நார், நிர், நீர், நுர், நூர், நெர், நேர், நைர், நொர், நோர், நௌர், நல், நால், நில், நீல், நுல், நூல், நெல், நேல், நைல், நொல், நோல், நௌல், நவ், நாவ், நிவ், நீவ், நுவ், நூவ், நெவ், நேவ், நைவ், நொவ், நோவ், நௌவ், நழ், நாழ், நிழ், நீழ், நுழ், நூழ், நெழ், நேழ், நைழ், நொழ், நோழ்,, நௌழ், நள், நாள், நிள், நீள், நுள், நூள், நெள், நேள், நைள், நொள், நோள், நௌள், நன், நான், நின், நீன், நுன், நூன், நென், நேன், நைன், நொன், நோன், நௌன்.

பண், பாண், பிண், பீண், புண், பூண், பெண், பேண், பைண், பொண், போண், பௌண், பம், பாம், பிம், பீம், பும், பூம், பெம், பேம், பைம், பொம், போம், பௌம், பய், பாய், பிய், பீய், புய், பூய், பெய், பேய், பைய், பொய், போய், பௌய், பர், பார், பிர், பீர், புர், பூர், பெர், பேர், பைர், பொர், போர், பௌர், பல், பால், பில், பீல், புல், பூல், பெல், பேல், பைல், பொல், போல், பௌல், பவ், பாவ், பிவ், பீவ், புவ், பூவ், பெவ், பேவ், பைவ், பொவ், போவ், பௌவ், பழ், பாழ், பிழ், பீழ், புழ், பூழ், பெழ், பேழ், பைழ், பொழ், போழ், பௌழ், பள், பாள், பிள், பீள், புள், பூள், பெள், பேள், பைள், பொள், போள், பௌள், பன், பான், பின், பீன், புன், பூன், பென், பேன், பைன், பொன், போன், பௌன்.

மண், மாண், மிண், மீண், முண், மூண், மெண், மேண், மைண், மொண், மோண், மௌண், மம், மாம், மிம், மீம், மும், மும்,மெம், மேம், மைம், மொம், மோம், மௌம், மய், மாய், மிய், மீய், முய், மூய்,, மெய்,

மேய், மைய், மொய், மோய், மௌய், மர், மார், மிர், மீர், முர், மூர், மெர், மேர், மைர், மொர், மோர், மௌர், மல், மால், மில், மீல், முல், மூல், மெல், மேல், மைல், மொல், மோல், மௌல், மவ், மாவ், மிவ், மீவ், முவ், மூவ், மெவ், மேவ், மைவ், மொவ், மோவ், மௌவ், மழ், மாழ், மிழ், மீழ், முழ், மூழ், மெழ், மேழ், மைழ், மொழ், மோழ், மௌழ், மள், மாள், மிள், மீள், முள், மூள், மெள், மேள், மைள், மொள், மோள், மௌள், மன், மான், மின், மீன், முன், மூன், மென், மேன், மைன், மொன், மோன், மௌன்.

யாண், யாம், யாய், யார், யால், யாவ், யாழ், யாள், யான்.

வண், வாண், விண், வீண், வெண், வேண், வைண், வம், வாம், விம், வீம், வெம், வேம், வய், வாய், விய், வீய், வெய், வேய், வர், வார், விர், வீர், வைர், வெர், வேர், வல், வால், வில், வீல், வெல், வேல், வவ், வாவ், விவ், வீவ், வெவ், வேவ், வழ், வாழ், விழ், வீழ், வெழ், வேழ், வள், வாள், விள், வீள், வெள், வேள், வன், வான், வின், வீன், வென், வேன்.

***3. தொடர்மொழி என்றால் என்ன? அவை யாவை? மொழித்தொடர் என்றால் என்ன?***

**தொடர்மொழி என்றால், ஒரே ஒரு சொல்லே தொடர்ச்சியாகி வருதல்.** சான்றாக, ''ஆல்'' என்பது ஈர் எழுத்து ஒருமொழி. அதன் பின் உயிர்கள் ஒட்டி, ''ஆல, ஆலா, ஆலி, ஆலை, ஆலே, ஆலோ'' எனத் தொடர்ந்தால், அவை தொடர்மொழிகள்.

மேலும், உயிர் குற்றெழுத்தை அடுத்தும், உயிர் நெட்டெழுத்தை அடுத்தும், மொழிக்கு முதலில் வரும் உயிர்மெய் குற்றெழுத்தை அடுத்தும், உயிர்மெய் நெட்டெழுத்தை அடுத்தும், மொழிக்கு இறுதியாக வராத மெய்யெழுத்துகளை ஒட்டி, உயிர்கள் வந்தால், அவையும் தொடர்மொழி எனலாம். சான்றாக, அக் + அ = அக,, ஆக் + அ = ஆக, இக் + அ = இக..., அச் + அ = அச, ஆச் + அ = ஆச.., அட் + அ = அட, ஆட் + அ = ஆட,.., அத் + அத, அத் + இ = அதி,.., அற் + அ = அற, ஆற் + அ = ஆற,.., கக் + அ = கக.., கச் + அ = கச.., கட் + அ = கட,.., கத் + அ = கத,.., கற் + அ = கற,.., சக் + அ = சக, சச் + அ = சச,.., சட் + அ = சட, சத் + இ = சதி, சற் + அ = சற,.., தக் + அ = தக, தச் + அ = தச, தட் + அ = தட, தத் + இ = ததி, தற் + இ = தறி,..நக் + அ = நக, நச் + இ = நசி, நட் + அ = நட, நற் + அ = நற, பக் + அ = பக,.., மக் + அ = மக,.., வக் + அ = வக,.. போன்றவை தொடர்மொழிகள் எனலாம்.

மாறாக, **மொழித்தொடர் என்றால், இரண்டு அல்லது இரண்டுக்கு மேலான சொற்கள் அடுத்தடுத்து வருதல்.** சான்றாக, ''ஆலன் வந்தான்'' என்பது மொழித்தொடர் அல்லது சொற்றொடர்.

மாத்திரைகள் இரண்டு, இரண்டிற்கு மேலாக ஒலிப்பவை, தொடர்மொழிகள். ''அல'' எனும் தொடர்மொழியில் இரண்டு மாத்திரைகள் உள்ளன. ''ஆல'' எனும் தொடர்மொழியில் மூன்று மாத்திரைகள் உள்ளன. ''ஆலை'' எனும் தொடர்மொழியில், நான்கு மாத்திரைகள் உள்ளன.

***4. எனவே, 1.ஓர் எழுத்தாக இருந்தே, முழுமையான பொருளைத் தருவனவும் (நெட்டெழுத்துகள்), ஓர் எழுத்தாக நின்று நிறைவான அதாவது முழுமையானப் பொருளைத் தராமல், பகுதிப் பொருண்மை தருவனவும் (குற்றெழுத்துகள்), 2.முழுமைப் பொருண்மைகளைத் தரும் ஈர் எழுத்து ஒரு மொழிகளும், 3. இரண்டு மாத்திரைகள், மற்றும் இரண்டிற்கு மேலான மாத்திரைகள், உயர்ந்த எல்லையாக நான்கு மாத்திரைகள் கொண்டு ஒலிக்கும் தொடர்மொழிகள் ஆகிய மூன்று வகைகளிலேதான் சொற்கள் தனித்து நிற்கின்றன. இவையே தனிமொழிகள், தமிழின் அடிப்படைச் சொற்கள்.***

*5.* ***பிற சொற்கள் யாவும், மேற்கூறிய மூன்று வகையான அடிப்படையான சொற்கள் புணர்ந்து வந்த மொழிகளே, தனிமொழிகள் அல்ல.***

***6. சொற்புணர்ச்சிகள்:***

சொல் புணர்ச்சியைப் பொறுத்து பல இலக்கண விதிகளை, தொல்காப்பியம் கூறிய போதிலும், நான்கு

*முக்கியமான விதிகளை, நினைவில் கொள்வது நல்லது. அவை, தொல்காப்பியம், புணரியலில் உள்ள இரண்டு நூற்பாக்கள்:*

*109. ...................*

*மூன்றே திரிபிடன் ஒன்றே இயல்பென*
*ஆங்கந் நான்கே மொழிபுணர் இயல்பே.*

*சொல் புணர்சசியின் இயல்பு நான்கு வகைப்படும். அவற்றில், மூன்று வகைகள் திரிவன, ஒன்று திரியாதது.*

*110. அவைதாம்*

*மெய்பிறி தாதல் மிகுதல் குன்றலென்று*
*இவ்வென மொழிப திரியு மாறே.*

*சொல் புணர்சசியில் திரிபவை: 1. ஒரு மெய்யெழுத்து மற்றொரு மெய்யெழுத்தாக மாறுதல் 2. ஒற்றெழுத்து, சொற்களுக்கு இடையில் தோன்றுதல் 3. ஒரு மெய்யெழுத்து, இடையில் இருந்து மறைதல். மற்றும் எச்சவியலில் உள்ள இரண்டு நூற்பாக்கள்:*

*395. இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்று*
*அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.*

***இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் ஆகிய நான்கே, செய்யுள் சேர்த்தச் சொற்கள். இயற்சொல் என்பது, ஒரு பொருளின் பண்பைக் காரணமாய்க் கொண்டு உருவாக்கப்பட்ட சொல்** (மரம் = ம் + அர் + அம். கொண்டு மூடிய மண்ணில் இருந்து + பிரிந்து வரும் + தன்மை ). **பல சொற்கள் ஒரு பொருளைக் குறிப்பதும், ஒரு சொல், பல பொருளைக் குறிப்பதும் திரிசொல்.** ''அடுக்கல்'', ''ஓங்கல்'' என்பன ''மலை''யைக் குறிக்கும் பல சொற்கள்.. ''உந்தி'' எனும் ஒரு சொல், ''கொப்பூழ்'', ''தேர்த்தட்டு'', ''யாழின் உறுப்பு'' என பல பொருள் தரும்.. **திசைச்சொல் என்பது, செந்தமிழ் நாட்டைச் சுற்றியுள்ள பன்னிரண்டு நிலப்பகுதி மக்களின் வழக்குச் சொற்கள்** (கருப்பட்டி, மக்கா...போன்றவை). **வடசொல் என்பது, தமிழ் ஒலிகளுக்குப் பொருந்துமாறு தமிழ்ப்படுத்தப்பட்டச் சொல்.** (புஷ்பம் – புட்பம்)*

*397. அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை*
*வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்*
*விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்*
*நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்*
*நாட்டல் வலிய என்மனார் புலவர்.*

*வலிக்கும்வழி வலித்தல்: சிலம்பு + அதிகாரம் = சிலப்பதிகாரம்.*
*மெலிக்கும்வழி மெலித்தல்: கருப்பு + சட்டை = கருஞ்சட்டை.*
*விரிக்கும்வழி விரித்தல்: பல் + மாந்தர் = பல்வகை மாந்தர்.*
*தொகுக்கும்வழித் தொகுத்தல்: அறிகின்ற + துயில் = அறிதுயில்.*
*நீட்டல்வழி நீட்டல்: பச்சை + மணி = பாசிமணி.*
*குறுக்கும்வழிக் குறுக்கல்: பாதம் + மலர் = பதமலர்.*

### *7. மெய்யெழுத்துகளின் பொருண்மை:*

*உயிர் மற்றும் உயிர்மெய் எழுத்துகளுக்கு பொருண்மை உண்டென்று சொன்ன தமிழ் இலக்கண நூல்கள் எவையும், தொல்காப்பியம் உட்பட, **மெய் எழுத்துகளுக்கு பகுதிப் பொருண்மையாவது இருக்க வேண்டும் என இயம்பவில்லை.** மெய் எழுத்துகள் தனித்து இயங்காது என்றாலும், அவற்றிற்கு பகுதிப் பொருளாவது இருந்தாக வேண்டும் அல்லவா? சான்றுக்கு, **ஒரு பொருளைக் கொண்ட ஒரு உயிர் நெடில் எழுத்து, வெவ்வேறு மெய் எழுத்துகளுடன் சேர்ந்து வெவ்வேறு பொருளைத் தருகின்றது என்றால், அந்த வெவ்வேறு மெய் எழுத்துகளால்தான், பொருண்மை வேறுபடுகின்றது என கருதலாம் அல்லவா?***

*ஆ = ஆதல், ஆகுதல்.*
*க் + ஆ = கா. இடம் பெயரா மெய்யாதல்.*
*ச் + ஆ = சா. இயக்கமாதல்.*

த் + ஆ = தா. தேகமாதல். பிள்ளையாதல். மகப்பெறுதல்.
ந் + ஆ = நா. நெருக்கமாதல். நாக்கு.
ப் + ஆ = பா. கொள்வதாதல்.
ம் + ஆ = மா. கொண்டு மூடியதாதல். அமைதியாதல். பேசா விலங்கு.
ய் + ஆ = யா. இருத்தல் ஆக்கல்.
வ் + ஆ = வா. புறம் இருந்து உள்ளாதல்.

***கா, சா, தா, நா, பா, மா, யா, வா ஆகிய உயிர்மெய் நெட்டெழுத்து ஒரு மொழிகளில், ஆதல் என்பது பொதுமையாய் இருப்பினும், நிகழ்தல் வெவ்வேறாக உள்ளது. இந்த வேற்றுமைகளுக்கு காரணம், மெய் எழுத்துகளின் இதுவரை வெளிப்படுத்தப்படாத பொருண்மைதான் எனக் கூறலாம்தானே? அப்படி எனில், மெய்யெழுத்துகளின் பொருண்மை என்ன?***

## *8. எழுத்துகளின் தோற்றம்*

*சொற்கள் உருவாக, எழுத்துகள் தேவை அல்லவா? அப்படி என்றால், எழுத்துகள் எப்படி உருவாக்கப்பட்டன? இன்றிருக்கும் ஒலி மற்றும் வரிவடிவ எழுத்துகள் போன்று, முதலில் எழுத்துகள் தோன்றவில்லை. அவை, பல வரலாற்றுப் படிநிலைகளைக் கடந்தே இன்றைய நிலையை வந்தடைந்துள்ளன. ஆதி மனித இனம், அருவி, ஆறு, காற்று, இடி, மழை போன்றவற்றின் ஒலிகளையும், வண்டுகள், விலங்குகள், பறவைகள் போன்றவற்றின் ஒலிகளையும், தம் இனத்திற்குள் பசி, காமம், கோபம், தாகம் ஆகியவற்றிற்காக ஏற்படுத்தும் ஒலிகளையும் பழகி இருக்கும். மனித இனம், இயற்கையின் சீற்றங்களில் இருந்தும், கொடிய, வலிமையான வன விலங்குகளிடம் இருந்தும், தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, கூட்டமாக அல்லது குழுவாக வாழ வேண்டியது அவசியம். அச்சமயம், அவர்கள் தங்களுக்குள் தொடர்பு கொள்ள வேண்டியதும் அவசியம். முதலில், ஒலிகளால் தொடர்பு கொண்டிருப்பர். அது போதாத போது, உடலசைவுகளாலும், பின்னர், கோலால் தரையில் கிழித்த வடிவங்களாலும் தொடர்பு கொண்டிருப்பர்.*

*சமுதாயம் வளர்ந்த பின், பல்வேறு மக்கள் குழுக்கள் ஒன்று சேர்ந்து வாழும் நிலையில், பேச்சு மொழியுடன், பட வடிவங்களும், சித்திரங்களும், சின்னங்களும் (சிந்து சமவெளி நாகரிகத்தில் பயன்படுத்தப்பட்டது போல்) பயன்படுத்தப்பட்டிருக்கும். எகிப்திய நாகரிகமும் பட வடிவங்களைப் பயன்படுத்தி உள்ளது. சமுதாயம் வளர வளர, மனிதரின் கருத்துருவங்கள் நுண்மையானதாயும், சிக்கலானதாயும் மாறுகின்றன. அவற்றை வெளிப்படுத்த, படவடிவங்கள் போதுமானதாக இல்லாமல் போகலாம். சான்றாக, சிந்து சமவெளி நாகரிகத்தில் ''பானை'' எனும் படவடிவம், ''தண்ணீர் இறைப்பதையோ, கொணர்வதையோ, தானியம் சேமிப்பதையோ'' குறிக்கப் பயன்படுத்தலாம். அதையே ''வானத்''தைக் குறிக்க பயன்படுத்த இயலாது. அதைப் போன்று, ''மூடியுடைய பானை'', ''பாதுகாப்ப''தைக் குறிப்பிடலாம். ''மனம்'' என்பதைக் குறிக்க வேண்டும் என்றால், அப்பட வடிவைப் பயன்படுத்த முடியாது. ஆனால், இந்த* ***பருண்மையானப் படவடிவை, அருவமான வரிவடிவமாக்கினால், பல்வேறு கருத்தாங்கங்களை வெளிப்படுத்த முடியும்.*** *(அதற்குள், சமுதாயத்தினர் பலரும், அருவப் பொருண்மைகளை, பருண்மைப் பொருண்மையாக்கிக் கொள்ளும் அறிவுத்திறனை அடைந்திருப்பர்). அப்படித்தான், ''திறந்த பானைப் படவடிவம்'', ''ப'' எனவும், ''மூடியிட்டப் பானைப் படவடிவம்'', ''ம'' எனவும் ஆகி இருக்கும். இப்பொழுது, ''ப்'' அல்லது ''ப'' என்பது ''கொள்ளல்'' எனும் கருத்து எங்கெல்லாம் வருகின்றதோ, அங்கெல்லாம் பயன்படும்; ''ம்'' அல்லது ''ம'' என்பது ''கொண்டு மூடியது'' எனும் கருத்து எங்கெல்லாம் வருகின்றதோ, அங்கெல்லாம் பயன்படும். இப்படியே, பல படவடிவங்கள், வரிவடிவங்களாக மாற்றப்பட்டன எனலாம்.*

## *9. எழுத்துகளின் பரிணாமம்*

*பருண்மையான படவடிவங்கள் அருவமான வரிவடிவங்களாகி உள்ளன எனக் கூறினோம் அல்லவா? எனவே, படவடிவங்கள், வரிவடிவங்களின் அருவப் பொருண்மைகள் கீழ்க்காணும் அட்டவணையில் முன்மொழியப்படுகின்றன.*

| **எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள்** | **எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள்** | **பருண்மைப்பொருண்மைச் சான்றுகள்** |
|---|---|---|
| அ<br>𑀅 | *செங்குத்துக் கோடு, ஒரு மனிதனைக் குறிக்கும். அதற்கு முன் உள்ள, ஒன்றை விடப் பெரியது எனும் குறி, திறந்த உதடுகளைக் குறிக்கும். அதாவது, மனிதன் வாய் திறத்தலைக் குறிக்கும். வாய் திறந்தால் வெளிப்படும் முதல் ஒலி, ''அ''.*<br><br>**உயிர். உயிரான. அகம்.** | *''அ'' எனில், 1. ''முதல்''. மூலாதாரத்தில் இருந்து, காற்றாய் ஒலிப்பதால், 2. ''உயிர்''. ''அ வந்து'', ''அ பிறகு'' என சொல்வதால், 3. அசைச்சொல். உடலுக்கு அண்மையில் ஒலிப்பதால், 4. அண்மை. ''அஅ'' என ஒலிப்பதால், 5. எதிர்மறை மற்றும் 6. அன்மை. ''அ'' என சுட்டுவதால், 7. சுட்டு. ''அ, என்ன சொன்னாய்'' என வியப்பதால், 8. குறிப்பு. ''ஆத'' என்பதில், 9. விளிவிகுதி. ''ஆக'' என்பதில், 10. வினையெச்ச விகுதி. ''செல்வ'' என்பதில், 11. பலவின்பால் விகுதி. உள்ளிருந்து வெளிப்படுவதால், 12. அகம். ''கந்த'' வேல் என்பதில், 13. பெயரெச்ச விகுதி. உடலின் எட்டு இடங்களின் இயைந்த ஒலிப்பால் உருவானதால், 14. எட்டு. உலகின் முதலைக் குறிப்பதால், 15. இறை.* |
| ஆ<br>𑀆 | *செங்குத்துக் கோடு, ஒரு மனிதனைக் குறிக்கும். அதற்கு முன் உள்ள, ஒன்றை விடப் பெரியது எனும் குறி, திறந்த உதடுகளைக் குறிக்கும். அதற்குப் பின் உள்ள செங்குத்துக் கோடு, மீண்டும் அந்த ஒலியின் ஒலிப்பையும் அல்லது ஒலியின் நீட்டத்தையும் குறிக்கும். அகர ஒலியின் அடுத்தடுத்த ஒலிப்பு, ''ஆ''.*<br><br>**ஆ. ஆகும்.** | *ஒலியின் நீட்டிப்பால் குறிப்பது, 1. நீட்டல். ஆட்களை ஏவுவதால், 2. ஆக்கம். ஆக்கத்தைக் குறிக்கும் 3. பசு. ''ஆது'' என்பதில், 4.சேய்மைச் சுட்டு மற்றும் 5. அண்மைச் சுட்டு. ''ஆ'' என்பதில், 6. வலிக் குறிப்பு, 7. வியப்புக் குறிப்பு, 8. இரக்கக் குறிப்பு. ''ஆ'' என்பது முதல் தமிழிசைச் சுரம், 9. குரல். ''அதுவா'' என்பதில், 10. வினா விகுதி. ஆன ஒன்று எனும் பொருளில், 11. ஆன்மா. ஆகா என்பதில், 12. எதிர்மறை வினையெச்ச விகுதி.* |

| எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள் | எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள் | பருண்மைப்பொருண்மைச் சான்றுகள் |
|---|---|---|
| இ<br>∴ | ‘‘அ’’ மற்றும் ‘‘உ’’ க்கு இடையில் இருப்பது. தோற்றத்திற்கும் வெளிப்பாட்டிற்கும் இடையில் இருத்தலாய் இருப்பது.<br>**அகர ஒலி, இதழ்களின் பின்னிழுப்பால் தோன்றுவது, “இ”.**<br><br>**இருத்தல். இரு.** | **“அணி”, “துணி” என்பதில் மிக நெருக்கமாய் இருப்பதனால், 1. இருத்தல். “இது” வில் 2. அண்மைச் சுட்டு. “உண்டி” யில், 3. முன்னிலை வினைவிகுதி. “கேட்டி” யில், 4. முன்னிலை ஏவல் விகுதி. “குறத்தி” யில், 5. பெண்பால் விகுதி. “வில்லி” யில் 6. ஆண்பால் விகுதி. “ஊருணி” யில், 7. பெயர் விகுதி. “எண்ணி” யில், 8. வினையெச்ச விகுதி. “இ...” என்பதில், 9. இழிவுக் குறிப்பு. 10. “நாஇ” என்பதில், யகர ஒற்றின் பதிலி. “ஐகார” 11. உயிரிணையில் (அ + இ = ஐ) ஒன்று.** |
| ஈ<br>∵ | இகர ஒலியின் நீட்டிப்பு. இருத்தலில் இருந்து மற்றோர் இருப்பு.<br><br>**தருதல். தா.** | **“ஈ” என்றால் 1. தா, கொடு. தேனைத் தரும் ஈ, 2. தேனீ. “ஈ” என்பது, இரண்டாவது தமிழிசைச் சுரம், 3. துத்தம். வில்லில் இருந்து தருதலால், 4. அம்பு. சிறிய இறகுகளுடன் தேனீயைப் போல் பறப்பதால், 5. வண்டு மற்றும் 6. ஈ. விடத்தைத் தருவதால், 7. பாம்பு. “ஈ’ என இறைஞ்சுவதால், 8. இரத்தல். செல்வம் தருவதால், 9. இலக்குமி. கல்வி தருவதால், 10. சரசுவதி. வீரம் தருவதால், 11. பார்வதி. “நின்றீ பெரும” என்பதில், “ஈ” 12. முன்னிலை அசைச் சொல்.** |

| எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள் | எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள் | பருண்மைப்பொருண்மைச் சான்றுகள் |
|---|---|---|
| உ<br> | செங்குத்துக் கோடு மனிதனைக் குறிக்கும். முன் உள்ள படுக்கைக் கோடு வெளிப்பாட்டைக் குறிக்கும். அகர ஒலி, இதழ்கள் குவிவதால் தோன்றுவது, ''உ''.<br><br>**புறம். வெளிப்பாடு.** | ''உது'' என்பதில், 1. முன்னிலை சுட்டு. அகஉ -› அகவு என்பதில், அகம் 2. வெளிப்படல் மற்றும் 3. புறம்.. ''செய்து'' என்பதில், 4. வினையெச்ச விகுதி. ''உண்கு'' என்பதில், 5. தன்மை ஒருமை வினை விகுதி. ''உ'' எனும் ஒலிக்குறிப்பு, 6. கோபம். ஏவல் வெளிப்படுவதால், 7. கட்டளை. ''உ'' எனும் ஒலிக்குறிப்பால், 8. ஒப்புதல். இடம் பொறுத்து புறம், 9. மேன்மை, 10. கீழ்மை, 11. உள்மை. |
| ஊ<br> | ''உ'' விற்கு மேலுள்ள கோடு, ''உ'' வின் ஒலி நீட்டிப்பைக் குறிக்கும்.<br><br>**நீட்டம். வெளிப்படுத்து.** | உடல் வளர்ந்து விரிவதற்கான 1. உணவு. உடலில் விரிந்து வளரும் 2. தசை அல்லது 3. ஊண். ''ஊ'' எனும் 4. வலிக்குறிப்பு. ''ஊ'' என்பது மூன்றாம் தமிழிசைச் சுரம், 5. கைக்கிளை. செய்யூ என்பதில் போல், 6. வினையெச்ச விகுதி. ஊசல் (நீண்ட இயக்கமாதல்) என்பதில் போல், 7. நீட்டம் , ஊது (விரிந்த தேகமாய் வெளிப்படல்) என்பதில் போல், 8. விரிதல். |
| எ<br> | இகரமும், அகரமும் சேரந்ததே எகரம். இருத்தல் உயிர்த்தல். எழுதலை, உயர்தலைக் குறிக்கும்.<br><br>**எழுதல். உயர்.** | ''எவன்'' (எ + அன் = எவன்) என்பதில் வரும் 1. வினாவின் முதல் எழுத்து. ''எழுத்து'' என்பதில் வரும், 2. எழுதல் மற்றும் 3. உயர்தல். கூரையின் உயரத்திற்கு ஏறிக் கொள்ளும் 4. கோழி. |
| ஏ | எகரத்தின் இரட்டிப்பே ஏகாரம்.<br><br>**மிகை உயரம். மேலும் உயர்.** | ''ஏது'' என்பதில் போல், 1. வினாவின் முதல் எழுத்து. ''ஏவு'' (மிக உயர்ந்து வெளிப்படுவது) என்பதில் போல், 2. மிகு உயர்வு மற்றும் 3. அம்பு. ''ஏ'' என்பது 4. விளிச்சொல். ''ஏ'' என்பது 5. அடக்கும் குறிப்பு. ''ஏ'' என்பது நான்காம் தமிழிசைச் சுரம், 6. உழை. |

| எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள் | எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள் | பருண்மைப்பொருண்மைச் சான்றுகள் |
|---|---|---|
| ஐ  | அகரமும் இகரமும் இணைந்ததே ஐகாரம். உயிர் இருத்தல். வியப்பு.<br><br>**வியப்பு. உயிராய் இரு.** | உயிரின் இருப்பால் (அ + இ = ஐ), 1. வியப்பு. தொல்லை என்பதில் போல், 2. பண்புப்பெயர் விகுதி. ''அதனை'' என்பதில் போல், 3. வேற்றுமை உருபு. ''சென்றனை'' என்பதில் போல், 4. முன்னிலை ஒருமை விகுதி. வியப்பால், 5. அழகு, 6. மென்மை, 7. நுண்மை. உயிராய் இருப்பவன் எனும் பொருளில், 8. கணவன். ''ஐ'' என்பது ஐந்தாம் தமிழிசைச் சுரம், 9. இளி. வியப்புக்கு உரியவன், 10. ஆசான், 11. அரசன், 12. தந்தை, 13. தலைவன். வியப்புக்கு உரியன (சிறியது), 14. கடுகு, இனிக்கும் பொருள், 15. சருக்கரை, 16. ஐயம். உயிர் உடலாய் இருத்தல் பூதங்களால், 17. ஐந்து. அகரமும் இகரமும் இணைந்தே ஐகாரம் ஆனதால் 18. இணைதல். |
| ஒ  | கீழ்ப் படுக்கைக் கோடு அகரம் ஆகலாம். அகரத்தின் மேல் உள்ளது உகரமாகலாம். அகரமும் உகரமும் சேரந்ததே ஒகரம். அகமும் புறமும் சேர்ந்த ஒருமை. ஒன்று.<br><br>**ஒன்று. ஒன்றாகு.** | ஒத்தல் (ஒ + தல் = ஒத்தல்) ஒருமை போன்ற தேகத்தால், 1. ஒப்புமை, 2. சமமாதல். ''ஒன்றி'' (ஒன் + தி = ஒன்றி), 3. ஒற்றுமை, 4. ஒன்று, 5. ஒருமை. அகம் புறமாய் விரிந்து முழுமையாதல், 6. மயில். |
| ஓ  | இரண்டு ''ஒ'' வடிவங்கள், ஒன்றின் மேல் ஒன்றாக உள்ளன. ''ஒ'' ஒலியின் நீட்டிப்பு. உயர்ந்து விரிதல். முழுமையாதல். மகர ஒற்று சேர்ந்து, ஓங்காரம் ஆகும்.<br><br>**உயர்ந்து விரிதல், உயர்ந்து விரி.** | ''ஓஓ நல்லன்'' என்பதால், 1. உயர்வுக்குறிப்பு. ''ஓஓ கொடியன்'' என்பதால், 2. இழிவுக்குறிப்பு. ''ஓஓ மறைந்தாரா?'' என்பதால், 3. கழிவிரக்கக்குறிப்பு. ''ஓ நல்லது'' என்பதால், 4. மகிழ்ச்சிக்குறிப்பு. ''ஓ நிலவு'' என்பதால், 5. வியப்புக்குறிப்பு. ''ஓ பையா'' என்பதால், 6. விளித்தல் ஒலிக்குறிப்பு. ஒன்றும் ஒன்றும் இணைவதால், 7. புணர்ச்சி. ''ஓ'' என்பது ஆறாம் தமிழிசைச் சுரம், 8. விளரி. |

| எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள் | எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள் | பருண்மைப்பொருண்மைச் சான்றுகள் |
|---|---|---|
| ஔ  | அகரமும் ஊகாரமும் சேரந்ததே ஔ என்று ஆகி உள்ளது. அதனால்தான், ''ஊ'' வில் உள்ள ''ள'', ஔகாரத்திலும் உள்ளது போலும். ஆனால், தொல்காப்பியர், அகரமும் உகரமும் சேர்ந்தே ஔகாரம் என்பார். | 1. ஔவை (ஔ + ஐ = ஔவை), நீண்டு விரியும் பண்பு என்பதால், 1. அகம் நீண்டு விரிதல். ''ஔ'' எனும் 2. வலிக்குறிப்பு. ''ஔ'' என்பது 3. மந்திரம். ''ஔ'' என்பது ஏழாம் தமிழிசைச் சுரம், 4. தாரம். |
| ஃ | ஆய்தம் = ஆஇ + த் + அம். ஆகி + தேகம் + தன்மை. தேகத்தன்மையானது. உயிர் + மெய் சுருக்கம். செயற்கையாய் உருவாக்கப்பட்ட எழுத்து.<br><br>**சுருக்கம். சுருக்கு.** | 1.சுருக்கம். 2. மெய் ஒற்றுகளை உருவாக்கும் எழுத்து. க + ஃ =க். 3. மந்திர ஒலி. |
| க + ஃ = க்  | மூன்று பரிமாண அமர்ந்த மெய்யின் இரண்டு பரிமாண வரிவடிவம். அமர்ந்த மெய். அசையாமை. வலது, இடது இணைந்த ஒன்று. தனிப்பொருள். உள் மெய் அசையாதது.<br><br>**அமர்ந்த மெய், உள் மெய்.** | அகம் = அ + க் + அம் = உள் + மெய் + தன்மை. ''க்'' என்பது 1. மெய். 2. உண்மை.<br>கண் = க் + அண். (மெய்) + மிக நெருங்கிய தன்மை. உடலுக்கு மிக நெருங்கிய உறுப்பு, கண். ''க்'' என்பது 3. உடல்.<br>கம் = க் + அம். மெய் + தன்மை. சிறிய தன்மை. உள் மெய் சிறியது.<br>கரம் = க் + அர் + அம். மெய் + பிரியும் + தன்மை. மெய் பிரிந்து கை ஆகின்றது.<br>கல் = க் + அல். மெய் + அதிர்வினமை. பொருள் அசையாமை. ''க்'' என்பது 4. பொருள்.<br>களம் = க் + அள் + அம். மெய் + மிகை + தன்மை. மெய்யின் மிகைத் தன்மை. போர்க்களத்தில், மெய்கள் மிகும். ''க்'' என்பது உடல். |

| எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள் | எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள் | பருண்மைப்பொருண்மைச் சான்றுகள் |
|---|---|---|
| ன் + க் = ங் | ‘க்’ என்பதற்கு மிக நெருங்கிய (ன்) எழுத்து, ‘ங்’. மெய்யினுக்கு, பொருளுக்கு நெருங்கியது, இடம், வெளி.<br><br>**இடம்.** | அங்கு <- அங்உ = அ + ங் + உ. அந்த + (இடம்) + வெளிப்பாடு. 1. இடம்.<br>“அ” எனும் உயிர்க்கு “நெருங்கிய மெய்யின் வெளிப்பாடு”, 2. மனம்.<br>“ங்” என்பது, “க்” எனும் எழுத்திற்கு நெருக்கமாக, மேல் அண்ணத்தில் இருந்து ஒலிப்பதால், 3. “க்” – இன் இன எழுத்து. கம் + கு = கங்கு. மெய்யின் குறைந்த தன்மை + மெய்யின் வெளிப்பாடு. நெருப்பால், ஒரு பொருளின் தன்மை குறைந்து வெளிப்படும். ச் + அம் + கு = சங்கு. இயக்கம் + தன்மை / சத்தம் + தன்மை / சேர்ந்த + தன்மை + மெய்யின் வெளிப்பாடு. சத்தம் தரும் மெய்யின் வெளிப்பாடு, சங்கு. 4. சத்தம். |
| ச + ஃ = ச்<br> | அமர்ந்த மெய்யின் இயக்கம். இயக்கம் தொடர்புடைய சத்தம். இயக்கத்தால் சேர்தல், இணைதல்.<br><br>**இயங்கு மெய்.** | ச் + அண் = சண். இயக்கம் + மிகை நெருக்கம். 1. இயக்கம்.<br>ச் + அம் = சம். (இயக்கத்தால்) சேர்ந்த + தன்மை. 2. சேர்தல்.<br>ச் + அர் + அம் = சரம். இயக்கம் + பிரிந்த + தன்மை. இயக்கம்.<br>ச் + அத்(து) + அம் = இயக்கம் + அதன் + தன்மை. 3. சத்தம்.<br>ச் + அல் + அம். இயக்கம் + அதிர்வு + தன்மை. இயக்கம். |
| ன் + ச் = ஞ் | ‘ச்’ என்பதற்கு மிக நெருங்கிய (ன்) எழுத்து, ‘ஞ்’. நுண் இயக்கம். நுண் சத்தம்.<br><br>**உள் இயக்கம்.** | ஞானம் = ஞ் + ஆன் + அம். நுண் இயக்கம் / நுண் சத்தம் + ஆன + தன்மை. மனமான தன்மை. “ஞ்” என்றால், 1. மனம்.<br>ஞமலி = ஞ் + அம் + அல் + இ. நுண் இயக்கம் + தன்மை + அதிர்தல் + இருத்தல். எனவே, “ஞ்” என்றால், 2. நுண் இயக்கம்.<br>ஞாலம் = ஞ் + ஆல் + அம். நுண்ணிய சத்தம் + வட்டமாகும் + தன்மையால், 3. நுண் சத்தம். |

| எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள் | எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள் | பருண்மைப்பொருண்மைச் சான்றுகள் |
|---|---|---|
| ட + ஃ = ட்<br> | ஒன்றை ஒட்டித் தொடர்தல். தொடர்ச்சி. அடுத்து இருத்தல்.<br><br>**ஒட்டித்தொடர்தல்.** | அட் + அம் = அடம். அதை ஒட்டித் தொடரும் + தன்மை. 1. தொடர்ச்சி.<br>அட் + இ = அடி. அதை / ஒன்றை ஒட்டித் தொடர்ந்து + இருத்தல். தொடர்ச்சி.<br>அட் + ஐ = அடை. அந்த ஒட்டித் தொடரும் + பண்பு. தொடர்ச்சி.<br>த் + அட் + உ = தடு. தேகம் + ஒட்டித் தொடர்ந்து + வெளிப்படல். 2.<br>அடுத்து இருத்தல். |
| ண + ஃ = ண்<br> | ஒவ்வொரு சுழியும் ஒரு தனியிருப்பு. ஒன்றோடு ஒன்று நெருங்கி இருத்தல் (ன்), நெருக்கத்தைக் குறிக்கும். மூன்றும் நெருங்கி இருப்பின், மிகை நெருக்கம் எனலாம்.<br><br>**மிகை நெருக்கம்.** | அ + ண் = அண். அது + மிக நெருக்கம். ''ண்'' எனில், ''மிகை நெருக்கம்''.<br>க் + அண் = கண். மெய் + மிக நெருக்கம். உடலுக்கு மிக நெருக்கமாய் இருப்பது, கண்.<br>த் + அண் + மை = தண்மை. தேகம் + மிக நெருக்கம் + பண்பு விகுதி. உடலுக்கு மிக நெருக்கமாய் இருக்கும் தன்மை. |
| த + ஃ = த்<br> | ''க்'' அமர்ந்த மெய். ''ச்'' இயங்கு மெய். ''த்'' நின்ற தேகம். வடிவம்.<br><br>**நின்ற தேகம், உயர்ச்சி.** | த் + அன் = தன். தேகத்தின். ''அதன்'' எனும் பொருள் கொண்ட ''அன்'' எனும் சாரியையால், ''த்'' என்பது, தேகத்தைக் குறிக்கும்.<br>த் + அம் = தம். தேகங்களின். ''அவற்றின்'' எனும் பொருள் கொண்ட ''அம்'' எனும் சாரியையால், ''த்'' எனில் தேகங்களைக் குறிக்கும்.<br>அ + து = அது. அந்த + வடிவ வெளிப்பாடு. ''த்'' எனில் வடிவம். |
| ன் +த் = ந்<br> | ஒன்றை நெருங்கியும் நெருங்காமல் இருத்தல். தான் எனும் முனைப்பு, அகந்தை. தனி இருப்பு இன்மை. சார்ந்த இருப்பு. உடல் நெருக்கம்.<br><br>**உடல் நெருக்கம்.** | ந் + ஆன் = நான். தேக நெருக்கம் + ஆனவன். தன் உடலோடு தன்னை அடையாளப் படுத்திக் கொள்பவன். ''ந்'' எனில் தேக நெருக்கம்.<br>ந் + அல் = நல். தேக நெருக்கம் + (தொழிற்பெயர் விகுதி) ஆதல். நல் + அம் = நலம். தேக நெருக்கம் ஆன தன்மை. |

| எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள் | எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள் | பருண்மைப்பொருண்மைச் சான்றுகள் |
|---|---|---|
| ப + ் = ப்<br> | மூன்று பரிமாண கொள்ளும் பாத்திரத்தின் இரண்டு பரிமாண வரி வடிவம். கொள்ளல். வெளி. முழுமை.<br><br>**கொள்ளல். முழுமை.** | ப் + அண் = பண். கொண்டதன் + மிகை நெருக்கம். “ப்” எனில் 1. கொள்ளல்.<br>ப் + அக(ம்) + அன் = பகவன். வெளியை + அகமாய்க் + கொண்டவன். “ப்” எனில் 2. வெளி, 3. முழுமை.<br>ப் + அல் = பல். கொள்ளும் + தொழிற்பெயர் விகுதி. கொள்ளல். |
| ன் + ப் = ம்<br> | மூன்று பரிமாண கொண்டு மூடியப் பாத்திரத்தின் இரண்டு பரிமாண வரி வடிவம். கொண்டு மூடல்.<br><br>**கொண்டு மூடல்.** | ம் + அண் = மண். கொண்டு மூடியது + அதன் மிகை நெருக்கம். கொண்டு மூடி மிக நெருக்கமானது, நிலம். “ம்” எனில் “கொண்டு மூடல்”.<br>ம் + அன் + அம் = மனம். கொண்டு மூடியது + அதன் + தன்மை.<br>ம் + அர் + அம் = மரம். கொண்டு மூடியது + பிரி + தன்மை. கொண்டு மூடிய மண்ணைப் பிரிந்து வரும் தன்மையது, மரம். எனவே, மரம் என்பது அதன் இயல்பைக் குறிக்கும் காரணப்பெயர். இடுகுறிப் பெயர் அன்று. தமிழின் எல்லாச் சொற்களும் பொருள் குறித்தனவே. சில சொற்களின் பொருட் காரணம் விழிப்பத் (பார்த்தவுடனே) தோன்றா. பகுத்தாய்ந்தால், புலனாகும். |
| ய + ் = ய்<br> | கொள்வதில் இருத்தல். எனவே, “இருத்தல்” எனும் “இ”கரத்திற்கு “யகரம்” பதிலியாக உள்ளது. மேலும், இ + அ = ய என்றாகும். ய – அ = இ என்றே ஆகும். இருத்தல். அசையாமை.<br><br>**இருத்தல் உயிர்ப்புடன்.** | ய்(இ) + அம் + அன் = யமன். இருத்தல் + தன்மை + ஆண்பால் விகுதி. நிலையாய் இருப்பவன். “ய்” எனில், இருத்தல்.<br>ய் + ஆது = யாது. இருத்தல் + அது என்ன?.<br>ய் + ஆக் + அம் = யாகம். இருந்து + ஆகும் + தன்மை.<br>ய் + ஓக் + அம். இருந்து + உயர்ந்து விரியும் + தன்மை. உடல் அசையாமல் இருக்க, மனம் உயர்ந்து விரிவடைதல். “ய்” எனில், அசையாமை. |

| எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள் | எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள் | பருண்மைப்பொருண்மைச் சான்றுகள் |
|---|---|---|
| ர + ஃ = ர்<br> | அரிவாள் அறுக்கும், பிரிக்கும். பிரித்தல். பிரிதல். பலர்பால் விகுதி.<br><br>**பிரித்தல், பிரிதல், பலர்பால்.** | அர் + அம் = அரம். அந்த அறுக்கும், பிரிக்கும் + தன்மை. ''ர்'' எனில், 1. பிரித்தல்.<br>அர் + அன் = அரன். அந்த பிரிந்து + ஆண்பால் விகுதி. பிரிந்து இருப்பவன். 2. பிரிதல்.<br>அ + அர் = அவர். அந்த + பலர்பால் விகுதி. 3. பலர்பால் விகுதி. |
| ல + ஃ = ல்<br> | மேலும் கீழும் ஆதல். அதிர்வு. அலைவரிசை.<br><br>**மேலும் கீழும்.** | அ + ல் = அல். அந்த அதிர்வு. ''ல்'' எனில் 1. அதிர்வு.<br>எ + ல் = உயரத்தில் + மேலும் கீழுமாதல். சூரியன். ''ல்'' எனில் 2. மேலும் கீழுமாதல்.<br>அ + ல் + ஐ = அலை. அந்த + மேலும் கீழுமாகும் + தன்மை. ''ல்'' எனில், 3. அலைவரிசை.<br>ம் + அலை = மலை. மண்ணில் + அலைவரிசை.<br>த் + அலை = தலை. தேகத்தில் அலைவரிசை. |
| வ + ஃ = வ்<br> | உ + அ = வ. வ – அ = வ். வ – அ = உ. எனவே, வ் = உ. புறம்.<br><br>**புறமும் அகமும், முழுமை.** | வ் + இ = வி. புறம் + இருத்தல். ''வ்'' எனில், புறம்.<br>வ் + இண் = விண். புறத்தில் + இருக்கும் + மிகை நெருக்கம்.<br>வ் + அல் = வல். புறத்தில் + அதிர்தல்.<br>வ் + இ + ல் = வில். புறத்தில் + இருந்து + மேலும் கீழுமாதல்.<br>வ் + அசை = வசை. புறத்து + ஒலித்தல்.<br>வ் + அலை = வலை. புறத்தில் + அலைபோல் மேலும் கீழுமாதல். |

| எழுத்து / சிந்து /பிராமிக் குறிகள் / படங்கள் | எழுத்து விளக்கம் மற்றும் அடிப்படை அருவப்பொருண்மைகள் | பருண்மைப்பொருண்மைச் சான்றுகள் |
|---|---|---|
| ழ + ் = ழ் | கொண்டு மூடியதில் ஆழ்தல். ஆழம். கீழ்.<br><br>**ஆழம், கீழ்மை.** | ஆ + ழ் + இ = ஆழி. ஆகல் + ஆழம் + இருத்தல். ஆழம் ஆகி இருப்பது, ஆழி, கடல். ''ழ்'' எனில், 1. ஆழம்.<br>ஊ + ழ் = ஊழ். நீண்டு விரிந்து + ஆழ்தல். 2. ஆழ்தல்.<br>ஏ + ழ் + ஐ = ஏழை. மிகவும் கீழ் (உள்ள) பண்பு. 3. கீழ்.<br>ம் + ஏ + ழ் + இ = மேழி. மண்ணை உயர்த்தியும் ஆழ்த்தியும் இருத்துவது, ஏர். |
| ள + ் = ள் | மிகை. பெண்பால் விகுதி.<br><br>**மிகை, பெண்பால்.** | அள் + அம் = அளம். அந்த மிகை + தன்மை. ''ள்'' எனில், 1. மிகை.<br>அ + அள் = அவள். அந்த அள். 2. பெண்பால் விகுதி.<br>குறு + அள் = குறள். குறுகியதில் மிகை.<br>க் + அள் + அம் = களம். மெய் + மிகை + தன்மை. |
| ற + ் = ற் | அறுதல். அறுத்தல்.<br><br>**அறுத்தல், அறுதல்.** | அற் + அம் = அறம். அந்த அறும் + தன்மை. ''ற்'' எனில், 1. அறுதல். தான், தனதிலிருந்து அறுதலே அறம்.<br>அற் + ஐ = அறை. அறுத்த + பண்பு. 2. அறுத்தல்.<br>இற் + ஐ = இறை. இருக்கும் அறுந்து + தன்மை. தனித்திருப்பது. |
| ன + ் = ன் | சுழி என்பது தனி இருப்பு. சுழிகள், ஒன்றோடு ஒன்று நெருங்கி இருத்தல், நெருக்கத்தைக் குறிக்கும். ஆண்பால்.<br><br>**நெருக்கம், ஆண்பால்** | இன் + அம் = இனம். இருத்தல் நெருக்கம் + தன்மை. ''ன்'' எனில், 1. நெருக்கம்.<br>அ + அன் = அவன். அந்த அன். 2. ஆண்பால் விகுதி. |

*10. பகுப்பாக்கமும் சொல்லாக்கமும்*

*இவற்றின் அடிப்படையில், ஏற்கனவே உள்ள சொற்களின் முதன்மைக் காரணப் பொருளை அறியலாம். புதிய சொற்களை உருவாக்கவும், இவற்றைப் பயன்படுத்தலாம்.*

*மேற்கூறியவற்றின் அடிப்படையில், இத்தமிழ் சித்திர அகராதி ஆக்கப்பட்டுள்ளது. தமிழுலகம் பயன் பெறுகவே!*

*இந்த அகராதியில் உள்ள எல்லாச் சொற்களும், ''இன்று ஒரு சொல்'' எனும் ''வாட்ஸ் அப்'' தளத்தில் பதிவிட்டவை. ஏராளமான அறிஞர்களும், நண்பர்களும் அவ்வப்பொழுது பாராட்டுகளையும், விமர்சனங்களையும் பொழிந்து செம்மைப்படுத்தி உள்ளனர். அவர் யாவர்க்கும் நன்றி.*

**சொல்லாக்கியன், கனடா.**

## அகடுரி

**அகடுரி = அகடு + உரி.**

விரிவாகு + தோலை நீக்கு. தன்னுடைய உடலை விரிவாக்கி, மேல் தோலை நீக்குவது. பாம்பு.





## அகத்தன்

**அகத்தன் = அக(ம்) + அத்(து) + அன்.**

உள் / மன / வீடு + 'உடைய' எனும் பொருளுடைய சாரியை + ஆண்பால் விகுதி.
அகத்தன் = உள்ளிருப்பவன். மனமுடையவன். வீடுடையவன்.

## அகத்தி

**அகத்தி = அக(ம்) + தி.**

உள் + தேகம் இருத்தல். தேக உள் அவயங்களின் நலம் காக்கும்.
அகத்திக்கீரை மூளை, இதயம், வயிறு, குடல் போன்ற உடலின் உள் அவயங்களைக் காக்கும்.





## அகத்தியம்

**அகத்தியம் = அகம் + அத்து + இயம்.**

அகம் / உள் + 'அதன்' எனும் பொருள் கொண்ட அத்துச் சாரியை + இயம்.
இயம் = இ + அம். இருத்தல் தன்மை. இயல்பு.
அகத்தியம் = அகத்தின் இயல்பு. உள்ளியல்பு.

## அகமரித்தல்



**அகமரித்தல் = அகம் + மரித்தல்.**
அகம் = உள். மரித்தல் = மரி (த்) + தல். மரி = ம் + அரி. உயிர் + பிரிந்து இருத்தல். தல் = த் + அல். தேகம் + இன்மை.
மரித்தல் = உயிர் பிரிந்து உடல் இன்மை. இறத்தல்.
அகமரித்தல் = உள் + இறத்தல்.
வயிற்றுக்குள்ளேயே இறத்தல்.



## அகமனம்

**அகமனம் = அக(ம்) + மனம்.**
உள் மனம். *(Inner Self).*
அகம் என்றால், மனம், உள், வீடு என பல பொருள்கள் உண்டு.
அக(ம்) + அகம் = அகவகம் (உள்மனம்) எனவும் ஒரு புதியச் சொல்லை உருவாக்கலாம். அது, "உள்வீடு" எனவும் பொருள் கொள்ளும்.

## அகராதி

**அகராதி = அகரம் + ஆதி.**
அகரம் = அ + கரம்
கரம் = கர் + அம். மெய்பிரிதல் + தன்மை.
ஆதி = ஆத் + இ. ஆகி + இருத்தல்.
அகராதி = "அ" எனும் எழுத்து ஒலியின் திரியும் தன்மையால் (இ, உ) , திரிந்த எழுத்துக்கள் இணையும் தன்மையால் (எ, ஒ, ஐ, ஔ), என பிற எல்லா உயிர் எழுத்துகளும், மெய் ஒலியுடன் பிணைந்து ஆய்தமும், மெய் ஒலிகளுடன் இணைந்து உயிர்மெய் எழுத்துக்களும், இவை எல்லாவற்றின் சேர்க்கையால், சொற்களும் ஆகி இருக்கின்றன. எனவே, அகரமே எல்லா எழுத்துக்களின், சொற்களின் மூலம்.
அகரம் ஆத்ததே, தமிழும் மொழியும்.



## அகவர்

***1. அகவர் = அக(ம்) + அர்.***
*உள் + பலர்பால் விகுதி. உள் இருப்பவர். உள் நாட்டினர்.*
*“கானவர் மருதம் பாட அகவர்*
*நீல் நிற முல்லை பல் திணை நுவல”.*
*(பொருநராற்றுப்படை 220, 221)*
*முல்லைநிலத்தார் மருதப்பண் பாட, நாடுவாழ் மருதநிலத்தார் நீலநிற முல்லை நிலத்தின் பல இயல்புகளை உரைத்தனர்.*

*2. அகவர் = அக(வு) + அர். பாடு + பலர்பால் விகுதி. பாடுபவர்.*
*“நாள் ஈண்டிய நல் அகவர்க்கு*
*தேரொடு மா சிதறி”*
*(மதுரைக் காஞ்சி 223, 224)*
*“விடியலில் வந்த நல்ல பாடகர்களுக்கு, தேருடன் குதிரைகளையும் கொடுத்து”...*





## அகவாட்டி

*அகவாட்டி = அக(ம்) + ஆட்டி.*
*வீடு + ஆட்டுபவள் / ஆள்பவள். மனையாட்டி. மனைவி.*
*அகத்தை / மனையை / வீட்டை ஆள்பவள்.*

## அகவியம்

***அகவியம் = அக(ம்) + இயம்.***
*அகம் = மனம் / உளம் / உண்மை (உள் + மை).*
*இயம் = இ + அம்.*
*இ = இருத்தல்.*
*அம் = பண்பு விகுதி. தன்மை.*
*இயம் = இருக்கும் தன்மை.*
*அகவியம் = மனம் இருக்கும் தன்மை. மனத்தின் தன்மை.*
*அகவு + இயம் = அகவியம் என்றும் ஆகும். அது, மயிலின் “அகவும் தன்மை” எனவும் பொருள்படும்.*
*பொருள் குழப்பம் தவிர்க்க வேண்டி, “அத்து” எனும் சாரியையுடன், “அகத்தியம்” எனும் சொல் உருவாக்கப்பட்டிருக்கலாம்.*
*அகத்தியம் = அக(ம்) + அத்து + இயம். அகம் + அதன் + இருக்கும் தன்மை.*
*அகத்தின் இயல்பு.*



## அகவியல்

**அகவியல் = அகம் + இயல்.**
அகம் = மனம் / வீடு / உண்மை (உள் + மை)
இயல் = இ + அல். இருத்தல் + தொழிற்பெயர் விகுதி. இருந்து இயங்கல். இருப்பின் இயக்கம்.
அகவியல் = அகம் (எனும்) இருப்பின் இயக்கம். மன இயக்கம் / உள இயக்கம். மனம், உளம் இயங்குவது பற்றிய அறிவு.





## அகிரகாரம்

**அகிரகாரம் = அ + கிரகம் + ஆரம்.**
குடும்பமற்றவர்கள் கோயிலைச் சுற்றிய வீடுகளில் வாழ்ந்ததாய் கருத இடமுண்டு.

## அகிலம்

**அகிலம் = அகில் + அம்.**
நறுமணம் + தன்மை.
வாசம் நிறைந்த உலகம். காற்று உள்ள நிலம். வாசத்தால் உலகம் இயங்குகிறது.





## அக்கசாலை

**அக்கசாலை = அக்கம் + சாலை.**
அக்கம் = அ + கம். அந்த + மெய்யின் தன்மை. அந்த பொருளின் தன்மை. உடல் (வளர்க்கும்) தன்மை கொண்டது, தானியம்.
சாலை = சால் + ஐ. பெரிய + தன்மை. அகன்ற இடம்.
அக்கசாலை = தானியங்கள் வைக்கப்படும் அகன்ற இடம். பண்டமாற்றுச் சாலை.
அதுவே, பிற்காலத்தில், நாணயச்சாலையாக மாறி உள்ளது.
சொல்லும் சொல்லும் வரலாறு!

## அக்காரவடிசில்



***அக்காரவடிசில் = அ + காரம் + அடி + சில்.***
*அந்த + சுவை + ஒட்டி இருக்கும் + சிறுமை. இனிப்புச் சுவையுடன் (ஒன்றுடன் ஒன்று) சிறியனவாய் ஒட்டியிருப்பது. இனிப்புப் பொங்கல்.*



## அக்குள்

***அக்குள் = அக்கு + உள்.***
*எலும்பு + உள். தோள் மூட்டு எலும்புக்கும், மார்பு எலும்புக்கும் இடைப்பட்ட உள்பகுதி.*

## அங்கசாலை




***அங்கசாலை = அங்கம் + சாலை.***
*உடல் + அகன்ற இடம். உடற்பயிற்சி சாலை. நடனசாலை. அழகு நிலையம்.*



## அங்கப்பால்

***அங்கப்பால் = அம் + கம் + பால்.***
*அந்த / அழகு + மெய்யின் தன்மை + பால். அந்த / அழகிய மெய்யின் பால். தாய்ப்பால்.*

## அங்கமணி



***அங்கமணி = அங்கம் + மணி.***
*உடல் + மணிகள் பொருத்தப்பட்ட அணிகள். உடலில் அணியும் மணிகள்.*
*சிலம்பு, மேகலை, வளை, குண்டலம், ஆரம், சுட்டி போன்று, பெற்றோர், உற்றோர், எடுப்போர் பெண்ணுக்கு தரும் அணிகலன்கள். பொற் சீர்.*



## அஞ்சனம்

***1. அஞ்சனம் = அம் + சன்(ல்) + அம்.***
*அழகிய + இயக்கம் + தன்மை. மைதீட்டிய இமைகளின் இடையில், கண்கள் இயங்குவது அழகு. கண்மை.*
*"சிறு தொழு மகளிர் அஞ்சனம் பெய்யும்". (ஐங்குறுநூறு 16-2)*
*சிறிய ஏவல் பெண்கள் கண்மையை வைப்பர்.*
*2. அஞ்சனம் = அஞ்சன்(ல்) + அம். அஞ்சும் தன்மை. இருள். குற்றம். வலிய, கரிய மேற்கு திசை யானை.*
*"காள நிறனு மையுந் திசைகளின்*
*யானையி லொன்று மஞ்சன மாகும்".*
*(பிங்கல நிகண்டு - ஒருசொல் பல்பொருள் - 14)*

## அடவி



***அடவி = அடை + பி.***
*நெருக்கமாய் + கொண்டு இருத்தல். நெருக்கமாய் கொண்டிருத்தல். (அருவப் பொருண்மை)*
*அடர்த்தி, சோலை, திரள், கூட்டம், தொகுதி. (பருண்மைப் பொருண்மைகள்)*
*"அடவிக் கானகத் தாயிழை தன்னை (சிலப்.14, 54)".*
*"அடர்ந்த கானகத்தில் அணிகலன்கள் அணிந்தவளை".*



## அணுக்கன்

***அணுக்கன் = அணு + கன்.***
*மிகவும் நெருக்கமானதன் வெளிப்பாடு / சிறிய + மெய்யினன்.*
*கோயிலை, பெரியது என்ற இராஜராஜன், தன்னை, சிறியவன் (அணுக்கன்) என்றே அழைத்துக் கொண்டான். "அணுக்கன்", எனும் சொல், இறைவனுக்கு "மிகவும் நெருக்கமானவன்" எனினும் பொருந்தும்.*
*தன்னைச் சிறியதாக்கி, இறைமையுடன் நெருக்கமாக்குவதன் வழி, ஒருமைநிலை வாய்க்கின்றதா?*

## அணுக்கி



**அணுக்கி = அணு + கி.**
அணு = அண் + உ. மிகநெருக்கம் + புறத்தில்.
கி = க் + இ. மெய்யாய் + பெண்பால் விகுதி. பெண்.
அணுக்கி = மிக நெருக்கமாய் புறத்தில் இருப்பவள். நண்பி. காதலி. செயலி. குறிப்புணர்ந்து செயல்படுபவள். நம்பிக்கைக்கு பாத்திரமானவள். ஒற்று.
இராஜேந்திரனுக்கு அணுக்கியாய் இருந்தவர், பரவை நங்கையார்.



## அண்டர்

**1. அண்டர் = அள் + த் + அர்.**
மிகை + தேகம் + பலர்பால் விகுதி. மிகையான தேகத்தைக் கொண்டவர்கள். மிகையான கால்நடைகளைக் கொண்டவர்கள். இடையர். மிகையான மக்கள் தொகையினர்.
2. அண்டர் = அண்டு + அர். மிக நெருங்கி + இருப்பவர்கள். மிக நெருக்கமாய் கூடி வாழ்பவர்கள்.

## அண்டிரன்



**அண்டிரன் = அள் + திரன்.**
மிகை + உறுதியானவன். வளத்தில் வலிமையானவன்.
கடை எழு வள்ளல்களில் ஒருவன்.
"இரவலர் வரூஉம் அளவை அண்டிரன்
புரவு எதிர்ந்து தொகுத்த யானை போல".
(நற்றிணை - 237- 7, 8)
"இரவலர் வரும்வரை, அண்டிரன், கொடை அளிப்பதற்கு யானைகளை சேர்த்து வைத்தது போல".



## அண்ணல்

**ணகர ளகர ஈற்றின் முன்னர் தகர நகரங்கள் திரிதல்.**
151. ணளவென் புள்ளிமுன் டணவெனத் தோன்றும்.
(தொல். எழுத்து. தொகை மரபு)
இங்கு, "அண்" முன்னால் "நல்" வந்து, "அண்ணல்" என்றானது.
அண்ணல் = அண் + நல். நெருங்கிய + நல்ல. நெருக்கமுடையவனும், நன்மைசெய்பவனுமாய் இருப்பவன். (அருவப் பொருண்மை)
தந்தை, அண்ணன், குரு, புத்தன், மன்னன், இறைவன், தலைவன். (பருண்மைப் பொருண்மைகள்)
"கொன் ஒன்று கிளக்குவல் அடு போர் அண்ணல்".
(மதுரைக்காஞ்சி. 207)
பெருமை ஒன்று சொல்வேன், கொல்லும் போர்த் தலைவனே.

## அண்ணிப்பான்



**அண்ணிப்பான் = அண் + இ + ப் + ஆன்.**
மிக நெருங்கி + இருந்து + கொள் + ஆண்பால் விகுதி. நெருங்கி வந்து ஆட்கொள்பவன். இறைவன். சிவன். கணவன்.
“ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க!
ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க!”
*(திருவாசகம் - சிவபுராணம் - 4,5)*
மெய்ப்பொருள் அறிதலாய் ஆகி, நிலைத்து, மிக நெருங்கி வந்து ஆட்கொள்பவன் பாதம் வாழ்க. ஒருவனாகவும், பலவாகவும், எல்லாமாகவும் உள்ளவன் அடிகள் வாழ்க.



## அதரி

**அதரி = அத் + அரி.**
அதைப் + பிரி. தாளில் இருந்து நெல்லைப் பிரித்தல்.
தலையடி: கையால் நெல் தாள்கட்டை தலைக்கு மேல் சுழற்றி அடித்தல்.
கடாவிடுதல்: மாடுகட்டிப் போரடித்தல்.

## அதிட்டம்



**அதிட்டம் = அது + இடு + அம்.**
அது + இடும் + தன்மை. காலம், நேரம், சூழல், இயல்பு, இயற்கை நிகழ்த்தும் தன்மை. முன்னமே தீர்மானிக்கப்பட முடியாத நிகழ்வு.
நல் அதிட்டம். Good Luck!
தீய அதிட்டம். Bad Luck!



## அதிதி ஓரகத்தி அகதி புறதி

**அதிதி = அதி + தி.**
(வழக்கத்திற்கு) மிகையான தேகமாய் இருப்பவர் / நபர். விருந்தினர்.
**ஓரகத்தி = ஓர் + அகம் + தி.**
ஒரே வீட்டில் தேகமாய் இருப்பவர் / நபர். சகோதரர்களை மணந்த பெண்கள்.
**அகதி = அகம் + தி.**
(நாட்டின்) உள்ளே தேகமாய் இருப்பவர் / நபர். தஞ்சம் அடைந்தவர்.
**புறதி = புறம் + தி.**
(நாட்டின்) வெளியே தேகமாய் இருப்பவர் / நபர். நாட்டை விட்டு வெளியேறியவர் அல்லது நாடு கடத்தப்பட்டவர்.

## அதியமான்



**அதியமான் = அதி + அம் + ஆன்.**
மிகை + தன்மை + ஆனவன். மிகையாய் ஆனவன். செல்வ மிகுதியானவன்.
அதியன், அதிகன், நெடுமான் அஞ்சி என்பன யாவும், அதியமானின் பெயர்களே. இவன், தகடூரை (இன்றைய தருமபுரியை) தலைநகரமாய்க் கொண்டு ஆட்சி செய்தவன். ஔவையாரின் நண்பன்.
"அதியமான் பரிசில் பெறூஉம் காலம்".
(புறநானூறு 101 - 5 )
"அதியமானின் கொடை பெறும் காலம்"




## அமஞ்சி

**அமஞ்சி = அம் + அஞ்சி.**
அந்த அஞ்சுபவர். கூலியில்லாமல், பயந்து பயந்து, அடிமையாய் வேலை செய்பவர்.

## அமரம்



**அமரம் = அமர் + அம்.**
அமரும் + தன்மை. எல்லைக்குட்பட்டப் பகுதிகளில் அமர்ந்து நீதி, நியாயம் வழங்குதல். அமர்தல்.
அமரன், அமர்பவன், குறுநிலமன்னன். மாமன்னருக்கு போர்ப்படைகள் அளிப்பவன்.

## அமலை



**1. அமலை = அ + மலை.**
உயிர் / அந்த + மலை. உயிர்மலை / அந்த மலை. சோற்றின் குவியல். நெற்குவியல். மலை போன்ற மிகுதி. சோற்றுத்திரள்.
**2. அமலை = அம் + அலை.**
அழகிய + அலை. மலை போன்று உயர்ந்த மன்னன் வீழ்ந்ததைச் சுற்றி ஆர்ப்பரித்துக் கொண்டாடல். பூவந்தி எனும் சோப்புக் கொட்டை மரம்.
**\3. அமலை = அ + மல் + ஐ.**
அன்மை + மலம் + பெண்பால் விகுதி. மாசற்றவள்.
("அ" என்ற எழுத்திற்கு, "உயிர்", " அந்த", "அன்மை" என வெவ்வேறு பொருட்கள் உள்ளதைக் காண்க)
ஒரே சொல்லே பல பொருட்களை கொடுப்பதற்கான காரணம், அது வெவ்வேறு வகைகளில் பிரிபடுவதும், அதன் வெவ்வேறு சொல் அலகுகள் வெவ்வேறு பொருளைத் தருவதாலும்தான்.

## அம்பர்

***1. அம்பர் = அம் + பர்.***
*அந்த + கொண்டு பிரிந்திருத்தல். அந்த இடம்.*
***2. அம்பர் = அம் + பர்.***
*அழகு + கொண்டு பிரிந்திருத்தல். அழகிய நகரம்.*
*"அரும் சுரம் இறந்த அம்பர்".*
*(பெரும்பாணாற்றுப்படை. 117)*
*"அரிய பாலை நிலத்தைக் கடந்த பின்னர். அங்கே".*
*"நெல் விளை கழனி அம்பர் கிழவோன்".*
*(புறநானூறு 385-9)*
*"நெல் விளையும் வயல்களை உடைய அழகிய நகரத்தின் உரிமையாளன்".*
*இம்பர் = இவ்வுலகம்.*
*உம்பர் = மேல் உலகம்.*



## அம்மா



*நெடுங்காலமாய் வழங்கி வரக்கூடிய "அம்மா" எனும் சொல், இயற்சொல்லாகவே இருக்க வேண்டும்.*
*இயற்சொல் என்பது இயல்பின் அடிப்படையில், செயற்கையாக மனிதரால் உருவாக்கப்படுவது.*
***அம்மா = அ + மா. (மெய் மிகுதல்)***
*அ = அந்த*
*மா = ம் + ஆ. கொண்டு மூடுவது + ஆனவர்.*
*அம்மா = அந்த கொண்டு மூடுவது ஆனவர். குழந்தையைக் கொண்டு மூடி வைத்திருப்பவர். தாய்.*
*"அம்மம்", எனும் பெயரோடு உயிர் எழுத்துகள் சேர்ந்து திரியும் விளிப்பெயர்கள் எனலாம்.*
*அம்மம் = அ(ம்) + ம் + அம். அந்த + கொண்டுமூடும் + தன்மை. குழந்தையைக் கொண்டு மூடும் தன்மையுடையவர்.*
*பெண்ணின் தனிச்சிறப்பான இயல்பு, குழந்தை பெறுதலே.*
*எனவே, "அம்மா" என்றால், "தன்னைக் குழந்தையாக கொண்டுமூடி சுமந்துப் பெற்றவரே", என பொருள் கொள்ளலாம்.*



## அரிகூலி

***அரிகூலி = அரி + கூலி.***
*அறுத்தல் / கட்டு + கைமாறு.*
*நெற்கதிர் அறுப்புக்கு, கைமாறாக, நெற்தாள்களைக் கட்டாக கொடுப்பது.*

## அரியல்



***அரியல் = அரி + அல்.***
*பிரி + தொழிற்பெயர் விகுதி. பிரிதல். பாளையில் இருந்து, கள் பிரிந்து வரல். கள்.*



## அருதி திருதி மருதி

***1. அருதி = அரு(மை) + தி.***
*அருமையான தேகமாய் இருப்பவள். அருதி - அருதன் - அருதர்.*
***2. திருதி = திரு + தி.***
*வளம் / அழகு + தேகமாய் இருப்பவள். செழிப்பானவள். அழகானவள். திருதி - திருதன் - திருதர்.*
***3. மருதி = மரு(தம்) + தி.***
*மருதநில + தேகமாய் இருப்பவள். பெண் உழவர். மருதி - மருதன் - மருதர்.*

## அருந்ததி




***அருந்ததி = அரும் + த் + அதி.***
*அருமை + தேகம் + மிகை. அற்புதமான தேக மிகை. பெரிய விண்மீன்.*
*அருந்ததி = அருமையாக ஒளிரும் விண்மீன்.*
*வடமீன். சாலி மீன். பெரிய மீன். நிலைபெயராத தாரகை. பூமி, சுழற்சிப்பாதையில் எங்கிருப்பினும், காணக்கூடிய நட்சத்திரம்.*
*நிலைமாறாததால், கற்புக்கு அருந்ததி என ஆயிற்று.*
*போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்*
*தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்*
*(சிலம்பு - மங்கல வாழ்த்துப் பாடல்)*

## அருப்பம்

***அருப்பம் = அரு + பம்.***
*('அதன்' எனும் பொருண்மை கொண்டு, 'ப்' எனும் ஒற்று மிகுகின்றது)*
*அரு = அர் + உ. பிரிந்து வெளிப்படு.*
*பம் = ப் + அம் = கொள்ளும் + தன்மை.*
*அருப்பம் = பிரிந்து வெளிப்படுவதன் கொள்ளும் தன்மை. (அருவப் பொருண்மை)*



*பருண்மைப் பொருண்மைகள்:*
*1. அரண். (அகழியால் நிலத்தைப் பிரிந்து வெளிப்பட்டு, மன்னனை, படையை, மக்களைக் கொண்டிருக்கும் தன்மை.)*
*"அம்பு உமிழ் அயில் அருப்பம்".*
*(மதுரைக்காஞ்சி. 67)*
*"அம்புகளை வீசுகின்ற வேல்களை எறியும் கோட்டை".*
*2. வழுக்குநிலம். (வைக்கும் அடியைப் பிரித்துக் கொள்ளல்.)*

## அரைக்கீரை



***கீரை = க் + ஈர் + ஐ.***

*மெய் + தண்(மை) + பண்பு விகுதி. மெய்யின் குளிர்ந்த தன்மை. உடலில் உள்ள நீர்மச் சத்துகள் வெப்பத்தால் ஆவியாக்கப்பட்டு இரத்தத்தில் சேர்க்கப்படுகின்றது, மற்றும் கழிவுநீர் வியர்வையாயும் வெளியேற்றப்படுகின்றது. கீரைகள், மிகுந்த நீர்ச்சத்துகளுடன், எளிதில் உள்ளெடுக்கக் கூடிய உடலுக்கு தேவையான பல நுண்சத்துகளையும் கொண்டுள்ளதால், கீரை வகைகளை தினந்தோறும் எடுத்துக் கொள்வது மிக நல்லது. தேவைக்கேற்ற கீரைகளை எடுப்பது மேலும் நல்லம்.*

*அரை = அர் + ஐ. பிரி + பண்பு விகுதி. பிரிந்த தன்மை. பாதித் தன்மை. இடுப்பு.*

*அரைக்கீரை - மனித உடலில், இடையில் உள்ள அவயங்களுக்கு சக்தி ஊட்டும். இடுப்பு வலி, குடற்புண், சிறுநீரகக் கோளாறு, ஈரல், கல்லீரல், மலச்சிக்கல் பிரச்சனைகளைப் போக்கலாம்.*



## அலம்

***1. அலம் = அல் + அம்.***

*துன்பம் + தன்மை. துன்பம்.*

***2. அலம் = அல் + அம்.***

*அந்த மேலும் கீழுமான + தன்மை. கொடுக்குடைய தேள். மண்ணை மேலும் கீழுமாக்கும் கலப்பை. ஓடும் நீர்.*

***3. அலம் = அல் + அம்.***

*அசைவு அன்மை / இன்மை + தன்மை. அமைதி.*

## அலவன்



***1. அலவன் = அல் + அவன்.***

***அன்மை + அவன். இல்லாதவன். இருந்து இல்லாமல் மறைபவன். நண்டு. விரைவில் மணலில் குழியில் மறைவது நண்டு.***

***2. அலவன் = அல் + அவன்.***

***இன்னல் + அவன். துன்பப்படுபவன்.***

***3. அலவன் = அல் + அவன்.***

***உழைப்பு + அவன். உழவன்.***

***அலவன், அலவள், அலவர், அலது, அலவை, அலவம்.***

***ஒரு சொல்லுக்கு பல பொருட்கள் வருவதன் காரணம், சொல்லின் பகுதிகள் கொள்ளும் பொருள் மாறுபாடுகள்தான்.***

## அல்லியம்



**அல்லியம் = அல் + இயம்.**
அல் = அன்மை. இன்மை.
இயம் = இ + அம். இருக்கும் தன்மை.
அல்லியம் = இல்லாமல் இருக்கும் தன்மை. ஆளின்றி, ஓவியம் கொண்டு ஆள் இருப்பதுபோல் காட்டும் தன்மை. பொம்மலாட்டம். ஒரு வகை கூத்து.



## அவலம்

**1. அவலம் = அ + வலம்.**
அன்மை + வலிமை. பலமின்மை.
2. அவலம் = அவ் + அல் + அம்.
அந்த + அன்மை + தன்மை. அந்த இல்லாமை. வறுமை.

## அவல்



**அவல் = அ + அல்.**
அன்மை + மேலும் கீழும் ஆதல். அசையாமை. ஓடாமை.
அசைவற்ற நீர்நிலை. பள்ளம் . அமைதி. தவம். தியானம்.
(அரிசியின் அவலும் கூட அசையாமல் இருக்கும். )
நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!
- ஔவையார் ( புறநானூறு 187)

## அவிச்சை



**அவிச்சை = அ + இச்சை.**
அ = இன்மை. இச்சை = ஆசை.
அவிச்சை = இன்மை ஆசை. ஆசையின்மை.
ஆசைதான், அமைதியின்மையை உருவாக்குகின்றது. அனைத்திற்கும் ஆசைப்படுதல், தனிமனித அமைதியின்மையுடன், சமூகக் குழப்பத்தையும் ஏற்படுத்துகின்றது.
ஆசையைக் குறைத்தலே, அமைதியை நோக்கிய உள்நோக்குப் பயணத்திற்கு வழிகாட்டும், பயண முடிவில், அவிச்சை எனும் ஆசையற்ற மனநிலையே, அமைதியில் நிலைத்து ஆனந்தமயமாகும்.




## அவையம்

**அவையம் = அவை + அம்.**
அவை = அவ் + ஐ. அந்த + ஐந்து. ஐந்து பேர். அம் = தன்மை.
அவையம் = ஐந்து பேர் தன்மை. ஐம்பேராயம். பின்னாளில், அதிகமானோரையும் குறித்து வந்திருக்கலாம்.



## அழகச்சு

**அழகச்சு = அழகு + அச்சு.**
அழகாக அச்சடிக்கப்பட்ட காசு / நாணயம்.
அழகன் அச்சடித்த நாணயமாகவும் இருக்கலாம்.



## அழகெருது

**அழகெருது = அழகு + எருது.**
அழகான காளை. இனப்பெருக்கத்திற்குப் பயன்படும் காளை. பொலி எருது.
காங்கேயம் காளை மாட்டின் அழகைப் பார்ப்பதே தனிச் சுகம்தான்.

## அழுகுணி



***1.அழுகுணி = அழு + குண(ம்) + இ.***
*அழுகின்ற குணமாய் இருப்பவர். அழுதே சாதிப்பவன். பொய்யாட்டம் ஆடுபவள்.*
***2. அழுகுணி = அழுகு + உண் + இ.***
*அழுகித் தின்பதாய் இருப்பது. சொறி சிரங்கு.*



## அழுங்கல்

***அழுங்கல் = அழும் + கல்.***
*அழுகின்ற கல். கல் அழுமா? கல் நெஞ்சம் உடைய இரக்கமற்ற ஊர்மக்கள், தலைவிக்கு நேர்ந்த குறை பற்றி, வெளியில் புலம்பி அழுகிறார்களாம்.*
*அழுங்கல் = வெளியே அழுது, உள்ளே கல்லாய் இருப்பது. பேச்சில் கனிவுடனும், மனத்தில் ஈரமில்லாமலும் இருப்பது.*

## அறம்



***அறம் = அற் + அம்.***
*அறும் தன்மை. பிரிந்து இருக்கும் தன்மை.*
*அற = பிரிய*
*அறா = பிரியாத*
*அறி = பிரிந்து இருத்தல். பிரித்து இருத்து.*
*அறீ = பிரிந்து இருக்கும்*
*அறு = பிரி*
*அறூ = பிரித்து இருக்கும்*
*அறை = பிரிந்து இருக்கும் தன்மை*
*அறே = பிரிந்ததே*
*அறோ = பிரிந்ததோ.*
*1. அறம் = புறத்திலிருத்து, அகம் பிரிந்து இருக்கும் தன்மை.*
*2. அறம் = அகம், உடலிலிருந்து பிரிந்து இருக்கும் தன்மை.*
*3. அறம் = அகம், புலன்களிலிருந்து பிரிந்து இருக்கும் தன்மை.*
*4. அறம் = அகம், மனத்திலிருந்து பிரிந்து இருக்கும் தன்மை.*
*5. அறம் = அகம், தன்னிலிருந்து பிரிந்து இருக்கும் தன்மை.*
*6. அறம் = அகம்,*
*அனைத்திலிருந்தும் பிரிந்து இருக்கும் தன்மை.*
*அறமே, தன்னையும், உலகையும் அறிய வைக்கும், உணர வைக்கும்.*
*அறமே, வாழ்வும், இறைமையுமாம்.*

## அறவோலை

**அறவோலை = அறம் + ஓலை.**
அறுகின்ற தன்மை + எழுத்தோலை. தான் ஈட்டிய சொத்திலிருந்து தன் நலன் அறுக்கின்ற தன்மை கொண்ட சாசனம்.
(தருமம் = தரும் + அம். தருகின்ற தன்மை கொண்டது) தரும சாசனம்.







## அறிவு

**அறிவு = அறி + உ.**
அறி + புறம் / அகம் .
அகம் புறமறிதலே அறிவு.

## அறுவடை

**அறுவடை = அறு + அடை.**
அறுத்தலும் சேர்த்தலும், பாதுகாத்தலும்.
அறுவடை என்பது கதிர் அறுப்பு மட்டுமல்ல. தூய்மைப்படுத்தி, காயவைத்து, சேமித்து, பாதுகாப்பது போலும்.





## அறையோலை

**அறையோலை = அறை + ஓலை.**
முரசு அறைந்து, அறிவிக்கப்படும் செய்தி. அரச ஆணை அடங்கிய ஓலை.
பறையோலை, முரசோலை எனலும் தகும்.

## அற்சிரம்

***1. அற்சிரம் = அல் + சிரம்.***
*துன்பம் + தலை / எண்ணம். மனத்துன்பம். தலைவலி.*
***2. அற்சிரம் = அல் + ச் + இர் + அம்.***
*அன்மை + இயக்கம் + இருக்கும் + தன்மை. இயக்கம் அற்று இருத்தல். மூடுபனி. பனிக்காலம்.*



## அன்பழல்



***அற்பழல் / அன்பழல் = அற்பு / அன்பு + அழல். அன்பு + கனல்.***
*அன்பான நெருப்பு. ஊடல்.*
*"மின் நேர் இடையாள் அடி வீழ்ந்தும் இரந்தும்*
*சொல் நீர் அவள் அற்பு அழலுள் சொரிந்து ஆற்ற"*
*(சீவகசிந்தாமணி - குணமாலையார் இலம்பகம் - 1072- 1,2).*
*மின்னல் போன்ற இடையினை உடையவளின் (குணமாலையின்) காலில் விழுந்தும், கெஞ்சியும், சொல் எனும் நீரை ஊற்றி, அவளுடைய அன்பழலை ஆற்றினான் (சீவகன்).*
*"அற்பு" எனும் சொல்லும் "அன்பு" எனும் பொருள் தருமாம்.*
*நாம், "தண்ணழல்" என்று, ஒரு புதிய சொல்லை உருவாக்கலாமா?*

## ஆகம்

***ஆகம் = ஆக் + அம்.***
*ஆதல் மெய் + தன்மை. மெய்யாகும் தன்மை. உருவாகும் தன்மை. உடல், மனம், மார்பு.*
*"புரிமணி ஆகத்து ஐதா*
*விரல் நுதி கொண்டு பூசி*
*விரிமணி வியப்ப மேனி*
*ஒளிவிட்டு விளங்கிற்று அன்றே".*
*(சீவகசிந்தாமணி - காந்தருவதத்தை இலம்பகம் - 625 - 3,4)*
*"மணிபூண்ட (ஆக(ம்) + அத்து) மார்பிலும், ஐந்து விரல் நுனிகளிலும், (சிவந்த சுண்ணம்) பூசி, கண்கள் வியக்க, காந்தருவதத்தையின் உடல், ஒளியைச் சிந்தியவாறு இருந்தது".*





## ஆகாமி

***ஆகாமி = ஆக்(கு) + ஆம் + இ.***
*ஆக்கம் + ஆகும் + இருத்தல். ஆகுவதாய் இருக்கட்டும்! "ஆகுவதாக!" என வாழ்த்துவது. மந்திரம். இது வடமொழி அல்ல!*

## ஆகுளி



**ஆகுளி = ஆக் + உள் + இ.**
ஆகுதல் + உள்ளே + இருத்தல். இசை, உள்ளிருந்து எழுதல். மேற்புறம் அறையப்பட்டாலும், உள்புறம் இருந்து இசை ஒலிக்கும் போலும். சிறு பறை.
"திண் வார் விசித்த முழவொடு ஆகுளி".
*(மலைபடுகடாம். 3)*
"உறுதியான தோல் கயிற்றால் இறுக்கிக் கட்டிய மத்தளமுடன் சிறுபறை".



## ஆசிரியம்

**ஆசிரியம் = ஆச் + இர் + இயம்.**
ஆதல் இயக்கம் + இருக்கும் + இயல்பு. இயக்கமாய் இருக்கும் தன்மை. இயங்க வைக்கும் தன்மை.



## ஆசீவகம்

**ஆசீவகம் = ஆ + சீவ(ன்) + அகம்.**
ஆதல் சீவனின் + உள்ளம். தன் உயிருள் ஒன்றுதல். உயிர்மையாதல். இறைமையாதல்.



## ஆச்சன்

**ஆச்சன் = ஆச் + ('ச்' ஒற்று மிக) + அன்.**
ஆதல் இயக்கம் + ஆண்பால் விகுதி. இயக்கமானவன். இயங்கவைப்பவன். இயங்கவைத்தவன். தந்தை. இறைவன். அரசன்.

## ஆடிப்பச்சை



***ஆடிப்பச்சை = ஆடி + பச்சை.***

*ஆடிமாதத்தில் பயிரின் பச்சை நிறம். இளம்பச்சை. வெளிர் பச்சை.*

*கார்த்திகைப்பச்சை = கார்த்திகை + பச்சை. கார்த்திகை மாதத்தில் பயிரின் பச்சை நிறம். முதிர்பச்சை. கரும்பச்சை. ஆடிப்பட்டம், கார்த்திகைப்பட்டம், எனும் நடவைக் காலங்களைக் குறிக்கின்றனவா?*



## ஆணத்தி

**ஆணத்தி - < ஆணை + ( 'த்' எனும் ஒற்று மிகும்) + தி.**

ஆணைக்கு + தேகமாய் இருப்பவர். ஆணையை நிறைவேற்றுபவர். அரச ஆணை என்றும் ஆகி வரலாம்.

## ஆணையம்



***ஆணையம் = ஆணை + அம்.***

***கட்டளை + தன்மை. கட்டளையிடும் அதிகாரமுள்ள அவை. ஆணையிடும் அதிகாரம் இல்லாத அவையை, பரிந்துரையம் எனலாம்.***

## ஆண்டவன்



***1. ஆண்டவன் = ஆண்டு + அவன்.***

*அங்கு + அவன். அங்குள்ளவன்.*

***2. ஆண்டவன் = ஆண்டு + அவன்.***

*ஒரு வருடம் + அவன். காலம் அவன்.*

***3. ஆண்டவன் = ஆள் + த் + அவன்.***

*ஆளும் + தேகம் + அவன். அண்டத்தை, உலகை, உடலை, உயிரை ஆள்பவன். இறைமையே, இந்த உலகமாய் உள்ளது. இறைமையிலேயே நாம் அனைவரும் உள்ளோம். இறைமையே எல்லாம். இறைமையின்றி எதுவும் இல்லை.*

*அகரம் பிற எல்லா எழுத்துமாய் திரிவதைப் போல், "முதல் + தே = முதற்றே", "இறைமையின் முதல் தேக எழுச்சி", உலகம் எல்லாமாக திரிகின்றது.*

***4. ஆட்சி செய்தவன்.***

## ஆண்டாள்



***1.ஆண்டாள் = ஆள் + தாள்.***

ஆளும் பாதம். அன்பால், காதலால், பக்தியால், திருவாய்மொழியால், பாசுரத்தால் (இறைமையை) ஆளும் தொண்டர்.

***2. ஆண்டாள் = ஆள் + த் + ஆள்.***

ஆள்கின்ற + தேகம் + பெண். ஆள்கின்ற தேகத்தினள். தலைவி, அரசி. அழகி. அறிவள். ஆளுமை உடையவள்.



## ஆண்டி

***ஆண்டி = ஆள் + தி.***

ஆள்கின்ற + தேக இருப்பு. தேக இருப்பை ஆள். தேகத்தை ஆள்பவர். பிச்சை எடுத்துப் புசித்து, தவம் மேற்கொண்டு, தன்னை ஆள்பவர். தேகத்தை ஆள்பவரைக் குறித்த சொல், பிச்சை எடுப்பவராக மட்டும் குறுகிவிட்டது போலும்.

## ஆதுரசாலை

***ஆதுரசாலை = ஆதுரம் + சாலை.***

ஆதுரம் = ஆத் + உரம். ஆக்கல் + உறுதி/ வலிமை. வலிமையாக்கல்.

சாலை = சால் + ஐ. ஆல்போல் பெரிதாய் கொள்ளும் + தன்மை. பெருங்கட்டிடம்.

ஆதுரசாலை = நோய்வாய்ப்பட்டவரை வலிமையாக்கும் பெரிய இடம். மருத்துவமனை.

உடல் வலிமைக்குறைவால்தான் நோய் தோன்றுகின்றது. நோயாளியை வலிமையாக்குவதன் மூலம், மிகும் நோய் எதிர்ப்புச் சக்தியால், நோய் மறைகின்றது. உடல், நலம் பெறுகின்றது.



## ஆமென்




**ஆமின் = ஆம் + இன்.**
ஆகும் + இனிமை.
ஆகுக இனிமையாய். இனிதாகட்டும்.
"தந்தை தாயும் ஆகி
அடங்கு அலர் அட்ட வேலான்
ஆணையிர் ஆமின் என்றான்".
(சீவகசிந்தாமணி - கந்தருவதத்தை இலம்பகம் - 556 -3,4)
வீணாபதியே, கந்தருவதத்தைக்கு நீயே "தந்தையாகவும் தாயாகவும் ஆகி, பின்னர், பகைவரை வென்ற வேலையுடையவனின் (சீதத்தன் / சீவகன்) ஆணையின்படி ஆகுக இனிதாய்", என்றான்.
இந்த "ஆமின்" தான், யூத, கிறித்துவ, இசுலாமிய "ஆமென்" (ஆம் + என் = ஆகுக என்று = என்றாகுக!) ஆனதா?



## ஆம்பல்

**ஆம்பல் = ஆம் + பல்.**
ஆகும் + பலவாய். பல இதழ்களைக் கொண்டதாகும், ஆம்பல்.
ஆம்பல், இரவில், "பல்" போல் "ஆகும்". நீர்மகளின் நகையாகும் எனலாம்.
தமிழ்ச் சொல்லே, கவிதையுமாகும்.

## ஆய்தம்

**ஆய்தம் = ஆய் + த் + அம்.**
ஆதல் + தேகம் / வடிவம் + தன்மை. வடிவமாகும் தன்மை.
மெய் வடிவமாகும் தன்மை.
**அ + க் = ஃ.**
'அ'வின் ஒரு மாத்திரையும், 'க்'கின் அரை மாத்திரையும் நுணுகி, 'ஃ' எனும் அரை மாத்திரையாகிறது. இதை, *அகரமெய் குறுக்கம்* எனலாம்.
ஆய்த எழுத்தால், மெய் எழுத்துகள் தம் ஒலியைப் பெறுகின்றன.
அரை மாத்திரை ஒலிப்பால், புள்ளியும் பெறுகின்றன.
ஆய்தம் முப்பாற்புள்ளி எனப்படுகின்றது. உயிரின் துவக்கப்புள்ளி, மெய்யின் துவக்கப்புள்ளி, அரைமாத்திரையின் மேற்புள்ளி என மூன்று வகைப் புள்ளிகள் கொண்டது, ஆய்தம்.



## ஆலத்தி

***1. ஆலத்தி = ஆல் + அத் + தி.***
(மேலும், கீழும், முன்னும் விரிந்துப் பரவுவது), ஆல் + அந்த + தேக இருப்பு. ஆதல் அதிர்வு + அந்த + தேக இருப்பு. தேகம் அதிர்வாதல். சுரங்களை, ஆலைப் போன்று, உயர்த்தியும், தாழ்த்தியும், நீட்டியும், ஒலித்துப் பார்த்தல்.
***2. ஆளத்தி = ஆள் + அத் + தி.***
கட்டுப்படுத்து + அந்த + தேக இருப்பு. சுரங்களின் தேக வெளிப்பாட்டைக் கட்டுப்படுத்தல்.
***3. ஆலாபனை = ஆல் + ஆப் + அனை.***
ஆல் (போல்) + கொள்ளல் + நெருக்கமாக / அனைத்தையும். எல்லா சுரங்களையும், அவற்றின் மூன்று நிலைகளிலும், இருத்திக் கொள்ளுதல். இம்மூன்று சொற்களும், வெவ்வேறு கோணங்களில் இருந்து, இசைப் பயிற்சியில், குரல் நெறிப்படுத்தலில், வலிவு, மெலிவு, சமன் என சுரங்களை ஒலித்துப் பார்த்தல் என்பதைக் குறிக்கும். குரல்வளையில் இருக்கும் நுண்தடைகளை நீக்க, இது உதவும்.
ஆலத்தி / ஆளத்தி / ஆலாபனை = வெளியோசை. புறவோசை. ஆலோசை. பயிலோசை. நெறியோசை. தெளிவோசை. கம்புறம் (எதிர் கமகம்).
இவ்வாறு, ஆளத்தியின் பல்வேறு பண்புகளைக் காரணமாய்க் கொண்டு, புதிய சொற்களை உருவாக்கலாம்.''





## ஆலல்

***ஆலல் = ஆல் + அல்.***
ஆலமரம் போல் + தொழிற் பெயர் விகுதி. ஆல்போல் பரந்து விரிதல். விரிந்து அதிர்தல். தோகை விரித்தாடும் மயில்.
'ஆலல் ஆலின'. மயில்கள் தோகை விரித்தாடின.



## ஆலி வேலி

***1. ஆலி = ஆல் + இ.***
ஆல்போல் உறுதியானவள். ஆலி - ஆலன் - ஆலர்.

***2. வேலி = வேல் + இ.***
வேல்போல் கூர்மையானவள். கூர்விழியாள். வேலி - வேலன் - வேலர்.

## ஆவணம்

**ஆவணம் = ஆ + அண் + அம்.**
ஆதல் + நெருக்கம் + தன்மை. இணைக்கும் தன்மை. இருவர் அல்லது பலரை இணைப்பது. ஒருவரையும், அவரது உடைமையையும் இணைப்பது. ஒரு இனத்தையும், அதன் தொன்மையையும் இணைப்பது.






## ஆவரணம்

**ஆவரணம் = ஆ + அரண் + அம்.**
ஆதல் + மதில் / கோட்டை + தன்மை. சுற்றுச்சுவர். மதிற்சுவர்.

## ஆழ்மனம்

**ஆழ்மனம் = ஆழம் + மனம்.**
*அடி மனம். (Deep Consciousness)*





## ஆனவாள்

**ஆனவாள் = ஆன + ஆள்.**
**தகுதியான + நபர். வேண்டிய ஆள். கோயில் வேலைகளை வழிநடத்தும் அரசு அதிகாரி.**

## இகுளை



**இகுளை = இக் + உள் + ஐ.**
இந்த மெய் + உள்ள + பண்புப் பெயர் விகுதி. இம்மெய் உள்ள தன்மை. இம்மெய்யைக் கொண்டவள். இவளே. தோழி.
"அரிய அல்லமன் இகுளை..."
அகநானூறு 8. குறிஞ்சித் திணை - பெருங்குன்றூர்க் கிழார்
"நமக்கு அரியது அல்ல இவளே (தோழி)."



## இடுஞ்சில்

**இடுஞ்சில் = இடும் + சில்.**
**எண்ணெய் இடும் சிறியது. அகல் விளக்கு.**

## இந்து



**இல் + து -> இன் + து -> இந்து.**
1. இந்து = இல் + து = இன்மை + தேக வெளிப்பாடு. அமாவசி. அமாவாசை. கறுநிலா. கார் நிலா. காள் நிலா.
2. இந்து = இன் + து. இனிமையான + தேக வெளிப்பாடு. நிலவு.

"ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை".
(திருமந்திரம் - விநாயகர் காப்பு).
ஐந்து கைகள் உடையவனை, ஆனை முகம் உடையவனை, நிலவின் "இளம்பிறையைப் போன்ற பற்களை உடையவனை".



## இமை இரப்பை

**1.இமை = இ + மை.**
இருத்தல் + கொண்டு மூடிய தன்மை. கொண்டு மூடும் தன்மையுடன் இருத்தல்.
**2.இரப்பை = இர் + அப் + பை.**
கீழ் அமரும் + அந்த + (கண்ணைக்) கொள்ளும் தன்மை.
இரப்பை = கீழே மூடி , கண்ணைக் கொள்வது.

## இயந்திரம்

**இயம் + திரம் = இயந்திரம்.**
இயம் = இ + அம். இருத்தல் / இயல்பின் தன்மை.
திரம் = உறுதி.
இயல்பு உறுதியாக்கப்பட்டது, இயந்திரம். இயற்கை விதிகளைக் கொண்டு உறுதியான வடிவமாக்கப்பட்டது, இயந்திரம்.
எம் + திரம் = எந்திரம். எம்முடைய உறுதி.
.





## இயவர்

**இயவர் = இய(ம்) + அர்.**
இசைக்கருவி + பலர்பால் விகுதி. இசைஞர்.

## இயற்கை

**இயற்கை = இயல் + கை.**
இயல் = இ + அல். இருத்தல் + தொழிற்பெயர் விகுதி. இயல்பு.
கை = க் + ஐ. மெய் + பண்புப்பெயர் விகுதி. மெய்மை. மெய் இருத்தல்.
இயற்கை = இயல்பால் + மெய் இருத்தல். தானாகவே இருத்தல். மனித இடையீடு இன்றி இருத்தல். மாறாத குணம். தன்மை. பண்பு. நிலைமை.






## இராமாயணம்

**இராம(ன்) + யாணம் = இராமாயணம்.**
("ம" எனும் குறில் "மா" எனும் நெடிலாக, "யா" எனும் நெடில், "ய" எனும் குறிலாகின்றது).
"யாணம்" எனும் சொல் "பயணம்" என்பதைக் குறிக்கும்.
இராமாயணம் = இராமனின் பயணம்.

## இரும்பி செம்பி பொன்னி



*1.* ***இரும்பி = இரும்பு + இ.***
இரும்பைப் போன்று உறுதியானவள். இரும்பி - இரும்பன் - இரும்பர்.
***2. செம்பி = செம்பு + இ.***
செம்பைப் போன்று சிவந்தவள்/ குளிர்ந்தவள். செம்பி - செம்பன் - செம்பர்.
***3. பொன்னி = பொன் + இ.***
பொன்னைப் போன்று ஒளிர்பவள். பொன்னி - பொன்னன் - பொன்னர்.



## இலயம்

***இலையம் = இலை + அம்.***
இன்மை + தன்மை. அழிவு. ஒடுக்கம்.
"ஈடமை பசும்பொன் சாந்தம் இலயமா ஆடுகின்றாள்."
(சீவகசிந்தாமணி - பதுமையார் இலம்பகம் - 1256)
"தூய பொன்னிற்கு சமமான சந்தனம் அழிய ஆடுகின்றாள்", பதுமை.

## இலிங்கம்

***இலிங்கம் = இல் + இம் + கம்.***
இல் = இன்மை.
இம் = 'அதன்' எனும் பொருள் கொள்ளும் சாரியை.
கம் = க் + அம். மெய் + தன்மை. பொருண்மைத் தன்மை.
இலிங்கம் = இன்மையதன் பொருண்மைத் தன்மை. புலன்களுக்கு வெளிப்படாத பரம்பொருளின் குறியீடாக, பருண்மையாக்கப்பட்ட வடிவம்.
அண்டத்திலும், பிண்டத்திலும், ஐம்புலன்கள் அறியமுடியாத அருவின் உருவமே இலிங்கம். மனத்தால் உள்ளுணர முடிவதே இலிங்கம்.





## இளங்கூறு

***இளங்கூறு = இளம் + கூறு.***
இளமையானப் பகுதி. இளவரசன். இளையவன். இளவரசி.

## இளங்கோயில்



**இளங்கோயில் = இளம் (மை) + கோயில்.**
பழைய கோயில். சிறிய கோயில். கோயில் புணரமைப்புக் காலங்களில், திருமேனிகளை வைக்கும் சிறிய பழைய கோயில் மண்டபம்.




## இளஞ்சிங்கவீரர்

**இளஞ்சிங்கவீரர் = இளம் (மை) + சிங்க (ம்) + வீரர்.**
இளமையான சிங்கம் போன்ற வலிமையான வீரர்கள். நானாதேசிகள் எனும் பன்னாட்டு வியாபாரக் குழுவின் உட்பிரிவு. வியாபாரிகளின் உயிருக்கும், உடைமைக்கும் பாதுகாவலாய்ச் சென்ற வீரர்கள்.

## இளவட்டம்



**இளவட்டம் = இள(ம்) + வட்டம்.**
இளைஞர் + குழு. உருண்டு திரண்ட தேகத்தைக் கொண்ட இளைஞர் / இளைஞன்.
இளவட்டக்கல்லைத் தூக்கினான் ஒரு இளவட்டம்.



## ஈழவர்

**ஈழவர் = ஈழ (ம்) + அர்.**
ஈழம் + பலர்பால் விகுதி. ஈழத்தில் இருந்து வந்தவர்கள். கள் இறக்குபவர்கள்.

## உட்கு



**உட்கு = உள் + கு.**
உட்புறமாதல் + மெய்யின் வெளிப்பாடு. நாணம். அச்சம். இவ்விரண்டு உணர்வுகளின் போதும், மெய் உள்வாங்கும், ஒடுங்கும்.
"உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார்" (குறள் 921)
கள்ளின் மீது காதல் கொண்டு குடித்துக்கொண்டு வாழ்பவர் காலமெல்லாம் பகைவரால் அஞ்சப்பட மாட்டார்கள் தன் புகழையும் இழப்பர்.
நன்றி: tamildrops. செங்கை பொதுவன்.



## உண்ணிலம்

**உண்ணிலம் = உள் + நிலம்.**
உள்ளே அடங்கிய நிலம்.

## உம்பல்



**உம்பல் = உம் + பல்.**
புறமாகும் + பல் /பல. புறப்பல். புறத்தில் பல ஆவது.
1. யானையின் பல்லே, புறத்தில் தந்தமாக வெளிப்படுகின்றது. எனவே, உம்பல் என்றால் யானை.
"உம்பல் அகைத்த ஒண் முறி யாவும்".
(மலைப்படுகடாம் 429)
"யானை முறித்த ஒளிரும் தளிர்களும், யாம் பூவும்".
2. புறத்தில் பலராதல், தம் மக்கள். வழித்தோன்றல். எனவே, உம்பல் என்றால் வழித்தோன்றல்கள்.
"திரை தரு மரபின் உரவோன் உம்பல்".
(பெரும்பாணாற்றுப்படை. 31)
"கடல் வணிக வழக்கால் வலிமையானவனின் வழித்தோன்றல்".



## உருத்திரன்

**உருத்திரன் = உரு + திரன்.**
உருவம் + உறுதியானவன். உருவ உறுதியானவன். சிவனின் ஒரு வடிவம் என்பர்.
அருகன் எனும் சமணரின் அருவ இறைமைக்கு எதிராக தோற்றுவிக்கப்பட்ட உருவக் கடவுள்.

## உலகம்



**உலகம் = உல் + அகம்.**
உல் = உ + ல். புறம் + மேலும் கீழுமாதல். புறத்தில் சுற்றுதல்.
அகம் = வீடு (இதுவும் ஒரு பொருள்).
உலகம் = புறத்தில் சுற்றும் உலக உயிர்களுக்கெல்லாமான வீடு.



## உவா

**உவா = உ + ஆ.**
புறம் + ஆனது. பூமியின் புறத்தில் ஆனது. நிலா.
வெள் உவா = வெள்ளை நிலா. ஒளிர் நிலா. பவுர்ணமி.
கார் உவா = கறுப்பு நிலா. இருள் நிலா. அமாவாசை. அமாவசி.

## உழுவை



**உழுவை = உழு + ஐ.**
உழுதல் + பண்பு விகுதி. கூர் நகங்களால் கீறுவது, நிலத்தை உழுவதுப் போன்று இருத்தலால், புலிக்கு, இப்பெயர் காரணமாயிற்றாம்.
"அளை செறி உழுவையும் ஆளியும், உளியமும்".
(குறிஞ்சிப்பாட்டு 252)
"குகையில் மிகுந்து வாழும் புலியும், ஆளியும், கரடியும்".
கரடி, "உளியம்" எனப்பட்டதைச் சிந்திக்க.



## உளியம்

**உளியம் = உளி + அம்.**
உளியின் + தன்மை. கரடி / புலியின் கூர்நகங்கள், உளியைப் போல், உடலைப் பிளக்க வல்லன. எனவே, உளியம் , கரடிக்கும் புலிக்கும் மற்றோர் காரணப் பெயராகின்றது.

## எழால்

***எழால் = எழ் + ஆல்.***
*கீழிருந்து மேல் எழுந்து + ஆல்போல் விரிதல். மேலெழுந்து பரந்து விரிதல் (அருவப் பொருண்மை).*
*(பருண்மைப் பொருண்மைகள்):*
*1. வல்லூறு - பறவை கீழிருந்து மேலெழுந்து வட்டமாய்ப் பறக்கும்.*
*2. யாழ் இசைக் கருவி - இசையை மேல் எழுந்து விரிந்துப் பரவி ஒலிக்கச் செய்வது.*
*3. யாழ் இசை - யாழின் நரம்பதிர்வு, அரைக்கோளமான பத்தருள் இருந்து எதிரொலித்து, போர்வையை ஊடுருவி வட்டமாய்ப் பரவும்.*
*4. பூவாசம் - எழுந்து விரிந்துப் பரவி மணத்தல்.*
*5. சூரியன் - மேல் எழுந்து ஒளியை விரிவாய்ப் பரப்புதல்.*





## எழுச்சி

***எழுச்சி = எழு + (ச்) + சி.***
*எழுகின்ற + இயக்கமாய் இருத்தல். உயர்கின்ற இயக்கம். இரண்டுக்கு மேலான எழுத்துகளை உடைய தமிழ்ச்சொற்கள், புணர்மொழிகளாகவே உள்ளன.*

## ஏகம்பன்

***ஏகம்பன் = ஏகம் + ப் + அன்.***
*ஒருமை + கொள்ளல் + ஆண்பால் விகுதி. ஒருமையாய் கொண்டவன். ஒற்றையனாய் விண்முழுவதையும் கொண்டவன். அனைத்தையும் உள்ளடக்கியவன். இறைமை. காஞ்சி ஏகம்பரநாதன்; ஏகாம்பரநாதன்.*





## ஏக்கழுத்தம்

***ஏக்கழுத்தம் = ஏ + கழுத்து + அம்.***
*மிக உயர்வு + கழுத்து + அம். மிக உயர்வான கழுத்தின் தன்மை. தலை மிகவும் நிமிர்தல். இறுமாப்பு. பிறரை ஏளனமாய் நோக்கல்.*
*"எள்ளுநர்கட்கு ஏக்கழுத்தம் போல இனிது அன்றே".*
*(சீவகசிந்தாமணி - காந்தருவதத்தை இலம்பகம் - 496 - 4)*
*"இகழ்பவர்க்கு தலைநிமிர்வைப் போன்று இனிதாகும்".*

## ஏதிலான்



**ஏதிலான் = ஏது + இல் + ஆன்.**
ஒன்றும் இல்லாதவன். பொருளோ, உறவோ, தொடர்போ இல்லாதவன். ஏழை, அனாதை. பகைவன்.
"அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு".
"ஒருவன் அன்பில்லாதவனாய், நட்பில்லாதவனாய், தானே எதிர்க்கும் துணிவில்லாதவனாய் இருந்தால், பகைவனின் வலிமையை எப்படி ஒழிக்க முடியும்?"
(திருக்குறள் - பகைமாட்சி - 862)
அதே பொருளுடைய பிற சொற்கள், ஏதிலாள், ஏதிலார், ஏதிலன், ஏதிலள், ஏதிலர், ஏதிலி.
இவற்றில், "ஏதிலி" எனும் சொல் "அகதி" எனும் பொருளைக் கொண்டும் பயன்படுத்தப்பட்டுள்ளது.



## ஏந்தல்

**ஏந்தல் = ஏந்த் (து) + அல்.**
உயரத்தில் தாங்கி நிற்றல். பாசனத்திற்காக உயரே நீரைத் தாங்கி நிற்கும் ஏரி.

## ஒண்டிமுத்து



**ஒண்டி = ஒண் + தி.**
ஒளிரும் + தேகமாய் இருத்தல்.
"ண ள என் புள்ளி முன் (த, ந ), ட ண என தோன்றும்."
(தொல். எழுத்து. தொகைமரபு. 8)
முத்து = மு + த் + து. கொண்டு மூடியதன் வெளிப்பாடு + அதன் + தேகமாய் வெளிப்படல். கொண்டு மூடிய சிப்பியின் தேக வெளிப்பாடு. கொண்டு மூடிய மனத்தின் தேக வெளிப்பாடு.
ஒண்டி முத்து = ஒளிரும் தேகத்தைக் கொண்டு மூடி வெளிப்படல்.



## ஓம் சரவணபவ

**ஓம் = (அ + உ )2 + ம்.**
(அகம் புறமாய்) விரிந்து + அடங்கல். அகம் விரிந்தடங்கல்.
சரவணபவ = சரம் + வண்ணம் + பவம்.
சரம் = ஒழுங்கு. வண்ணம் = இசை ஒலி.
பவம் = ப் + அவ் + அம். வெளி + அதன் + தன்மை. வெளிமை (Space).
சரவணபவ = ஒழுங்கான இசையொலியால் வெளிமை.
ஓம் சரவணபவ = விரிந்தடங்கும் ஒழுங்கான இசையொலியால் வெளிமை.
'ஓம்' எனும் பிரணவ மந்திரத்தால், ஒழுங்கற்று சிதறும் மனம், சீராய் விரிந்து அடங்க, உயிர்மை, வெளிமை உணரப்படும். வெளிமையில் நிலைக்க, இறைமையும் உணர்தலாகும்.

## ஓம்



***ஓ = அ + உ.***

*"அ" வின் 3/4 மாத்திரையும் , "உ" வின் 1/4 மாத்திரையும் சேர்ந்து, "ஓ" ஆகின்றது. அ = அகம், உ = புறம். ஓ = அ + உ = அகம் புறம் ஆதல். அகம் + புறம் = முழுமையாதல். ஒலி முழுமையாதல்.*

*ஓ = ஒ + ஓ. முழுமை புறம் ஓங்கி விரிவடைதல். ஒலி புறம் ஓங்கி விரிவடைதல்.*

*ம் = ஒலி உள் அடங்குதல்.*

*ஓம் = ஓ + ம். ஒலி புறம் ஓங்கி விரிந்து + உள் அடங்குதல்.*

*உள் மூச்சு, "ஓ" என வாங்கி, வெளி மூச்சு, "ம்" என விட வேண்டும்.*

*(பிராண(ன்) + ஆம் + அம் = பிராணயாமம் - உயிர்ப்பாகும் தன்மை)*



## ஓரை

***ஓரை = ஓர் + ஐ.***

ஒன்று + பண்பு விகுதி. ஒன்றாய் இருக்கும் தன்மை. நெய்தல் மகளிர் ஒன்றாய் குழுமி ஆடுவது. கடற்கரையில், நண்டு, ஆமை, பூச்சிகள் போன்றவற்றைப் பிடித்து விளையாடுவது.

## கங்கில்



***கங்கில் = கங்கு + இல்.***

நெருப்பு + இருக்கும் இடம். அடுப்பு.



## கச்சி

***கச்சி = க் + அச் + சி.***

மெய் + 'அதன்' எனும் பொருளுடைய 'அச்' சாரியை + இயக்கம்.

கச்சி = மெய்யதன் இயக்கமாம் இறைமை. சிவம். சிவன்.

## கஞ்சம்



***கஞ்சம் = கம் + சம்.***
*மெய்யின் தன்மை / குறைவு + இயக்கத் தன்மை / சேர்வு /ஒலி. குறைந்த சத்தம். சிற்றொலி. தாள் அல்லது காலால் ஏற்படுத்தும் தாளம் போன்று, கருவியைக் கொண்டு கைகளால் ஏற்படுத்தும் சிறிய ஒலி. மற்ற இசைக் கருவிகளின் இசையோடு ஒத்திசைப்பது.*




## கடகம்

***கடகம் = கடு (மை) + அகம்.***
*கடுமையான காவல் கொண்ட உள்ளிடம். படைவீடு. கோட்டை. பாசறை.*

## கடிகை




***1. கடிகை = கடி + கை.***
*உறுதி / முன்னிலை + மெய்யின் தன்மை. முன்னணித் தலைவர்களை உருவாக்கும் சிறப்புப் பயிற்சிப் பள்ளி.*
***2. கடிகை = கடி + கை.***
*விரைவு + கை. விரைவாக நகரும் கைகளைக் கொண்டது, கடியாரம்.*



## கடைக்காட்சி

***கடைக்காட்சி = கடை + காட்சி.***
***ஓரக்கண்ணால் காண்பது. கண்காணித்தல். உளவு பார்த்தல். வேவு பார்த்தல்.***

## கணியம்

**கணியம் = கண் + இயம்.**
கண் + இயல்பு. கண்ணின் இயல்பு, அளவிடுவது.
கணியம் = அளவு. அளவிடுதல். கணக்கிடுதல்.



## கணையாழி



**கணையாழி = கணை + ஆழி.**
கணை = கண் + ஐ. கண்போன்று குழிந்த தன்மை. துளை. வட்டம்.
ஆழி = ஆழ் + இ. ஆழமாய் இருப்பது.
கணையாழி = வட்டமான குழிந்த ஆழமான வடிவம். (அருவப் பொருண்மை).
முத்திரை மோதிரம். (பருண்மையான பொருண்மை) வட்டமான குழிந்த வடிவத்துள், சின்னம்.
கிணறு, புயலின் கண் போன்றவற்றையும் கணையாழி எனலாமா?

## கண்டம்

**கண்டம் = கண் + தம்.**
மெய் மிக நெருங்கி இருத்தல் + தேகத் தன்மை.
மனித உடம்பில், கண் எனும் புலன் ஆழ்ந்து இருப்பதைப் போலவே, பூமியின் பரப்பில், (கண்டம்) நிலம் ஆழ்ந்து மிக நெருக்கமாக உள்ளது. மனித தேகத்தைப் போல் நிமிர்ந்து உயர்ந்த தன்மையுடன் உயிர்ப்புடன் உள்ளது.
கண்டம் = நிலம் எனும் மெய் மிக நெருக்கமாகி உயர்ந்து இருத்தல்.





## கண்டன்

**1. கண்டன் = கள் + த் + அன்.**
மெய் மிகை + தேகம் + ஆண்பால் விகுதி. மெய் மிகையாய்க் கொண்ட தேகத்தவன். வலிமையானவன். வீரன்.
**2. கண்டன் = கண்ட் (டு) + அன்.**
கட்டி + ஆண் பால் விகுதி. கட்டியானவன். உறுதியானவன். வலிமையானவன்.
(கண்டு = கள் + து).

## கண்ணன்



***கண்ணன் = கண் + அன்;***
*கண் (அருமை, கருமை) + ஆண்பால் விகுதி.*
*கண்ணன் = கண் போன்று அருமையானவன், கருமையானவன்.*



## கண்ணாறு

***கண்ணாறு = கண் + ஆறு.***
*துளை + நீர்ப்பாதை. ஏரி, கண்மாய் போன்ற நீர்த் தேக்கங்களில் இருந்து, கண் போன்ற வட்டமான துளையின் வழியே, நீர் வெளியேறும். அவ்வாறு, ஓடும் ஆறு, கண்ணாறு.*

## கண்ணியம்



***கண்ணியம் = கண் + நியம்.***
*கண் + ஒழுங்கு. அகத்தின் அழகு, முகத்தில் தெரியும். குறிப்பாக, கண்ணின் பார்வை, மனத்தைக் காட்டும்; முகத்தையே மாற்றும்.*
*கண்ணியம் = ஒருவரின் மரியாதைக்குரிய பண்பு. சபையில், ஒருவர் எப்படி நோக்குகிறார் என்பதைப் பொறுத்து, அவருக்கு மதிப்பும், மரியாதையும் அளிக்கப்படுகின்றது. கண்ணில் தெரியும் பெருமையும், சிறுமையும், தற்பெருமையும், அடக்கமும், பார்வையாளர்களின் கூர்மையான கண்களில் இருந்து தப்புவதில்லை.*



## கண்ணூறு

***கண்ணூறு = கண் + ஊறு.***
*கண்ணால் ஏற்படும் தீங்கு.*
*இது, கண்ணேறு, கண்மிச்சில், கொள்ளிக்கண், கண்திட்டி, கண்கொதி என பல்வேறு சொற்களாலும் அறியப்படும்.*
*“அந்திநின்று கண்ணூறழித்தா ளணிநீ*
*றளித்தே”.*
*(தணிகைப்புராணம் - களவு - 329)*
*மாலையில் நின்று, கண்ணால் ஏற்பட்ட தீங்கை, திருநீற்றைத் தந்து அழித்தாள்.*

## கதிரவன்



***கதிரவன் = கதிர் + அவன்.***
*கதிர் = க் + அதிர். மெய் + அதிர்வு.*
*கதிரவன் = மெய் அதிர்வைக் கொண்டவன். சூரியனைச் சற்று கூர்ந்து நோக்கினால், அது விரைவாய் அதிர்வதைக் காணலாம்.*

## கத்திரி கத்தரி



***கத்திரி = க் + அத் + திரி.***
*மெய் + 'அதன்' எனும் பொருளுடைய 'அத்' எனும் சாரியை + மாற்றம். மெய், மனத்தின் மாற்றம்.*
*கத்தரி = க் + அத் + தரி. மெய் + அதன் + வெட்டு. மெய், மனம் பிளவுபடுதல்.*
*கத்திரி / கத்தரி வெயில் காலத்தில், உடலும் மனமும் நிலையற்று மாற்றம் அடைந்து / உடல் தனித்திருந்து, எண்ணவோட்டம் பிளவுபடுகின்றது.*
*எனவே, எதையும் முடிவு செய்வதில் குழப்பம் ஏற்படுகின்றது. அதனால், முக்கிய முடிவுகளை, இக்காலத்தில் எடுக்க வேண்டாம் என கூறப்படுகின்றது.*

## கந்தம்

***1. கந்தம் = கம் + தம்.***
*மெய் தன்மை / சிறிய தன்மை + தேகத் தன்மை. சிறிய தேகத் தன்மை. பூந்தாது. மலரின் நுண்ணிய வாசத் துகள். மணம். கண்களுக்குப் புலனாகாத நுண்ணிய பூவின் தாது, காற்றினில் கலந்து, நாசியின் உணர்வு மொட்டுகளில் படிந்து, வாசனையை உணர்த்துகிறது.*
*"கந்தமாமலர் தூவிக் கைதொழும்*
*சிந்தையார்வினை தேயுமே".*
*(இரண்டாம் திருமுறை - திருஞானசம்பந்தர் தேவாரம் - பாடல் எண்.8)*
*"மணமலர்த் தூவி வழிபடும் மனத்தை உடையவரின் வினைகள் அழியும்".*
***2. கல் + தம் = கன்+ தம் = கந்தம்.***
*கல் போன்ற தேகத் தன்மை. தூண். மலை.*
*"கலிகெழு கடவுள் கந்தங் கைவிட".*
*(புறநானூறு. 52)*
*"ஒலிபொருந்திய தெய்வம் தூணைக் கைவிட".*



## கந்தருவம்



**கந்தருவம் = கந்தம் + அருவம்.**
கந்தம் = கம் + தம். மெய்யின் தன்மை / குறைவு + தேகத்தின் தன்மை. நுண்மையான தேகம். (கந்தன் = சிறிய தேகத்தவன்)
அருவம் = அரு + அம். உருவமில்லா + தன்மை.
கந்தருவம் = நுண்மையான, அதே சமயம், பருண்மையான, உருவமற்ற தன்மை. இசை. இசை என்பது, நுண்மையான பருண்மை வெளிப்பாடு. (Music is a subtle material expression)
"கந்தருவம்" என்பதும் தமிழ்ச்சொல்லே! அல்லது தமிழ்ப்படுத்தப்பட்டச் சொல்லே. வேடிக்கை என்னவென்றால், தமிழ்ச் சொல்லின் இறுதி ஒற்றை நீக்கிவிட்டால், சமக்கிருதச் சொல்லாய்த் தோன்றும். சில சமக்கிருதச் சொல்லின் இறுதியில், ஒற்றைச் சேர்த்தால், தமிழ்ச் சொல்லாய்த் தோன்றும். காரணம், ஒரு காலத்தில், இரண்டு மொழிகளும், ஏராளமான சொற்களை, ஒன்றிலிருந்து மற்றொன்று பரிமாற்றம் செய்துள்ளன.



## கந்தன்

***1. கந்தன் < கன் + த் + அன் < கல் + த் + அன்.***
கல்போன்ற + தேகம் + உடையவன்.
உறுதியான அசைவற்ற உடல், உயிரை, மெய்யை உணர்த்தும்.
***2. கந்தன் = க் + அந்தன்.***
மெய்யின் + முடிவானவன்.
மெய்ப்பொருளானவன்.
***3. கந்தன் = க் + அம் + த் + அன்.***
மெய் + தன்மை + தேகம் + ஆண்பால் விகுதி. மெய்யின் தன்மையிலான தேகத்தவன்.
இறைமை தேகத்தினன். இறைமையாய் இயங்குபவன்.
இவ்வாறு, ஒற்றைச் சொல்லே பலவாறு பிரிதலால், பல பொருள்கள் தரும்.

## கப்பணம்



***கப்பணம் = க் + அப்(பு) + அண் + அம்.***
மெய் + மேல் நிறைத்து + மிகை நெருக்கம் + தன்மை. மெய்யின் மேல் மிக நெருக்கமாக நிறைந்திருக்கும் தன்மை.
ஆனையின் தந்தம் போன்று, கூரிய பெரிய உறுதியான நெருஞ்சி முள். அத்தகைய வடிவில், இரும்பால் செய்யப்பட்ட ஆயுதம். இரும்பு முள் பந்து. அதை, ஒரு சங்கிலியில் பிணைத்து சுழற்றினால், பகைவர்க்கு பெருங்காயங்களை விளைவிக்கும்.
"கட்டியங் காரன் வேழம்
காய்ந்தனன் கடுக உந்திக் கப்பணம் சிதறினானே".
(சீவகசிந்தாமணி - நாமகள் இலம்பகம் - சச்சந்தன் வரலாறு - 285)
கட்டியங்காரன், ஆனையை விரைந்துச் செல்ல முடுக்கி, "கப்பணம்" எனும் இரும்பு முட்பந்தை, சச்சந்தனை நோக்கி சுழற்றினான்.

## கமகம்



***1. கமகம் = க் + அம் + அகம்.***
*மெய் + தன்மை + உள்ளே. சுரங்களை, வாய்க்குள்ளேயே, வலிவு, மெலிவு, சமன் ஆகிய மூன்று நிலைகளிலும் ஒலிப்பது. மற்றும், ஒரு சுரத்திலிருந்து மற்றொரு சுரத்திற்கு மாற்றும் முயற்சியை, நெருக்கமாக அவதானித்தல். குரல்வளையை ஆயத்தம் செய்தல்.*
*2. கமகம் = கம் + அகம். குறைவு + உள்ளே. வாய்க்குள்ளேயே மெல்லமாக ஒலித்தல்.*
*கமகம் = உள்ளோசை. கம்பிதம் ( கம் + ப் + இதம். குறைவாய் கொள்ளும் தன்மை). கம்பலை (கம் + ப் + அலை. குறைவாய் கொண்டு மேலும் கீழுமாதல்).*



## கரணம் 1

***கரணம் = கர(ம்) + அண் + அம்.***
*விரல்கள் + மிக நெருக்கம் + தன்மை. யாழில், விரல்கள் மிக நெருங்கி இயங்குவது.*
*யாழில் கரணமுடன், மத்தளக் கரணம், நாட்டியக் கரணம் எனவும் உள்ளன. அவைகளும் வெவ்வேறு விரல்களின் வெவ்வேறு நெருக்கங்களைக் குறிக்கின்றன போலும்.*

## கரணம் 2



***1. கரணம் = க் + அர் + அண் + அம்.***
*மெய் + பிரி + நெருங்கு + தன்மை. மெய் பிரிந்து நெருங்கும் தன்மை. தாவுதல். தலைகீழாக திரும்புதல் (கழைக் கூத்தாடிக்கு, கரணம் தப்பினால் மரணம்). உடனடி காரணம்.*
*2. கரணம் = கரண் + அம்.*
*கரண் = க் + அரண். மெய் + சூழல்.*
*கரணம் = மெய் + காக்கும் + தன்மை. மெய்யை + சூழும் + தன்மை. திருமணம். கலவி.*



## கரிகாலன்

***கரிகாலன் = கரி + கால் + அன்.***
*கரி = ஆனை*
*கரிகாலன் = ஆனையை தன் காலாய் கொண்டவன். ஆனையின் மீதமர்ந்து போரிட்டவன்.*
*தொடர்பில்லாத பல வடக்கு மன்னர்களும், கரிகாலன் வழிவந்தவர்கள் என கூறிக்கொண்டது, அவர்களும் ஆனையை போருக்கு பயன்படுத்தியதாலோ என்னவோ.*

## கரிசலாங்கண்ணி



**கரிசலாங்கண்ணி = கரிசல் + ஆம் + கண்ணி.**
கண்ணி = கண் போல் ஆழமாய்ப் போகும் வேர்.
கூந்தலைக் கறுப்பாக்கும் வேர்.



## கரும்பி வேம்பி

**கரும்பி = கரும்பு + இ.**
கரும்பைப் போன்று + இருப்பவள். இனியவள். கரும்பி - கரும்பன் - கரும்பர்.
வேம்பி = வேம்பு + இ. வேம்பைப் போன்று + இருப்பவள். கசப்பவள். மருந்தாகுபவள். வேம்பி - வேம்பன் - வேம்பர்.



## கரைக்கூறு

**கரைக்கூறு = கரை + கூறு.**
ஆற்றங் கரைநிலப் பிரிவு(கள்).




## கலம்

**1. கலம் = க் + அல் + அம்.**
தனித்த பொருள் / மெய் + அதிர்தல் / இயங்குதல் + தன்மை. தனித்த மெய்யின் இயங்கு தன்மை. இலங்கைத் தமிழ் வழக்கில், உயிரணு.
2. கலம் = கல் + அம். நிலையான / உறுதியான + தன்மை. படகு. கப்பல்.
3. கலம் = க் + அலம். மெய் + இல்லா தன்மை. வெற்றிடம் கொண்ட பாத்திரம்.
ஒரு சொல்லிற்கு பல பொருண்மைகள் வருவதன் காரணம், அதன் வேறுபட்ட பிணைப்பும், பகுப்புமாகும்.

## கலாபம்

**1.கலாபம் = கல் + ஆப் + அம்.**
மெய்யின் அசைவின்மை + விண்வெளியாகும் + தன்மை. உடல், புலன், மனம் ஆகியவற்றின் அசைவின்மையில் ஒளிரும், அகத்தின் வண்ணமயம். ஞானம்.
2.கலாபம் = க் + அல் + ஆப் + அம். மெய் அசைவால், மனம் கொள்ளும் தன்மை.
பலவண்ணத் தோகை கொண்ட மயில்.
எனவே, ஞானி, முருகனின் வாகனம்.



## கலாம்

***கலாம் = கல் + ஆம்.***
*கல்லாதல். மனம் இறுகுதல். உறுதியாதல். முரணாதல். மாறுபடல். போரிடல். சண்டையிடல். ஊடல்.*
*“செற்றமும் கலாமும் செய்யாது அகலுமின்”.*
*(மணிமேகலை - விழா அறை காதை- 63)*
*கோபமும், கூச்சலும் செய்யாமல் விலகுங்கள்.*





## கலாவல்

***கலாவல் = கல் + ஆவ் + அல்.***
*இறுக்கம் + ஆக்கும் + தொழிற்பெயர் விகுதி. அடர்த்தியாக்குதல்.*
*“அகல் இரு வானத்து வீசு வளி கலாவலின் முரசு அதிர்ந்து அன்ன” (குறிஞ்சிப்பாட்டு - 48,49)*
*“விரிந்து இருக்கும் வானத்தில் வீசுகின்ற காற்று, மேகத்தை இறுக்கமாக்குவதால், முரசு அதிர்வதைப் போன்று ஒலித்தது”.*

## கலுழ்

***1. கலுழ் = கல் + உழ்.***
*அசையாமை + புறம் ஆழ்தல். அசைவற்ற கண்கள் கண்ணீர் சிந்துதல். சோகத்தில், வெறித்த கண்களில் இருந்து நீர் புறம் ஒழுகுதல். மன வலியால் அழுதல்.*
***2. கலுழ் = க் + அல் + உழ்.***
*மெய் + துன்பம் + புறம் ஆழ்தல். உடலின் துன்பத்தால், கண்ணீர் உகுத்தல். உடல் வலியால் அழுதல்.*
*கண்தாம் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்*
*தாம்காட்ட யாம்கண் டது. (குறள்.1171)*
*பொருள்:*
*கண்கள் செய்த குற்றத்தால்தானே காதல் நோய் ஏற்பட்டது? அதே கண்கள் அந்தக் காதலரைக் காட்டுமாறு கேட்டு அழுவது ஏன்?.*
*கலை மலி காரிகை கண் முத்த மாலை கலுழ்ந்தனவே – (திருக்கோவையார். 397).*
*பொருள்: கலையில் சிறந்த வளமையானவளின் கண்கள், முத்து மாலை போன்ற கண்ணீர்த் துளிகளை சிந்தினவே!*



## கவனகம்



***1. கவனகம் = கவனம் + அகம்.***
*கவனம் = க் + அவன் + அம். மெய் + அவன் + தன்மை. மெய்யாய் / மெய்யுடன் ஒன்றி இருக்கும் தன்மை. இருப்புடன் / இருத்தலுடன் ஒன்றும் தன்மை.*
*அகம் = மனம் / சிந்தை/ அறிவு.*
*கவனகம் = மெய்யுடன் / இருப்புடன் / இருத்தலுடன் / இறைமையுடன் ஒன்றிய மனம் / சிந்தை / அறிவு. சிதறா மனம். ஒன்றியச் சிந்தை.*
***2. கவனகம் = கவ்(வு) + அன் + அகம்.***
*பிடித்துக்கொள் + ஆண்பால் விகுதி + மனம். பிடித்துக் கொள்பவன் மனம். பல வெவ்வேறு விவரங்களையும் ஒருங்கே நினைவில் கொள்பவர்.*



## கவின்

***கவின் = கவ் + இன்.***
*கவ்வுதல் + இனிமை. மனதைக் கவ்வும் இனிமை. மனம் பறிக்கும் அழகு.*

## களப்பிரர்



***களப்பிரர் = களம் + பிர் + அர்.***
*கள் = க் + அள். மெய் + மிகை.*
*அம் = தன்மை.*
*களம் = கள் + அம். மெய்யின் மிகை. போர்க்களம்.*
*பிர் = பிரியும்*
*அர் = பலர்பால் விகுதி.*
*களப்பிரர் = போர்க்களம் பிரிந்தவர்.*
*கலிங்கப்போரின் பின்பு, மன்னன் அசோகன், தன் வெற்றிப்படையைக் கலைத்து, புத்த மதத்தைத் தழுவச்செய்து, நாடெங்கும் அனுப்புகிறான். அவர்கள் புத்த மதத்தைப் பரப்பியப் பின்பு, அவர்கள் வழிவந்தவர்கள் ஆட்சியாளர்களாகவும் மாறுகின்றனர். இயல்பாகவே, பிராமணர்களுக்கு எதிராக செயல்பட்டனர். பிரம்மதேயங்களைப் பிடுங்கி, உழைக்கும் மக்களுக்கே மீண்டும் வழங்கினர். பௌத்தர்களுடன் சமணர்களும் சேர்ந்து கொண்டனர். தமிழின் ஐம்பெரும் காப்பியங்கள், திருக்குறள் தோன்றியது இவர்கள் காலத்தில்தான். தமிழ் இலக்கியத்திற்கு, அது பொற்காலம். பின், அதிகாரம் தவறாகப் பயன்படுத்தப்பட்டது போலும்.*
*களப்பிரர்களுக்குப் பின் வந்த பாண்டியர்கள், சமணர்களை கழுவேற்றினர் மற்றும் சோழர்கள், , புத்த பிக்குகளை நாட்டைவிட்டு துரத்தினர். துரத்தப்பட்ட பிக்குகள், இலங்கையில் தஞ்சம் அடைந்தனர். அதனால் வந்த வன்மம்தான், இலங்கையில் தமிழர்க்கு எதிராக, இன்றும் தொடர்கின்றது.*
*விடுதலைப் ‘புலிகள்’ என்றதும், சோழமரபின் நீட்சியே.*

## களரி



***1. களரி = கள் + அர் + இ.***
*மெய்மிகை + பலர்பால் விகுதி + இருத்தல். கூட்டமாய் இருத்தல். அவை. கச்சேரி. கூட்டம்.*
***2. களரி = கள் + அரி.***
*மெய் மிகை + அறு. கூட்டம் மற்றும் படையைக் கலைக்கும் முறை. போர்க்கலை.*
***3. களரி = க் + அள் + அரி.***
*மெய்யை + மிகையாக + அரித்தல். மண்ணின் வளம் அரித்தல். வளமற்ற நிலம்.*



## கள்வி

***கள்வி = க் + அள் + வ் + இ***
*= மெய் / பொருள் + அள்ளி + புறம் + இருப்பவள். திருடி. கள்வன், கள்வள் / கள்வி, கள்வர்.*

## கற்பற்று



***1. கற்பற்று = கல் + பல் + து.***
*கல், பல தேகமாய் வெளிப்படுவது. மாணிக்கக் கல்லில் உள்ள இழையால், ஒன்றிற்கு மேலான பகுதிகளாய்த் தோன்றுவது. மாணிக்கக் கல்லில் உள்ள குற்றம்.*
***2. கற்பற்று = கற்பு + அற்று.***
*உறுதி + இன்மை. உள்வாங்கும் ஒளியை, முழுமையாய் வெளிப்படுத்தாமல், எங்கோ ஓரிடத்தில் மிகையாக தெறிக்க விடுதல். மாணிக்கக் கல்லின் குற்றம்.*



## கற்பூரம்

***கற்பூரம் = கல் + பூரம்.***
*கல் = க் + அல். மெய் + அன்மை / அசைவின்மை. மெய்யின் அதிர்வின்மை. வெறுமை / இறுக்கம்.*
*பூரம் = ப் + ஊர் + அம். கொண்டது + விரிந்து பரந்திருக்கும் + தன்மை. முழுமை.*
*1. கற்பூரம் = (எரிந்து) அன்மையாகி, முழுவதும் வெறுமையாவது.*
*2. கற்பூரம் (வாழை) = கல்போல், முழுவதும் இறுக்கமாய் இருப்பது.*
*ஒற்றைச் சொல், இரண்டு வெவ்வேறு பொருளைக் கொண்டுள்ளன.*

## கற்றளி



***கற்றளி = கல் + தளி.***

*தளி = த் + அளி. தேகம் + தருதல்.*

*(தளிப்பெண்டிர். தம் தேகத்தை இறைக்காக அளித்தப் பெண்கள்).*

*கற்றளி = கல்லால் தேகத்தை அளித்தல். கல்லால் தெய்வ உருவையும், உறைவிடத்தையும் எழுப்புதல். கற்கோயில்.*



## கன்மம் கன்மயம்

***1. 1. கன்மம் = கல் (ன்) + ம் + அம்.***

*உறுதி + கொண்டு மூடிய + தன்மை. மன இறுக்கம். மனம் இளகாமை.*

***1.2. கன்மம் = க் + அல் (ன்) + ம் + அம்.***

*மெய்யின் + அதிர்வு + கொண்டு மூடிய + தன்மை. வினைத்தன்மை. கருமம். ஊழ்.*

***2. 1. கன்மயம் = கல் (ன்) + மை + அம்.***

*கன்மையம் -> கன்மயம். உலகம் கல் தன்மையானது. உலகம் கருணை அற்றது.*

***2. 2. கன்மயம் = கல் (ன்) + மையம்.***

*கடினமான மையம். உறுதியான மையம். இரக்கமில்லா மனம்.*

## கன்னி நன்னி



***1. கன்னி = கல் + இ.***

*கல்போல் அடர்த்தியானவள். கன்னி - கன்னன் - கன்னர். கல்லி எனலும் தகும்.*

***2. நன்னி = நல் + இ.***

*நல்லவள். நன்னி - நன்னன் - நன்னர். நல்லி எனலும் தகும்.*



## காசினி

***காசினி = காசம் + இனி.***

*காசம் = க் + ஆச் + அம். மெய் + இயக்கம் ஆகும் + தன்மை. மெய்யின் இயங்கு தன்மை.*

*காசினி = மெய்யின் இயங்கு தன்மைக்கான இனிப்பு. காசினிக்கீரை, உடலுக்கு ஆற்றல் அளிக்கும் இனிப்பான சர்க்கரையை, ஒழுங்கு செய்து, திறனைச் சேமிக்கச் வைத்து, உடலைச் சுறுசுறுப்பாக்கும். நீரிழிவு நோயைப் போக்கும்.*

## காணம்

**காணம் = காண் + அம். காணும்**
அழகு /தன்மை. காண்பதற்கு அழகானது / காண்பதற்கு ஏற்றது.
பொற்காசு.
“காணம் இலிஎனக் கைஉதிர்க் கோடலும்”.
(மணிமேகலை - ஆதிரை பிச்சை இட்ட காதை - 5)
பொற்காசு இல்லாதவன் என கை உதறிவிடவும்.





## காண்டீபம்

**காண்டீபம் = காள் + தீபம்.**
காள் = காற்று.
தீபம் = தீ + கொள்ளும் + தன்மை. தீயைக் கொள்ளும் தன்மை.
காண்டீபம் = அம்பு, காற்றின் ஊடே விரைகையில், தீப்பற்றிக் கொள்ளும் தன்மை. தீ அம்புகளை ஏவும் வில்.
அருச்சுனன், காண்டீப வில்லைப் பயன்படுத்தியதாக கூறும், மகாபாரத இதிகாசம்.

## காதல்

**காதல் = க் + ஆத் + அல்.**
மெய் + தேகமாகும் + தொழில் பெயர் விகுதி. மெய் தேகமாதல். மெய்யின் உணர்வை தேகம் உணர்தல். தேகம் நுண்ணுணர்வாதல். அதனால்தான், காதலர்கள், காதல் நினைவோடேயே வாழ முடிகின்றது போலும்.





## காத்தி சாத்தி

**1. காத்தி = கா + தி.**
காட்டில் உள்ள பெண். முல்லைப் பெண். காத்தி - காத்தன் - காத்தர்.
**2. சாத்தி = சா + தி.**
இயக்கமுள்ளவள். வணிகப்பெண். சாத்தி - சாத்தன் - சாத்தர்.
காத்தி, சாத்தி எனும் புணர்மொழிகளில், ‘த்’’ எனும் ஒற்று மிகுகின்றது.

## காமம்



***காமம் = காம் + அம்.***
*காம் = க் + ஆம். மெய் + ஆகும்.*
*அம் = தன்மை.*
*காமம் = மெய்யாகும் தன்மை. மெய்யின் அசையாமை. மெய்யுணர்வு.*
*ஒருவர் உடலிலும், கண்ணிலும் வெளிப்படும் ஆசை உணர்ச்சி, மற்றவர் உடலிலும், நெஞ்சிலும் எதிரொலித்து, இருவரிலும் ஏற்படுத்தும் அசையாமையும், அமைதியும், காமம் எனலாம். தந்திர யோகத்தின் மையம், காமம்.*

## காயகற்பம்



***காயகற்பம் = காயம் + கற்பம்.***
*காயம் = காய் + அம். காயின் தன்மை. மனித உடல், காயின் தன்மையானதே. அதில், மெய்யுணர்வு மேலோட்டமாகவே இருக்கும்.*
*உடல், ஞானத்தால் மட்டுமே பழுக்கும். பழுத்த உடலில், மெய்யுணர்வு ஆழ்ந்தும் முழுமையாகவும் இருக்கும்.*
***கற்பம் = கல் + ப் + அம்.***
*கல்போல் உறுதியாய் கொண்டிருத்தல்.*
*காயகற்பம் = உடலை, நோய்கள் எளிதில் தாக்காதவாறு, உறுதியாய் வைத்தல். அழியா தேகம் என்பது, சூட்சும தேகம் மட்டுமே. தூல தேகம் அல்ல. எலும்பும், சதையுமான எல்லா தேகமும் அழிவதே. சித்தர்களின் உடலும் அழிவதே. சித்தர்களின் ஆன்மதேகம் மட்டுமே அழியாதது.*

## காரான் காரன் காரி



***அ) காரான் = கார் + ஆன்.***
*கருமை + ஆனது.*
*கருமையானது. எருமை. மாடு. ஆனை. கரிய மா.*
***ஆ)***
***1. காரன் = கார் + அன்.***
*கருமை + ஆண்பால் விகுதி. கருமையானவன்.*
***2. காரன் = க் + ஆர் + அன்.***
*மெய் + பிரி + ஆண்பால் விகுதி. மெய்யாய் தனித்து இருப்பவன்.*
***இ)***
***1. காரி = கார் + இ.***
*கருமை + பெண்பால் விகுதி. கருமையானவள்.*
***2. காரி = க் + ஆர் + இ.***
*மெய் + பிரி + பெண்பால் விகுதி. மெய்யாய் தனித்து இருப்பவள்.*

## காலதர்

***காலதர் = கால் + அத் + அர்.***
*காற்று + அதன் + பிரிவு. காற்று வருவதற்கான இடைவெளி. சாளரம். சன்னல்.*
*"மான் கண் காலதர் மாளிகை இடங்களும்" - (சிலம்பு - இந்திர விழவு ஊர் எடுத்த காதை - வரி. 8)*





## காலுக்கழுத்து

***காலுக்கழுத்து = கால் + உக் + கழுத்து.***
*கால் + அதன் + கழுத்து. கணைக்கால்.*

## காழ்ப்பழம்

***காழ்ப்பழம் = காழ் + பழம்.***
*('ப்' எனும் மெய் மிகுகின்றது)*
*காழ் = க் + ஆழ். மெய்யின் + ஆழம்.*
*காழ்ப்பழம் = மெய்யின் ஆழம் வரை பழமாய் இருத்தல். (மையத்தில் கொட்டை இன்மை). கொய்யாப்பழம்.*



## காளாஞ்சி செல்லம்



***1. காளாஞ்சி = க் + ஆள் + ஆம் + சி.***
மெய் + ஆள்வது + ஆகும் + இயக்கம். வெற்றிலை, பாக்கு, சுண்ணம் கலந்து உண்டதும், உடலில் ஒரு மெல்லிய உணர்வு தோன்றும். அது, மெய்யுணர்வின்பால் படும்.
காளாஞ்சி = க் + ஆள் + அஞ்சி. மெய் + ஆளும் + ஐந்து. வெற்றிலை, பாக்கு, சுண்ணம், இலவங்கம், ஏலம் என ஐந்தும் உடலை நலமுடன் வைக்குமோ?
வெற்றிலைப் பெட்டி.
***2. செல்லம் = ச் + எல் + அம்.***
இயக்கம் + உயர்ந்து அதிர்தல் + தன்மை. இயக்கம் விரைந்து அதிர்தல். உடலின் இயக்கம் நுண்மையாய் அதிர்தல். பிற புலன்கள் அடங்க, மெய்யின் உணர்வு மிகும். ஆழ்ந்த சிந்தனை பிறக்கலாம். வெற்றிலைப் பெட்டி.

## கிடாரம்

**கிடாரம் = க் + இடு + ஆரம்.**
மெய் / பொருள் + இடுகின்ற + வட்டம். பொருளை இடுகின்ற வட்டமான கலன், கொப்பரை. கரும்புச்சாறு பனஞ்சாறைக் கொதிக்க வைத்து, கெட்டியாக்கி, வெல்லமாகப் பிடிக்க உதவும் வாய் அகன்ற பெரிய கலம்.





## கிராமம்

**கிராமம் = க் + இர் + ஆம் + அம்.**
க் = மெய் / பொருள்
இர் = இருத்தல்
ஆம் = ஆகும்
அம் = தன்மை.
கிராமம் = மெய் / பொருள் இருத்தல் ஆகும் தன்மை. மனிதர்கள் இருக்கும் தன்மை. பொருள் இருந்து ஆகும் தன்மை. வளம் ஆகும் தன்மை. மனிதர்கள் ஓரிடத்தில் நிலைத்து இருப்பதால் வளமாகும் தன்மை கொண்டது, கிராமம்.

## கிளிக்கத்தி

**கிளிக்கத்தி = கிளி + கத்தி.**
கிளியின் அலகு (போன்ற வளைந்த) கத்தி.





## குடந்தம்

**குடந்தம் = குடம் + த் + அம்.**
குடம் போன்ற + தேகம் + தன்மை. கவிழ்த்து வைத்த குடம் போல், உடலை நன்றாக வளைத்து, கூப்பிய கைகளால் வணங்குதல்.

## குடவறை குடவரை

***1. குடைவறை -> குடவறை.***

*குடைவறை = குடை + அறை. நிலத்துள் / கல்லில் குடைந்து உருவாக்கும் அறை. நில அறை, நிலவறை. கோபுரத்தில் உள்ள சிற்றறை.*

*(தொல்.எழுத்து.புணரியல். நூற்பா. 141. எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே*

*உடன்படு மெய்யின் உருவுகொளல் வரையார். "குடையறை" என்றாகாமல், "குடைவறை" என்றானதன் காரணம், "குடையறை" என்பது "குடைகளை வைக்கும் இடம்" என பிறிது ஒரு பொருளைத் தந்துவிடும். )*



***2. குடைவரை -> குடவரை.***

*குடைவரை = குடை + வரை. குடைதல் + கல் / மலை / சிற்பம். கல், மலையைக் குடைதல் + சிற்பம் செதுக்கல், வரைதல். மலையைக் குடைந்து செய்த சிற்ப வேலைப்பாடு.*

## குப்பைமேனி



***குப்பைமேனி = குப்பை + மேனி.***

*குப்பை = கு + பை. மெய்யின் வெளிப்பாடு + கொண்டது ஐந்து.*

*மேனி = மேல் + இ.*

*குப்பைமேனி = மெய்யின் வெளிப்பாட்டில், மேலே, ஐந்தைக் கொண்டது. இலையின் மேல் ஐந்து நரம்புகளைக் கொண்டுள்ளது, குப்பைமேனி இலை. 'குப்பை' என்றால் 'குவியல்' என்றும் பொருள் உண்டு. குப்பைமேனிச் செடியின் இலையடுக்குகளும் குவிந்தத் தன்மையை உடையதாய் இருக்கும். குப்பைமேனி, தோல் நோய்களைப் போக்கும். குப்பைமேனி, கோழையை அகற்றும். இதற்கு, அதனால், 'கோழைப்பூண்டு' என்றும் பெயருண்டு. இதன் வேர், குடல்புழுவை நீக்கும். பூனைகள், தம் வயிற்றில் உள்ள புழுக்களை நீக்க, குப்பைமேனியின் வேரைச் சாப்பிடும் போலும். அதனால், இதற்கு 'பூனைவணங்கி' என்றும் பெயருண்டு.*

## குயில்

***குயில் = கு + இல்.***

*மெய் வெளிப்பாடு + இன்மை. வெளிப்பாடு இன்மை.*

*1. குயில். இருளில், மர நிழலில் இருந்து, தன்னை வெளிக் காட்டாமல், இனிய ஓசை எழுப்பும் கருமையான பறவை.*



*2. கோகிலம் = கோ + க் + இலம். வானம் + மெய் + இல்லாத் தன்மை. வெளியில், பறவையின் உடல் காணாமை.*

*3. சொல். சொல் என்பது பருண்மையான பொருளைக் குறித்தாலும், அத்திடப் பொருள் மெய்கொண்டு வெளிப்படுவதில்லை. நிழல் பிம்பமே, மனதில் தோன்றும்.*

*4. துளை. மரப் பொந்தில், பொருண்மை இல்லை.*

*5. மேகம். தனக்கென ஓர் உருவம் அற்றது. கருமையானது. குயிலின் இனிமையான குரலைப் போன்றே, மழையின் ஒலியும், பொழிவும் இனிமையானது.*

## குரவன் குரத்தி



***1. குரவன் = க் + உர(ம்) + அன்.***
மெய் + வலிமை + ஆண்பால் விகுதி. வலிமையான மெய்யை உடையவன். அசையாத, அசைக்க முடியாத உடலே, மெய். சமணர் தலைவன்.
***2. குரத்தி = க் + உர(ம்) + தி.***
மெய் + வலிமை + தேகமாய் இருப்பவள். மெய் வலிமையுடைய தேகத்தினள். சமணர் தலைவி.
''மெய்'' என்றால் ''உடல்'' என்று ஒரு பொருளும், உடல், புலன்களைக் கடந்து நுண்மையான, மெல்லிய உணர்வைத் தரும் ''உள் இறைமை'' (மெய்) என்று மற்றோர் பொருளும் தரும். இங்கு குறிப்பிடுவது, இரண்டாம் பொருளில்!



## குளிறு

**குளிறு = க் + உள் + இறு.**
மெய் + உள்ளே + இறுக்கமாய் இருத்தல். குழிக்குள் ஒடுங்கி இருப்பது, நண்டு.

## கூடாரம்



**கூடாரம் = கூடு + ஆரம்.**
கூடு = ஒன்று சேர்தல். குவிதல். பறவைகள் ஒன்று சேர்த்த நார், வைக்கோல், குச்சிகளின் அமைப்பு. உறைவிடம்.
ஆரம் = வட்டம்.
கூடாரம் = வட்டமான உறைவிடம். மையத்தில் ஒன்று சேரும் அமைப்பைக் கொண்ட உறைவிடம், கூடாரம்.

## கேண்மை



**கேண்மை = கேள் + மை.**
கேட்கும் + பண்புப் பெயர் விகுதி. கேட்கும் பண்பு. ஏற்கும் பண்பு. இருவரும், ஒருவர் மற்றவரிடம், பேசி, கேட்கும் தன்மை. நட்பு. அறிவுரை. ஆலோசனை. ஆறுதல். பாராட்டுதல். இடித்துரைத்தல்.
சொன்மை எளிது. கேண்மை கடிது.
காது கொடுத்து, கவனமாய் கேட்பவர்களே நட்பாக இருக்க முடியும்.

## கேளிர்

***1. கேளிர் = கேள் + இர்.***
கேட்டு + இருப்பவர்கள். கேட்பவர்.
***2. கேளிர் = க் + ஏள் + இர்.***
மெய் + மிக உயர்ந்து மிகுதல் + இருப்பவர். மெய் பூரிப்படைபவர்கள். தன்னுடைய சொந்தத்தைக் கண்டதும், மனம் மகிழ்ந்து, உடல் பூரிக்கும்.

## கைக்கழுத்து



**கைக்கழுத்து = கை + "இன்"**
எனும் பொருள் கொண்ட ஒற்று, "க்" மிகும் + கழுத்து. கையின் கழுத்து. மணிக்கட்டு.
*(கால்கழுத்து = கணைக்கால், கணுக்கால்)*

## கைத்தாய்



**கைத்தாய் = கை + தாய்.**
கையில் கொண்டு வளர்ப்பவள். தூக்கி வைத்திருப்பவள். வளர்ப்புத்தாய். வளர்ப்புத் தாயின் பிற பெயர்கள்: கைத்தாய், தாதி, செவிலி, கோடாய், பின்னனை.
"தாதி, செவிலி, கோடாய், பின்னனை
காதலி னமர்ந்த கைத்தாய்ப் பெயரே".
*(பிங்கல நிகண்டு - பதிவு. 211)*
தாதி = த் + ஆத் + இ. தேகம் ஆத்து இருப்பவள். உணவு ஊட்டி வளர்ப்பவள்.
செவிலி = செவ் + இல் + இ. செம்மை வீட்டைக் கொண்டவள். வாழ்வியல் விழுமியங்களைக் கற்றுத் தருபவள்.
கோடாய் = கோடு + ஆய். குன்று + தாய்.
மார்புக்குன்றால் பால் ஊட்டும் தாய்.
பின்னனை = பின் + அன்னை. வயிற்றுத்தாய்க்குப் பின், வளர்க்கும் தாய்.

## கைந்நாகம்



**கைந்நாகம் = கை + நாகம்.**
கையே நாகம் போன்று வளையும் தன்மையுடைய தும்பிக்கை கொண்ட ஆனை.
"கைந்நாகம் துஞ்சும் கமழ்காந்தள் அம் சாரல் போகி".
(சீவக சிந்தாமணி - பதிகம் 17-2)
"ஆனைகள் உறங்கும், காந்தள்மலர்கள் மணம் கமழும், அழகிய சாரலைக் கடந்து" சென்றான், சீவகன்.



## கைலாயம் கயிலாசம் கைலை கயிலை

**கையிலாயம் = கை + இல் + ஆஇ + அம்.**
மெய் ஐந்தாதல் + இன்மை + ஆகி இருத்தல் + தன்மை.
மெய் பிரிதல் இன்மையாய், இருக்கும் தன்மை. அகம் புறம் பிரிதல் இன்றிய முழுமையான உணர்வு.
தியானத்தால், உடல், மனம் இழக்க, வரும் மொத்த உணர்வு.
பிரபஞ்ச உணர்வுநிலை.

## கொங்கு

**கொங்கு = க் + ஒன் + கு.**
மெய் + ஒன்றாய் + மெய் உள்வாங்கி குறுகுதல்.
மெய் தனித்தும், உள்வாங்கியும் இருத்தல் (அருவப் பொருண்மை).
குன்று, மலை தனித்து அமைதியாய் இருப்பதாயும், மேல்பகுதி குறுகியும் உள்ளது. எனவே, கொங்கு = குன்று / மலை.
சிறுங்குன்றம் போன்ற பண்புடன் இருப்பதால், கொங்கு + ஐ = கொங்கை. பெண்ணின் தோள் அல்லது மார்பகம்.
மலர்மொட்டும், அத்தன்மையால், கொங்கெனும் பெயர் கொள்ளும்.
கொங்கன் = கொங்கு + அன். மலையன். மலைநாடன். மலையமான்






## கொட்டகாரம்

**கொட்டகாரம் = கொட்டகை + ஆரம்.**
கொட்டகை = கொள் + தகை. கொள்ளத்தக்கது. தங்குமிடம்.
ஆரம் = வட்டம். அணி.
கொட்டகாரம் = வட்ட வடிவில் / அணியாக உள்ள தங்கும் இடம்.

## கொண்டல்



**கொண்டல் = கொள் + த் + அல்.**
கொள் + தேகம் + காற்று. தேகம் கொள்ளும் காற்று. நீர்மை கொண்ட காற்று. மேகத்தைக் குளிர்வித்து மழையைக் கொண்டு வரும் காற்று. கீழைக் காற்று.



## கொண்டி

**கொண்டி = கொள் + தி.**
கொள்ளும் + தேகமாய் இருத்தல். திருடி.

## கொண்டை



**கொண்டை = கொள் + தை.**
எடு + பிணை. ஒன்று சேர்த்து முடி.



## கோயம்புத்தூர்

**கோயம்புத்தூர் = கோ + அம் + புது + ஊர்.**
மன்னன் + 'உடைய' எனும் பொருளுடைய 'அம்' எனும் சாரியை + புதிய + ஊர். மன்னனின் புதிய ஊர்.

## கோனோலை



**கோனோலை = கோன் + ஓலை.**
அரசன் ஓலை. அரசனின் ஆணை.
அரசாணை = அரச்(சு) + ஆணை.

## சதுராலை



***சதுராலை = சதுரம் + ஆலை.***

*சதுரம் = ச் + அத் + உரம். இயக்கம் + அதன் + உறுதி. இயக்கம் அடங்கிய நிலை. (நன்றி திரு. கணபதி தபதி) சம நிறை, சமத் தூரம், சமக் கோணம் கொண்ட ஒன்றே நிலைக்கும். சதுரம் மற்றும் கனசதுர வடிவமே உறுதி மற்றும் நிலைத்த தன்மைகளை உருவாக்கும்.*

*இயக்கத்தின் இயங்கு நிலை, வட்டம், கோளம்.*

*ஆலை = ஆல் + ஐ. பரந்து விரிந்த + தன்மை. அகன்ற இடம். சதுராலை = சதுரவடிவிலான உறுதியான அகலமான இடம், கூடம்.*

## சந்ததி



***1. தந்ததி = தம் + த் + அதி.***

*தம்முடைய + தேகம் + மிகை. தம்முடைய தேகத்தால் அதிகமானவர். தம் பிள்ளைகள்.*

***2. சந்ததி = சம் + த் + அதி.***

*சேர்ந்த + தேகம் + மிகை. இணை சேர்ந்த தேகங்களால் அதிகமானவர். பிள்ளைகள்.*

***3. பரம்பரை = ப் + அர் + அம் + ப் + அர் + ஐ.***

*கொண்டதில் (இருந்து) + பிரியும் + தன்மை + கொண்டு + இருக்கும் + பண்பு விகுதி. கொண்ட ஒன்றில் இருந்து பிரிந்து மற்றொன்றாய்க் கொண்டு இருக்கும் தன்மை. ஒரு குடும்பத்தில் இருந்து பிரிந்து, மற்றொரு குடும்பம் ஆவது. வாரிசு.*

*குறிப்பு: ''அர்'' எனும் ஈரெழுத்து ஒரு மொழிக்கு, ''பிரிதல்'', ''இருத்தல்'' என இரண்டு பொருட்கள் இங்கு கொள்ளப்படுகின்றன.*

## சந்தானம்



***1. சந்தானம் = சம் + த் + ஆன் + அம்.***

*சேர்தல் + தேகம் + ஆகும் + தன்மை. ஆண், பெண் சேர்வதால் குழந்தை ஆகும் தன்மை. குழந்தைப்பேறு.*

***2. சந்ததி = சம் + த் + அதி.***

*சேர்தல் + தேகம் + மிகை. ஆண், பெண் சேரக்கையால், குடும்பத்தில், நபர் கூடுதல். மக்கட்பேறு.*

*மேலோட்டமாக நோக்கி, இவற்றை வடமொழி என்பர் சிலர். இவை, தமிழ்ச்சொற்களே!*

## சந்தை



***சந்தை = சம் + த் + ஐ.***

*சேர்தல் + தேகம் + பண்பு விகுதி. பலரும் ஒன்று சேரும் பண்பு. பொருள் விற்றல், வாங்கலுக்காக, மக்கள் கூடும் இடம்.*



## சமயம்

***சமயம் < சமையம்= ச் + அமை + அம்.***

*இயக்கம் + இருத்தும் + தன்மை. இயக்கம் அடங்கும் தன்மை. செயல், உடல், மனம் ஆகியவை அடங்கினால்தான், உயிர்மை, ஆன்மம், உணரமுடியும். இறைமையுடன் ஒன்ற முடியும். சமயத்தின் நோக்கம், மனிதப் புற, மன இயக்கம் அடங்கலே.*

## சலாபம்



***சலாபம் = சல(ம்) + ஆப் + அம்.***

*நீரில் + கொள்வதாகும் + தன்மை. கடல் நீரில் மூழ்கி முத்துச் சிப்பிகளைக் கொள்ளல். முத்துக்குளித்தல்.*

## சல்லேகனை



***1. சல்லேகனை = ச் + அல் + ஏகன் + ஐ.***

*இயக்கம் + இன்மை + ஒருவன் + பண்பு விகுதி. இயக்கம் அற்றது இறைமை.*

***2. சல்லேகனை = சல் + ஏகன் + ஐ.***

*இயக்கம் + ஒருவன் + பண்புவிகுதி. இயக்கம் (அனைத்தும்) ஒருவனாய் இருக்கும் தன்மை. உலகின் அனைத்து இயக்கமும் இறைமையின் இயக்கமாய் இருக்கும் தன்மை.*

*சமணர்கள், இறைமைப் பண்பை அடைய, உணவைத் துறந்து, இயக்கம் அறுக்கும் முறை. உடலைத் துறந்து, உயிர்மையை உணர்ந்து, மரணத்தைத் துணிவுடன் எதிர்கொள்ளும் வகை.*

## சனகன்



***சனகன் = சல் + அகன்.***
*சல் = ச் + அல். இயக்கம் + இல்லா. அசைவிலா.*
*அகன் = அகமுடையவன்.*
*சனகன் = அசைவிலா அகமுடையவன். அமைதியான மனத்தினன். சனகராசன் ஒரு ஞானி.*



## சன்மதி

***சன்மதி = சல் + மதி.***
*அசைவிலா + நிலவு/ அறிவு / புத்தி / மனம்.*
*சன்மதி = அமைதியான அறிவினன்.*
*சன்மதி, நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவரின் சமண ஆசான்.*

## சன்மம் சன்மயம்



***1. சன்மம் = சல் (ன்) + ம் + அம்.***
*இயக்கம் + கொண்டு மூடிய + தன்மை. இயக்கத் தன்மை. பிறவி. பிறப்பு. இது, தூய்மையான தமிழ்ச்சொல். இதற்கு இணையான வடமொழிச்சொல், ஜன்மம்.*
***2. 1. சன்மயம் = சல் (ன்) + மை + அம்.***
*சன்மையம் -> சன்மயம். உலகம் சன்மயமானது. உலகம் இயங்கும் தன்மை கொண்டது / உலகம் பிறவியை உடையது.*
*2. 2. சன்ம**யம் = சல் (ன்) + மையம்.***
*இயக்க மையம்.*



## சாக்கியம்

***சாக்கியம் = ச் + ஆக் (கு) + இயம்.***
*இயக்கம் + ஆக்கும் + தன்மை. இயக்கமாதல்.*
*இயக்கம் உடலாதல், சாக்கை.*
*உடல் இயக்கமாதல், சாக்கியம்.*
*உடல், புலன், மனம் அடங்கியப் பிறகு, தியானத்தால், நிலை ஆற்றல் உணர்வாதல் சாக்கியம்.*

## சாக்கை



*1. சாக்கை = ச் + ஆக்கை.*
இயக்கம் + உடல். இயக்கம் உடலாதல்.
*2. சாக்கை = ச் + ஆக் (கு) + க் + ஐ.*
இயக்கம் + ஆகல் + மெய் + தன்மை. இயக்கம் மெய்தன்மை ஆதல். இயக்கத்தின் உடல். சிவன்.
கண்ணகியின் சிலை வடிக்க, இமயம் சென்று, வடவரை வென்று வந்த சேரன் அவையில், சிவன் ஆடிய ‘கொட்டிச் சேதம்’ எனும் (சாக்கைக்) கூத்தை, சாக்கையன் எனும் கூத்தன் ஆடினான்.

## சாதகக்குடி


BONDED LABOURER BEGS FOR FREEDOM

Kasi, a bonded labourer, fell at the feet of Tamil Nadu officials when he saw them on Wednesday, begging to be rescued. Kasi and 41 others, including children, were rescued from timber units in Kancheepuram and Vellore. "I was treated like a slave... we were forced to work from 6am till 6pm," another labourer said

*1. சாதகக்குடி = சாதகம் + குடி.*
சாதகம் = சாது + அகம்.
சாது = சா + து. இறப்பு + தேக வெளிப்பாடு. உயிர்ப்பற்ற உடல். அடங்கிய உடல். அகம் = மனம்.
குடி = க் + உட் + இ. மெய் + உள்ளே ஒட்டித் தொடர்ந்து + இருத்தல். பணிந்திருக்கும் மக்கள்.
சாதகக்குடி = அடங்கிய உடலாய், மனமாய் பணிந்திருக்கும் மக்கள். கொற்றடிமை -> கொத்தடிமை.
உரிமை இல்லாத / கேட்காத மக்கள். அடிமைகள்.

## சாத்தண்டம்



*சாத்தண்டம் = சா + தண்டம்.*
சா = இறப்பு. இறத்தல். மரணம்.
தண்டம் = தண்டு + அம். கோல் + தன்மை. கோலால் அடித்தல். கோலால்தான் மனிதர்கள் முதலில் ஒழுங்குப்படுத்தப்பட்டனர் மற்றும் தண்டிக்கப்பட்டனர் போலும். வழிநடத்தியதும் கோலால்தான். எனவே தான், அரசனுக்கும், கோல், செங்கோல் உரியதாயிற்று. தடியை எடுத்தவனே (தண்டல்) தண்டனை வழங்கினான்.
சாத்தண்டம் = மரண தண்டனை / கொலைக்கான தண்டனை.



## சாலினி

*சாலினி = சால் + இனி.*
சால் = ச் + ஆல். இயக்கம் ஆலாய் விரிந்தும் பரந்தும், உயர்ந்தும் ஆழ்ந்தும் இருத்தல். பெருமை. பெரியது. மிகை.
இனி = இனிமை.
சாலினி = மிகவும் இனிமையானவர்/ள்.

## சாவி



***சாவி = ச் + ஆவி. ச் = இயக்கம்.***
*ஆவி = ஆ + வி. ஆதல் விசும்பாய், வெளியாய், பொருண்மை அற்றதாய்.*
*சாவி = இயக்கம் பொருண்மையற்றதாய் ஆதல். மணி பிடிக்காமல் பழுதானப் பயிர். பயிர், பதராய்ப் போதல்.*



## சாவேறு

***சாவேறு = சா + ஏறு.***
*இறக்கின்ற + சிங்கம் / காளை. சாவு உறுதி என்று தெரிந்தே, எதிரி அரசனைப் பாதுகாக்கும் படையை ஊடறுத்துச் செல்லும் சிங்கம் அல்லது காளைப் போன்ற வீரன். இறப்பில் சிங்கம்!.*

## சிங்கம்



***1.சிங்கம் = சிம் + க் + அம்.***
*இயக்கமுடைய + மெய் + தன்மை. பிற விலங்குகளுடன் ஒப்பிடுகையில், சிங்கத்தின் உடல், விரைந்து இயங்கும் தன்மை உடையது போலும்.*
***2. சிங்கம்= சின் + க் + அம்.***
*சிறிய + மெய் + தன்மை. புலியுடன் ஒப்பிடுகையில், சிறிய உடலைக் கொண்டது!*



## சிதம்பரம்

***சிதம்பரம் <- சித்தம்பரம் <-சித்தம் + பரம்.***
*சித்தம் பரம் என்றால், “மனித சித்தமே இறைமை” என பொருள். சித்தம் ஆகாயவெளித் தன்மையது. இறைமையும் ஆகாயவெளித் தன்மையதே.*
*சிதம்பரத்தை, பஞ்சபூதங்களில், ஆகாயத்தலமாக கொள்வது இதனால்தான்.*

## சித்தன்



***1. சித்தன் = சி + தன்.***

*("அதன்" எனும் பொருள் கொள்ளும், "த்" எனும் ஒற்று, இடையில் மிகுகின்றது)*

*சி = ச் + இ. இயக்கமாய் இருப்பது. சிவம் = சி + அம். இயக்கமாய் இருக்கும் தன்மை. இறைமை.*

*தன் = த் + அன். தேகம் + ஆண்பால் விகுதி. தேகமுடையவன். வடிவமுடையவன்.*

*சித்தன் = இயக்கமாய் இருப்பதன் தேகமுடையவன் / வடிவினன். இறைமைத் தேகமுடையவன். இறைமை வடிவினன்.*

***2. சித்தன் = சித்த(ம்) + அன்.***

*மனம் / விருப்பம் + ஆண் பால் விகுதி. முழுமையான ஆழ்ந்த மனமானவன். தான் விரும்பியப்படி ஆகுபவன். சித்து அறிந்தவன், சித்தி பெற்றவன்.*



## சித்தாந்தம்

***சித்தாந்தம் = சித்தம் + அந்தம்.***

*சித்தம் = சி + த் + தம். இயக்கமாய் இருப்பது + அதன் + தேகத் தன்மை. இயக்கமாய் இருப்பதன் தேகத்தன்மை. இயக்கமயமானத் தேகம்.*

*அந்தம் = முடிவு.*

*சித்தாந்தம் = இயக்கமயமான தேகத்தன்மையே முடிவானது. எண்ணமற்ற மெய்யுணர்வுத்தன்மை. அதற்கப்பால் எதுவும் இல்லை. அதுவே, இறைமைத்தன்மை.*

*சித்தம் + பரம் = சித்தம்பரம் -> சிதம்பரம். எண்ணம் நீங்கிய மனமே, சித்தமே, பரம் எனும் இறைமை.*

*அகத்துள் உள்ள இறைமையைக் காணாமல், புறத்தில் தேடுவது மடமை!*

## சித்திரமேழி



***சித்திரமேழி = சித்திரம் + மேழி.***

*சித்திரம் = சித் (தம்) + திரம். மனத்தில் உறுதியான வடிவம். படம். ஓவியம். சிற்பம்.*

*மேழி = மே + ழி. மேல் + கீழ் இருத்தல். ஏர் ஓட்டுவதால், மேல் மண் கீழும், கீழ் மண் மேலும் ஆகும். ஏர்க்கலப்பை .*

*சித்திரமேழி = ஓவிய / சிற்ப / குறியீடான ஏர்க்கலப்பை.*

*கல்லிலோ, மரத்திலோ, ஓவியத்திலோ, கொடியிலோ செய்த ஏர்க்கலப்பைக் குறியீடு, சிறந்த உழவர் மற்றும் வேளாண்மைக் கிராமத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது போலும்.*

## சித்திரம்



**சித்திரம் = சித்(தம்) + திரம்.**
மனம் + உறுதி. மனப்பிம்பம். மனப்பிம்பத்தை, புறத்தில் எழுதுவதே சித்திரம், ஓவியம்.



## சிந்தனை

**சிந்தனை < சின் + த் + அனை < சில் + த் + அனை.**
சிறிய + தேகம் / வடிவம் + நெருக்கமாக்கல். சிறுசிறு செய்திகளை ஒன்றிணைத்தல்.

## சிந்து



**சிந்து = சி + (இ)ம் + து.**
இயக்கத்தின் தேக / வடிவ வெளிப்பாடு. இமய இயக்கத்தின் நீர் வெளிப்பாடு. நதி. ஆறு. ஈரானியர்கள், 'சிந்து'வை, 'இந்து' என அழைத்தனர். கிரேக்கர்கள், 'இண்டஸ்' என்றனர்.
முதலில், 'இந்து' என்பது மதமல்ல. சிந்து நதியை அடுத்து கிழக்கில் வாழ்ந்த மக்களைக் குறிக்க, ஈரான் நாட்டினராலும், கிரேக்கர்களாலும், 'இந்துக்கள்' எனும் சொல் பயன்படுத்தப்பட்டது. இது நிலத்தால் ஆகிய பெயரே தவிர, மதத்தால் ஆகிய பெயர் அல்ல.
1816- 17 களில், 'இந்துயிசம்' எனும் சொல்லை முதன்முதலில் பயன்படுத்தியவர், ராஜா ராம் மோகன் ராய்.



## சிப்பம்

**சிப்பம் = சில் / சிறு + ப் + அம்.**
சிறிய + கொள்ளும் + தன்மை. சிறிய மூட்டை. தூக்கும் எடையளவு கொண்ட மூடை.

## சிமையம்

**சிமயம் -< சிமையம்.**
***1. சிமையம் = ச் + இமை + அம்.***
இயக்கம் + மூடிய + தன்மை. உள்ளியக்கம்.
***2. சிமையம் = சி + மையம்.***
இயக்கம் இருத்தல் + மையம். இயக்க மையம்.
***3. சிமையம் = சி + மை + அம்.***
இயக்கம் + பண்பு விகுதி + தன்மை. இயக்கத்தன்மை.
***4. சிமையம் = சிம் + ஐ + அம்.***
சிறிய + பண்பு விகுதி + தன்மை. சிறியதாகும் தன்மை. சுருங்கும் / அடங்கும் தன்மை.
***5. சிமயம் = சி + மயம்.***
இயக்கம் இருத்தல் + எங்கெங்கும் உள்ள தன்மை.






## சிராவணம்

***சிராவணம் = சிரம் + ஆவணம்.***
சிரம் = ச் + இர் + அம். இயக்கம் + இருக்கும் + தன்மை. ஓயாமல் இயங்குவது, தலை. எண்ணம்.
ஆவணம் = ஆ + அண் + அம். ஆதல் + மிகநெருக்கம் + தன்மை. மிகவும் நெருங்கியத் தன்மையாதல். நெருக்கமான வெளிப்பாடு, எழுத்து.
சிராவணம் = எண்ணத்திற்கு நெருக்கமான எழுத்து. உயில்.

## சிலந்தி

***1. சிலந்தி = சில் + அந்தி.***
சிறிய + மாலைவானம். கோமேதகம் எனும் இரத்தினக்கல், அந்திவானத்தைப் போன்று சிவந்து காணப்படும். சிறிய அந்தி. சிலந்தி.
***2. சிலந்தி = சில் + அம் + தி.***
சிறிய + அழகிய + தேகமாய் இருத்தல். சிறிய அழகிய உடல். ஆண்கை முத்திரை.
***3. சிலந்தி = சில் + அம் + தி.***
சிறிய + தன்மை + தேகமாய் இருத்தல். சிறிய உடல் கொண்டு இருப்பது. கொப்புளம். நீண்ட கால்களுடன் ஒப்பிடும்போது, சிறிய உடல் கொண்ட பூச்சி.



## சிலம்பு



***1. சிலம்பு = சில் + அம் + பு.***
*சிறிய + அவற்றின் + கொண்ட வெளிப்பாடு. சிறிய கற்களோ, முத்துகளோ, மணிகளோ காலணியில் உள்ளிட்டு, நடை, நடம் அசைவினால் ஏற்படும் சிற்றோசைகளின் சேர்ந்திசையாய் வெளிப்படுவது. காலணி.*
*ஒன்றின வோவவ ளஞ்சிலம்படியே (ஐங்குறு. 389)*
*(தரையில்) பதிந்தனவோ அவளின் அழகிய சிலம்பணிந்த பாதங்கள்?*
***2. சிலம்பு = சில் + அம் + பு.***
*சிறுமை + அதன் + கொண்டு வெளிப்படும் தன்மை. மலைநிலம். குறிஞ்சி.*
*நளியிருஞ் சிலம்பிற் சீறூர் (புறநா.143.10)*
*பெரியதாய் இருக்கும் மலையின் சிறிய ஊர்.*
***3. சிலம்பம் = சில் + அம்பு + அம்.***
*சிறிய + அம்பின் + தன்மை. கம்பு. கம்பு ஆட்டம்.*



## சிவாயநம

***சிவாயநம = சி + ஆய + நம் + அ.***
*இயக்கமாய் இருத்தல் + ஆக + நம் + உயிர். இறைமையாக நம் உயிர், மனம்! நெடு மந்திரம்.*
*சிவ = சி + அ. இயக்கமாகட்டும் உயிர்! இறைமையாகட்டும் உயிர். குறு மந்திரம்.*
***சிவம் = சி + அம்.***
*இயக்கமாய் இருக்கும் + தன்மை.*
***சிவன் = சி + அன்.***
*இயக்கமாய் இருத்தல் + ஆண்பால் விகுதி. இயக்கமாய் இருப்பவன்.*



## சிறுமி

***சிறுமி = சிறும் + இ.***
*சிறிதாய் இருப்பவள்.*

## சிறை



**சிறை = சிறு + ஐ.**
சிறிய / சிறிதாகும் + பண்பு விகுதி. சிறிய தன்மை. காவல் அறை. சிறியதாகும் தன்மை. சிறகு.
உன்சிறை விடுக்கற் பாலார் யாருளர் (கம்பராமாயணம் - மாயாசனப் படலம் 38)
திருந்துசிறை வளைவாய்ப் பருந்து (புறநானூறு 3.22)



## சிற்பம்

**சிற்பம் = சில் + ப் + அம்.**
சிறியது + கொள்ளும் + தன்மை. சிறியதாய் கொள்ளும் தன்மை. பொதுவாய், உருவில் சிறியதாய் இருப்பது சிற்பம் போலும்.

## சிற்றம்பலம்



**சிற்றம்பலம் = சிற்று + அம்பலம்.**
**1. சிற்று = சில் + து.**
சிறிய + தேக/ வடிவ வெளிப்பாடு. சிறியது.
**அம்பலம் = அம் + பலம்.**
**2. அம் = அந்த / அழகு.**
பல் = ப் + அல். கொள்வது + இன்மை / கொள்வது அதிர்தல்.
**3. பலம் = பல் + அம்.**
கொண்டில்லாமை / கொண்டு அதிர்தல்.
சிற்றம்பலம் = சிற்று + அம்பலம். சிறியது + கொண்டில்லாமை.
சிற்றம்பலம் = 'மனம் எனும் சிறிய வெளி எண்ணம் எதுவும் கொண்டில்லாமை'. சலனமற்ற அகமே இறைமை.



## சின்மம் சின்மயம்

***1.1. சின்மம் = சில் (ன்) + ம் + அம்.***
சிறுமை / நுண்மை + கொண்டு மூடும் + தன்மை. சிறுமைத் தன்மை. சிம்மம். சிங்கம். நுண்மை உடைய தன்மை. இறைமை நுண்மையானது.
***1.2. சின்மம் = ச் + இல் (ன்) + ம் + அம்.***
இயக்கம் + இன்றி + கொண்டு மூடிய + தன்மை. அசைவிலாமை.
***2. 1. சின்மயம் = சில் (ன்) + மை + அம்.***
சிறிய + தன்மை + ஆதல். சிறுமையாகும் தன்மை. நுண்மையாகும் தன்மை. இறைமைத் தன்மை.
***2. 2. சின்மயம் = சில் (ன்) + மையம்.***
சிறிய மையம். சின்மயன், சின்மயி, சின்மயர்.

## சீர்மை



***சீர்மை = ச் + ஈர் + மை.***

*இயக்கம் + இரண்டு + தன்மை. இரண்டு இயக்கங்களின் இணக்கமான தன்மை. ஒத்திசைவு.*

*மனத்தின் எண்ண இயக்கமும், நாவின் சொல் இயக்கமும் இணங்கி இருத்தல், சீர்மை.*

*சொல் இயக்கமும், செயல் இயக்கமும் ஒத்திசைதல், சீர்மை.*

*கணவனும், மனைவியும் இணக்கமாய் இயங்குதல், சீர்மை.*

*அரசும், மக்களும் இணங்கி இயங்குதல், சீர்மை.*

*அகமும் புறமும் ஒத்தியங்குதல், சீர்மை.*

*மனிதனும், இறைமையும் இணங்கி இருத்தல், சீர்மை.*

*எந்த தொடர்புடைய இரண்டு இயக்கங்களும், இணங்கி இருத்தல், சீர்மை.*



## சுடர்நிலை

***சுடர்நிலை = சுட் (டு) + அர் + நிலை.***

*சுடு = ச் + உ + ட் + உ. இயக்கம் + புறம் + ஒட்டித் தொடர்ந்து + புறமாவது. ஒளியெனும் இயக்கம் புறத்தில் வெப்பத் தொடர்ச்சியாய் வெளிப்படுதல்.*

*அர் = பிரி.*

*நிலை = நில் + ஐ. நின்ற + பண்பு விகுதி. தண்டு. மரத்தூண்.*

*ஒளி / வெப்பம் + பிரியும் + தண்டு. விளக்குத்தண்டு.*

## சுரன் அசுரன்

*சுரம் எனும் சொல்லின் அடிப்படையில், சுரன், அசுரன், சுரண், சுரை, சுரல் ஆகியவை தோன்றுகின்றன.*

***சுரம் = ச் + உர் + அம்.***

*இயக்கம் / சத்தம் + புறத்தில் இருக்கும் + தன்மை. இயக்கம் புறத்தில் வெளிப்படும் தன்மை. காய்ச்சல் சுரம். இசைச் சுரம். பாசுரம்.*

***சுரன் = ச் + உர் + அன்.***

*இயக்கம் + புறம் இருத்தல் + ஆண்பால் விகுதி. சுரத்தை இசைப்பவன். ஒழுங்குள்ளவன். இணக்கமானவன்.*

***அசுரன் = அ + சுரன்.***

*சுரம் இசைக்காதவன். ஒழுங்கற்றவன். இணக்கம் அற்றவன்.*

***சுரண் = ச் + உர் + அண்.***

*இயக்கம் + புறம் இருத்தல் + மிகு நெருக்கம். இயக்கம் புறம் இருப்பதை மிக நெருக்கமாய் உணர்தல். சுரண் + ஐ = சுரணை.*

***சுரை = ச் + உர் + ஐ.***

*இயக்கம் + புறம் இருக்கும் + பண்பு. இயக்கம் புறமாகும். தன்மை. கொடியின் புறத்தே காய்க்கும் சுரைக்காய். பாளையின் புறத்து வடியும் கள். ஆடு, மாடு போன்றவை புறத்தே சொரியும் பால் மடிக்காம்பு.*



***சுரல் = ச் + உர் + அல்.***

*இயக்கம் + புறம் இருத்தல் + மேலும் கீழுமாய். (வண்டு சுரல்கின்றது. வண்டு மேலும் கீழுமாய் பறக்கின்றது. இச்சொல், புதிதாய் உருவாக்கப்பட்டு பயன்படுத்தப்படுகின்றது). இது, ஏற்புடைத்தாகுமா?*

## சுருளமுது



***சுருளமுது = சுருள் + அமுது.***
சுருள் = உருட்டப்பட்டது.
அமுது = அம் + உது.
அழகிய + அது. சிவந்தது.
வாய் சிவந்து அழகாக்கும், நுண்ணிய மெய்யுணர்வை உண்டாக்கும், பாக்கு, சுண்ணம், பிற பொருட்கள் இட்டு உருட்டப்பட்ட வெற்றிலைச் சுருள். தாம்பூலம்.



## சுவாமி

***1. சுவாமி = சு + ஆம் + இ.***
இயக்க வெளிப்பாடு + ஆகி + இருத்தல். இயக்கமானவன். அரசன். உரிமையாளன். உரியவன். கணவன்.
***2. சுவாமி = சு + ஆம் + இ.***
தூய்மை + ஆகி + இருத்தல். (மனத்)தூய்மையானவர்.
“சுவாமி” என்பதே மருவி, “சாமி” ஆனது போலும்.

## செம்பியன்



***செம்பியன் = செம்பு + இயன்.***
சிவந்த தாமிர உலோகம் + இயல்பினன். செம்மையானவன். சிவந்தவன். உறுதியானவன். குளிர்ந்தவன்.
சோழ மன்னர்கள் சிலர்க்கு, செம்பியன் எனும் பெயருண்டு.



## செம்மல்

***செம்மல் = செம்(மை) + அல்.***
செழுமை + தொழிற்பெயர் விகுதி. செழுமையாதல். வளமாகல். செழிப்பாவது. சிவத்தல். உதிர்ந்து சிவந்த மலர். செம்மையானவர். வளமானவர்.

## செய்யுள்

***செய்யுள் = செய் + உள்.***
*செய் + மனத்துள். அகத்தில் படைப்பது. புறத்திலன்றி, அகத்தில் உருவாக்குவது.*






## செவிலி

***செவிலி = செவ்(வை) + இல் + இ.***
*செம்மை + வீடு + உடையவள். செம்மையான, அறவழியிலான, ஒழுக்கமான நெறிமுறையில், பெண்களை வழிநடத்தும் அமைப்பைக் கொண்ட பெண் அறிஞர்.*

## செழியன்

***செழியன் = செழுமை + அன்***
*செழி (செழுமையில் இருந்து திரிந்த உரிச்சொல்) + அன் (ஆண்பால் விகுதி). செழுமையானவன். வளமானவன்.*





## சேமக்கலம் சேகண்டி

***1. சேமக்கலம் = சேமம் + கலம்.***
*சேமம் = ச் + ஏம் + அம். இயக்கம் / சத்தம் + மிக உயரும் + தன்மை. மிகைச் சத்தம்.*
*கலம் = கல் + அம். உறுதி + தன்மை. உலோகம்.*
*சேமக்கலம் = மிகைச் சத்தமிடும் உலோகம்.*
***2. சேகண்டி = சேக(ம்) + அண்டி.***
*இறுகச் சேர்ந்த பொருள் + நெருங்குதல். உலோகத் தட்டை, கோலால் நெருக்கமாய் அடித்தல்.*
*கோயில்களில், ஆரத்தியின் போது ஒலிக்கப்படும் எறிமணி அல்லது கஞ்சக்கருவி.*

## சேயோன்



***1. சேயோன் = சேய் + ஓன்.***

*குழந்தை + முழுமையானவன். குழந்தைத் தன்மையால் முழுமையானவன். அகந்தை அற்றதே, குழந்தை. அகந்தையற்ற மனமே, ஞானம் அடையும். முருகன்.*

***2. சேயோன் = சேய்(மை) + ஓன்.***

*தூரத்தில் + முழுமையாய் இருப்பவன். சிவன்.*

***3. சேயோன் = ச் + ஏ + இ + ஓன்.***

*இயக்கம் + மிக உயர்ந்து + இருத்தல் + முழுமையானவன். நுண்ணிய ஆற்றலாய் முழுமையாய் எங்கெங்கும் இருப்பவன். இறைவன்.*

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையான் சொல்லவும் படுமே".*



## சேவகன்

***சேவகன் = ச் + ஏ + அகன்.***

*இயக்கம் + மிகு உயர்வு + உள்ளவன். மிகுந்து இயங்குபவன். போர் வீரன். இன்றைய நாளில், இச்சொல், வேலையாள் என்பதாக பொருள் கொள்ளப்படுகின்றது.*

## சேனையங்காடிகள்



***சேனையங்காடிகள் + சேனை + அங்காடிகள்.***

*படை + கடைகள் / வியாபாரிகள். வழிப்பறியைத் தடுக்க, பாதுகாப்பு படைவீரர்களுடன் வெவ்வேறு இடங்கள் செல்லும் வியாபாரிகள்.*




## சைவம் அசைவம்

*1. சைவம் = ச் + ஐ + அம்.*

*இயக்கம் + பண்பு + தன்மை. இயங்கு பண்பாய் இருத்தல். தன்னிலை. நிலை ஆற்றல் . உள் இயக்கம். அக இயக்கம். அசையாமை. பயிர்கள். தியானம். தவம்.*

***2. அசைவம் = அசை + அம்.***

*அசைகின்ற + தன்மை. அசையும் தன்மை. புற நிலை. இயங்கு ஆற்றல் . உடல் இயக்கம். புற இயக்கம். வெளி இயக்கம். அசைவு ( அசைஉ) . உயிர்கள்.*

## சொக்கம்



**சொக்கம் = ச் + ஒக்கு + அம்.**
இயக்கம் + போன்ற + தன்மை. மலர்கள், பறவைகள், விலங்குகள் இயக்கம் போன்ற நாட்டியக் கைமுத்திரைகள். நிருத்தம்.



## தகட்டுக்குழை

**தகட்டுக்குழை = தகடு + குழை.**
தங்கத்தகட்டால் செய்யப்பட்டக் குழை. இறுகியப் பொன்னால் அன்றி, மெல்லிய தகட்டால் செய்யப்பட்டக் காதணி.

## தஞ்சை



**தஞ்சை <- தன் + செய் <- தல் + செய் =.**
தேகத்தின் + விளைவு.
நஞ்சை <- நன் செய் <- நல் + செய் = நல்ல விளைவு.
புஞ்சை <- புன் + செய் <- புல் + செய் = மர விளைவு.



## தடவு தெறி

**1. தடவு = த் + அட(டு) + உ.**
தேகத்தை + உள் ஒட்டித் தொடர்ந்து + வெளிப்படு. கையை / விரலை உள்நோக்கி மடக்குதல்.
2. தெறி = த் + எறி.
தேகம் + புறமாய் உயரப் பிரித்தல். கையை / விரலை வெளிநோக்கி நீட்டுதல்
யாழ் அல்லது வீணையை மீட்டும்போது, விரலை மடக்கி உள்பக்கமாக இழுக்கும்போது, நரம்பைத் தடவுவதும், மடக்கிய விரலை வெளிப்பக்கமாக நீட்டி, நரம்பைத் தெறிப்பதும் நிகழும்.

## தண்டியம்

**தண்டியம் = தண்டு + இயம்.**
கோல் + ஒலித்தல் (இயம்பல்).
நடம், நடனம், நாட்டியம் ஆடுபவர்க்கு, நட்டுவனார், தாளக் கணக்கை, கோலைத் தட்டி அறிவிப்பது, தண்டியம்.
"தட்டுக்கழி" என்றும் "நட்டுவாங்கம்" என்றும், இது அழைக்கப்படுகின்றது.





## தட்டொளி

**தட்டொளி = தட்டு + ஒளி.**
தட்டைப் போன்ற வட்ட / நீள்கோண உலோகத் தகட்டில் ஒளி பட்டு பிரதிபலிக்கும். அது முகம் பார்க்கும் கண்ணாடியாகவும் பயன்படும்.

## தட்பம் வெப்பம்

**தட்பம் = தண்(மை) + பம்.**
குளிர்ச்சி + கொண்ட தன்மை.
வெட்பம் = வெண்(மை) + பம். ஒளி + கொண்ட தன்மை.
ணகாரம், டகாரமானது எப்படி?
தொல். எழுத்து. புள்ளி மயங்கியல். நூற்பா.303:
"ணகார இறுதி வல்லெழுத் தியையின்
டகார மாகும் வேற்றுமைப் பொருட்கே".
"தண்மை", "வெண்மை" ஆகிய பண்புப் பெயர்ச் சொற்களில் இருந்து, "தண்", "வெண்" எனும் உரிச்சொற்கள் வருகின்றன. இவற்றின் பொருளும் எளிதில் விளங்கும்.
ஆனால், "பம்" எனும் சொல், "கொண்ட தன்மை" என பொருளைப் பெறுவது எங்ஙனம்?
பம் = ப் + அம். "அம்" என்பது, "தன்மை" என்பதைக் குறிக்கும் அல்லவா?
அப்படி எனில், "ப்" என்பதன் பொருள் என்ன?



## தண்டவாணி



**தண்டவாணி = தண்டம் + ஆணி.**
தண்டம் = தண்டு + அம்.
தண்டு = த் + அள் + து. தேகம் + மிகை + தேக / வடிவம் வெளிப்பாடு. மிகையாகிய தேக வெளிப்பாடு. தடிமனானது.
1. ஆணி = ஆண் + இ. ஆண் போன்று (ஆணைக் குறிப்பதாய்) இருத்தல்.
**2. ஆணி = ஆள் + இ.**
ஆள்வதாய் + இருப்பது. உறுதி செய்வது. முடிவு செய்வது.
தண்டவாணி = தடிமனானது முடிவு செய்வது. பொன்னை உரசிப்பார்த்து தூய்மை அறியும் உரைகல்.
ஆணியின் வடிவத்திலும் இருந்திருக்கலாம்.

## தண்டிகை



**தண்டிகை = தண்டு + இகை.**
கோல் / வாரை + தாழ்தல் / நடத்தல். பல்லாக்கு.
அப்படி என்றால், "சிவிகை" எனும் சொல்லை எப்படிப் பகுக்கலாம்?



## தண்ணுமை

**1. தண்ணுமை = தண் + உ + மை.**
'தண்' எனும் ஒலி + வெளிப்படும் + பண்புப் பெயர் விகுதி. 'தண்', 'தண்' என ஒலியெழுப்பும் மிருதங்கம்.
**2. தண்ணுமை = த் + அண் + உ + மை.**
தேகம் + மிகை நெருக்கம் + வெளிப்படும் + பண்புப் பெயர் விகுதி. நாட்டியம் ஆடுவதற்கு இணங்க மிகநெருக்கமாக இசையொலி வெளிப்படுத்துவது, தண்ணுமை.

## தத்துவம்

**தத்துவம் = த் + அத் + து + அம்.**
தேகம் + 'அதன்' எனும் பொருளுடைய 'அத்' எனும் சாரியை + தேக வெளிப்பாடு + தன்மை.
தேகத்தில் இருந்து வெளிப்படும் தேகங்களின் தன்மை.
பிரபஞ்சம், இயற்கை, மனிதனின் அங்கங்கள் தோன்றி, இயங்கும் தன்மை.
உடலில், 1. விண் (மனம்) , 2. நெருப்பு (வயிறு), 3. காற்று ( நுரையீரல்), 4. நீர் (இரத்தம்), 5. மண் (எலும்பும், சதையும்) ஆகிய ஐந்து பூதங்கள் வெளிப்படுகின்றன.
அவற்றிற்கு இணையாக, உடலில் செயல்படும் உறுப்புகளாக, 6. வாய், 7. கை, 8. கால், 9. மூத்திரவாய், 10. மலவாய் ஆகியன தோன்றுகின்றன.
ஐம்பூதங்களுக்கு இணையான புறப்புலன்களாக, 11. செவி, 12. கண், 13. மெய், 14. வாய், 15. மூக்கு ஆகியனவும், இவற்றிற்கு இணையான அகப்புலன்களாக 16. ஓசை, 17. ஒளி, 18. ஊறு, 19. சுவை, 20. நாற்றம் ஆகியன தோன்றுகின்றன.





## தந்திரம்

**தந்திரம் = த் + அம் + திரம்.**
தேகம் + தன்மை + உறுதி. உறுதியான தேகத்தினர். படைவீரர். காலாட்படை.
"மந்திரம்" என்றால் என்ன?

## தமியர்

***தமியர் = தம் + இய(ம்) + அர்.***
தம்முடைய + இயல்பு + பலர்பால் விகுதி. தம்முடைய இயல்புடையவர்கள். தமக்கு இணக்கமான குணமுடையவர்கள். நண்பர்கள்.





## தம்பம்

***தம்பம் = தம் + பம். (ஈரெழுத்து ஒருமொழிகள்)***
*தம் =  த் + அம். நின்ற தேகம் + தன்மை.*
*பம் =  ப் + அம். பாத்திரம் கொள்ளல் + தன்மை.*
*தம்பம் = நின்ற தேகம் + தன்மை + பாத்திரம் கொள்ளல் + தன்மை. தேகம் போல் உயரந்து நின்று கொள்ளுதல். விளக்கைக் கொள்ளும் உயரமான தண்டு. விளக்குத் தண்டு. விளக்குத்தூண்.*

## தயிர் பயிர் மயிர் வயிர்

***தயிர் = தை + இர்***
*சேர்ந்து + இருப்பது, தயிர்.*
***பயிர் = பை + இர்.***
*கொண்டமை + இருப்பது. விளைவு.*
***மயிர் = மை + இர்***
*கருமை, குறிப்பால் முடி + இருப்பது. முடி.*
***வயிர் = வை + இர்.***
*முழுமை, உறுதி + இருப்பது. வயிரம்.*
*இயல்பு புணர்ச்சி இல்லாத சொற்களுக்கு இடையில், யகரம் அல்லது வகரம் வந்தால், அவை, புணர்ச்சியில், உடன்படுமெய்யாய் வந்தவை எனக் கருதலாம்.*






## தரவு

***தரவு = தர(ல்) + உ.***
*தருதல் + புறம். புறம், தருதல். வெளியில் இருந்து பெறும் தகவல் / செய்தி.*

## தலம் தளம்



***அ) தலம் = த் + அல் + அம்.***
தேகம் + அதிர்வு / இன்மை + தன்மை.
1. தலம் = தேகத்தின் இயங்கு தன்மை. உயிர்கள், மனிதர்கள் இயங்கி வாழும் இடம்.
2. தலம் = தேகம் இல்லாத தன்மை. சித்தர்கள், தம் உடலை இழந்தும் ஆற்றல் வடிவில் இயங்கும் தன்மை.
***ஆ) தளம் = த் + அள் + அம்.***
தேகம்/ வடிவம் + மிகை + தன்மை. தளம் = வடிவத்தின் மிகைமை. (மேல்) தளம். அடுக்கு. தேகத்தின் மிகை, படை.

## தலைநீர்



***1. தலைநீர் = தலை + நீர்.***
தலை மீதுள்ள நீர். தலைக்குள் உள்ள நீர். (தெரிபு - வெளிப்படைப் பொருண்மை)
***2. தலைநீர் = தலை + நீர்.***
முதல் + நீர். ஆறு, ஏரி, குளத்திலிருந்து, முதல் நிலத்திற்கு பாயும் நீர். (வேறு நிலையாகி, குறிப்பில் தோன்றல்).
(இங்கு,'' தலை'' என்பது சொல்லின்படி''உடல் உறுப்பை'' உணர்த்தாமல், ''முதன்மை'' எனும் வேறு ஒரு பொருளை உணர்த்துகிறது)
தலைநீர் எதிர் கடைநீர், கடைசியாக உள்ள நிலத்திற்கு பாயும் நீர்.
அதே பொருட்களில், தலைமடை எதிர் கடைமடை.

## தலைப்பிறை



***1. தலைப்பிறை = தலை + பிறை.***
தலை = முதல்.
பிறை = ப் + இறை. கொண்டு + பரப்புதல். கதிரவனின் ஒளியைக் கொண்டு வானில் பரப்புதல்.
பிறை = பிற்(ற) + ஐ. பிறக்கும் + பண்பு விகுதி. பிறத்தல். தோற்றம்.
தலைப்பிறை = நிலவின் முதல் தோற்றம்.
***2. தலைப்பிறை = தலை + பிறை.***
சிவனின் தலையில் உள்ள பிறை.
இவ்வாறு, சொல்லிலேயே, அதன் பொருண்மைகள் பொதிந்துள்ளன.

## தலைவன் தலைவி



***1. தலைவன் = தலை + அன்.***
முதன்மை + ஆண்பால் விகுதி. முதன்மையானவன்.
தலைவி = தலை + இ. முதன்மை + பெண்பால் விகுதி. முதன்மையானவள்.
இரண்டு சொற்களிலும், உயிர்கள் (ஐ + அ மற்றும் ஐ + இ) புணர்ந்து, வகர உடன்படுமெய் மிகுகின்றது.
***2. தலை + அன் = தலையன் என்றும் ஆகும்.***
அது, பெரிய தலையை உடையவன் என்றோ, மிகுந்த அறிவுள்ளவன் என்றோ பொருள்படலாம். தலை + அள் = தலையள் என்றும் ஆகும். அது, பெரிய தலையை உடையவள் என்றோ, மிகுந்த அறிவுள்ளவள் என்றோ பொருள்படலாம்.

## தவசிக்கீரை



**தவசி = தவம் + சி.**
தவம் = த் + அவ் + அம்.
தேகம் + அந்த + தன்மை. தேகத்தின் அத்தன்மை. இறைத்தன்மை. அசைவின்மை. அமைதி.
சி = இயக்கமாய் இருத்தல்.
தவசி = அமைதியான இயக்கமாய் இருத்தல்..
தவசிக்கீரை, இருமலைப் போக்கி, உடலை அமைதிப்படுத்தும்.

## தளபாடம்



**தளபாடம் = தளம் + பாடு + அம்.**
படை + வேலை + தன்மை. படைவீரர்கள் போர்த்தொழில் செய்வதற்கு தேவையான கருவிகள், ஆயுதங்கள். படைக்கலன்.
“தளபாடம்” என்பதே “தளவாடம்” என்று திரிந்து அறியப்படுகின்றது. இவ்வாறு திரிவதற்கான காரணம் என்ன? “ப்” எனும் ஒலியும், “வ்” எனும் ஒலியும் ஏறக்குறைய வாயின் ஒரே இடத்திலேயே தோன்றுகின்றன. சொல்லின் ஒலி ஓட்டத்தில், “தளபாடம்” என்பதைக் காட்டிலும், “தளவாடம்” தடையின்றி நிகழ்வதை, நீங்களே சொல்லி அறிந்து உணருங்கள்.

## தளம் தளபதி



**1. தளம் = த் + அள் + அம்.**
நின்ற தேகம் + மிகை + தன்மை. தேக மிகுதி. படை. சேனை.
**2. தளபதி = தள(ம்) + பதி.**
தளம் = படை.
பதி = ப் + அதி. கொள்ளல் மிகுதி. மிகுதியாக (அதிகாரம்) கொண்டவன். தலைவன்.
தளபதி = படைத்தலைவன். தளபாய். தளவாய். (பகரம், வகரமாய்த் திரிதல்).



## தளிச்சேரி

**தளிச்சேரி = தளி + சேரி.**
தளி = த் + அளி. தேகம் + தருதல். தன் தேகத்தை இறைவனுக்காக அர்ப்பணித்தவர்.
சேரி = சேர் + இ. சேரந்து + இருத்தல்.
தளிச்சேரி = உடலை, வாழ்வை இறைவனுக்காக அர்ப்பணித்த பெண்கள் சேர்ந்து வாழ்ந்த இடம்.

## தன்மம் தன்மயம்



***1. தன்மம் = தன் + ம் + அம்.***
*தன்னுடைய + மனம் + தன்மை. தன் இயல்பு. அன்பு, கருணை, இன்பம் கொண்ட மனம். மனிதம்.*
***2. 1. தன்மயம் = தன் + மை + அம்.***
*தன்னுடைய + தன்மை + தன்மையாதல். அகமும், புறமும் தானாய் உணர்தல். பண்பாதல்.*
***2. 2. தன்மயம் = தன் + மையம்.***
*தானே அனைத்திற்கும் மையமாதல். இறைமை. சுயநலம். ஆழ்மனம்.*
*தன்மையன் = பண்பானவன்.*
*தன் மையன் = சுயநலவாதி (Self-centered).*



## தாக்கி

***1. தாக்கி = த் + ஆக்கு + இ.***
*நின்ற தேகம் + ஆகி + இருப்பவர். அமர்ந்தார் அவையில் எழுந்து நின்று உண்மை உரைப்பவர்.*
***2. தாக்கி = தாக்கு + இ.***
*உண்மை ஒன்றால் (குற்றவாளியைத்) தாக்குவதாய் + இருப்பவர் எனலும் ஆமோ? தாக்கி = சாட்சி.*

## தாசரி



***தாசரி = தாச(ன்) + அரி.***
*அடிமை + திருமால். திருமாலின் அடிமை, ஊழியன். அரிதாசன், தாசரி (நாராயண ராவ்) ஆகிய இரண்டும் ஒரே பொருளைக் குறிக்கின்றன.*



## தாண்டவம்

***தாண்டவம் = தாள் + தவ்(வு) + அம்.***
*கால் + எம்பிக் குதிக்கும் + தன்மை. கால்களால் எம்பி உயர்ந்தும், கால்களை நீட்டியும் ஆடும் நடனம். இயற்கையின் பிரளயம், குறியீடாக, சிவனின் நடம்.*

## தாமம்

**தாமம் = த் + ஆம் + அம்.**
நின்ற தேகம் / உயர்ந்த வடிவம் + ஆகும் + தன்மை. நீண்ட தன்மை. நீண்டு தொங்கும் மலர்ச்சரம். தொங்கல்.
"முத்துத் தாமம் முறையொடு நாற்றுமின்" (மணி. விழா.49)
"முத்துத் தொங்கலை ஒழுங்காக அணிவியுங்கள்".



## தாமிரபரணி



**தாமிரபரணி = தாமிரம் + பரணி.**
தாமிரம் = த் + ஆம் + இர் + அம். தேகம் + ஆகும் + இருக்கும் + தன்மை. தேகம் ஆகி இருக்கும் தன்மை. தேகத்தின் உயர்ந்த தன்மை. செந்தண்மை. சிவந்தும் குளிர்ந்துமாய் இருத்தல்.
பரணி = ப் + அரண் + இ. கொள்வது + பாதுகாத்தல் + இருத்தல். கொள்வதைப் பாதுகாப்பது. நிலத்தை, மனிதரைப் பாதுகாப்பது.
தாமிரபரணி = செந்தண்மையால், நிலத்தை, மனிதரைப் பாதுகாப்பது.

## தாலம் பண்டாரம்

**1. தாலம் = த் + ஆல் + அம்.**
நின்ற தேகம் / உயர்ந்த வடிவம் + பரந்து, ஓங்கி, ஆழ்ந்து இருக்கும் + தன்மை. பண்டங்கள், பொருட்கள் வைத்துப் பாதுகாக்கும் கலம் அல்லது இடம்.
**2. பண்டாரம் = பண்டம் + ஆரம்.**
பண்டம் = ப் + அள் + த் + அம். கொள்ளல் + மிகை + நின்ற தேகம் / வடிவம் + தன்மை. தானிய உபரியை உயரமாக அடுக்கி வைத்தல்.
ஆரம் = ஆர் + அம். பிரிந்த + தன்மை. வெவ்வேறு பொருட்கள் தனித்தனியாய் உள்ளன. ஒழுங்கமைவு.
பண்டாரம் = உபரிப் பொருட்களின் ஒழுங்கமைவு. பொருட்களை ஒழுங்காக சேமித்து வைக்கும் இடம் அல்லது நபர்.
பிற்காலத்தில், தங்கம், வெள்ளி, நாணயம் போன்ற பிற பல பொருட்களைச் சேமித்து வைக்கும் இடமும், நபரும் பண்டாரம் எனப்பட்டன போலும்.



## தாழை



***தாழை = த் + ஆழ் + ஐ.***
*தேகம் + கீழ் + பண்புப் பெயர் விகுதி. தாழ்ந்து இருத்தல். செடியில் கைக்கு எட்டும் வகையில் பூக்கும் மடல்.*
*“வீழ் தாழ் தாழைப் பூக் கமழ் கானல்”. (நற்றிணை - 78 - 4)*
*வீழ்வது போல் சாய்ந்து தாழ்ந்துள்ள தாழைப் பூவின் மணம் வீசுகின்ற சோலை.*



## தாளம்

***1. தாளம் = தாள் + அம்.***
*கால் + பண்புப்பெயர் விகுதி. காலின் தன்மை. நுனிக்கால் மேலெழுந்து கீழ் தட்டுதல். அசைவு, ஒலியின் ஒழுங்கு. கால் தட்டுதல், கை தட்டுதலாகி இருக்கலாம்.*
***2. தாளம் = த் + ஆள் + அம்.***
*தேகம் + ஆளும் + தன்மை. உடலை ஆட்டுவிக்கும் ஒலி ஒழுங்கு. உடல், துடிப்புகளின் ஒழுங்கால் இயங்குவது. உயிர். ஆட்டம்.*

## தாளி



*1. தாளி = தாள் + இ.*
*அடியில் + இருப்பது. கால் அடியில் இருப்பது. பூமியின் மேல்பரப்பில், அருகம்புல் கொடி.*
***2. தாளி = த் + ஆள் + இ.***
*தேகம் / வடிவம் ஆள்வதாய் + இருத்தல். உணவுக் குழம்பை, நோய் மருந்தை மணம், சுவையாக்குதல். சுண்ணத்தைக் குழைத்து, பயன்படுத்துவதாக்கல். தற்பெருமை கொண்டிருத்தல். அதிகாரம் செய்தல்.*



## தாளிம்பம்

***தாளிம்பம் = த் + ஆள் + இம் + ப் + அம்.***
*தேகத்தை + ஆளும் + இடம் + கொள்ளும் + தன்மை. தேகத்தை ஆளும் நெற்றி கொள்ளும் அணி. நுதலணி. நெற்றிச்சுட்டி.*
*“தாளிம்பத் தாமம்*
*நுதல் சேர்த்தி” (திருக்கைலாய ஞான உலா - 123-124)*
*“தொங்கும் சுட்டியை நெற்றியில் அணிந்து”.*

## தானம்



**தானம் = த் + ஆன் + அம்.**
நின்ற தேகம் + ஆன + தன்மை. வடிவத்தில் உயர்ந்த கோயில் . ஆகமங்களின்படி, இறையும், கோபுரங்களும், வளாகமும் மனித உருவின்படியே அமைக்கப்படுகின்றன. கோயிலுக்காக செய்ததே தானம் எனப்பட்டு, பின்பு, அது எந்த சமூக உதவிக்கும் பொருந்தி வந்தது போலும்.



## திங்கள்

**திங்கள் = த் + இம் + கள்.**
தேகம் + 'அதன்' எனும் பொருளுடைய 'இம்' எனும் சாரியை + கள் / மெய்யின் மிகை. தேகத்தின் கள் / மெய்மிகை. தேகத்தின் மயக்கம். உடல் மயக்கம். நிலவின் ஒளி தேகத்தை, மனத்தை மயக்கும்.
மதி = மது + இ. மயக்குவதாய் இருப்பது.

## திணை இறடி ஏனல்



**தினை = தின் + ஐ.**
உண் + பண்பு விகுதி. உண்ணுவது. தின்பது.
**இறடி = இறு + அடி.**
நெருக்கம் + அடி அளவு. அடர்த்தியாய் ஏறக்குறைய ஒரு அடி அளவு வளரும் தினைக்கதிர். தினை.
**ஏனல் = ஏல் + அல்.**
மிக உயரத்தில் வளைந்து + அதிர்வது / ஆடுவது. தினைக்கதிர். தினை.
ஒரு பொருளுக்கு பல சொற்கள் இருப்பதன் காரணம், அப்பொருளுக்கு பல வேறு குணங்கள் இருப்பதனாலாம்.



## திதலை

***1. திதலை = தி + த் + அலை.***
தேகம் இருத்தல் + 'அதன்' எனும் பொருண்மை கொள்ளும் 'த்' எனும் ஒற்றெழுத்து + அலை போன்று மேலும் கீழுமானது. தேகத்தின் அலை.
***2. திதலை = த் + இது + அலை.***
தேகம் இதன் அலை.
திதலை = உடலின் தேமல் அலை / வரிக்கோடுகள்.

## திப்பியம்



**திப்பியம் = திப்பு + இயம்.**
திப்பு = தி + பு. தேகம் இருத்தல் + (புணர்ச்சியில், ''அதன்'' எனும் பொருள் கொள்ளும் ''ப்'' எனும் ஒற்று மிகும்) + கொண்டது வெளிப்படல்.
தேகம் கொண்ட விண்மை *(Space)* / உயிர்மை வெளிப்படல்.
(''தி'', '' பு'' என்பன, மொழி நிறைபு இல்லாத குற்றெழுத்துகள். இவை, பகுதிப் பொருண்மை உடையவை).
இயம் = இ + அம். இருத்தல் + தன்மை. இயல்பு / நிலை.
திப்பியம் = தேகத்தின் உயிர்மை புறத்தில் வெளிப்படும் தன்மை. இறைமை நிலையாகும் தன்மை. தெய்வத்தன்மை.
பிச்சைப் பாத்திரங் கையினேந் தியது
திப்பியம் என்றே சிந்தைநோய் கூர
(மணிமேகலை - பாத்திரம் கொண்டு பிச்சை புக்க காதை - 69 -70)
மணிமேகலை, பிச்சைப் பாத்திரத்தை கையில் கொண்டது, தெய்வச்செயல் / தெய்வத்தன்மை என்று மனம் வருத்தமடைந்தனர் மக்கள்.

## தியதி




**தியதி = தி + அதி.**
தி = த் + இ. நின்ற தேகம் + இருத்தல். உயிர் எழுந்து நிற்றல். உயிர் நிலைத்தல்.
அதி = மிகை. தியதி = உயிர் நிலைத்தல் மிகை. ஒவ்வொரு நாளும் உயிர் புதிதாய் நிலைபெறுகின்றது.
கதிரவனின் ஒளியும், வெப்பமும்தான், நாம் ஒவ்வொரு நாளும் உயிருடனும் உயிர்ப்புடனும் இருக்க, இயங்க உதவுகின்றது.
ஒவ்வொரு தியதியும், உயிர்க்கு இயற்கையின், சூரியனின் கொடையே!
ஒவ்வொரு நாளையும் அருமையாய், பயனுள்ளதாய் வாழ்வோம்.

## தியானம்

**தியானம் = த் + இயம் + ஆன் + அம்.**
தேகம் + இயல்பு + ஆகும் + தன்மை. தேகத்தின் இயல்பான தன்மை. முழுமையாய் உணர்தலும், அறிதலும்தான் தேகத்தின் இயல்பு.
ஆனால், புலன்களின் முரண்படும் அறிவுகளால், முழுமை உணரப்படுவதில்லை,அறியப்படுவதில்லை.
மனத்தின் தொடர்ச்சியான இயக்கத்தால், குறுக்கீட்டால், புலன்களால் பெற்ற அறிவுகள் ஒழுங்குபடுவதில்லை.
எனவே, புலன்கள் அடங்கலும், மனத்தின் அமைதியும், புலன்களின் அறிவுகள் ஒழுங்கமைய தேவையாகின்றது.
சிந்தனையால் பெறும் தெளிவு வேறு. மௌனத்தில், மனத்தின் அசையாமையால் பெறும் தெளிவு வேறு.



## திரிகை



***1. திரிகை = திரி + கை.***
மாற்றும் + கை. மண்ணைக் கைகளால் குழைத்து வெவ்வேறு வடிவங்களாய் மாற்றுதல்.
இந்நிகழ்வு, சுற்றுகின்ற சக்கரத்தின் மீது நிகழ்வதால், வினையால் அணையும் பெயராக, “திரிகை” என்பது “சக்கரத்”தைக் குறிப்பதாயிற்று போலும்.
***2. திரிகை = திரி + க் + ஐ.***
மாறும் + மெய் + தன்மை. மாறிய மெய்மை. முந்திரி. பொதுவாக பழத்தின் உள் இருக்கும் விதைக் கொட்டை, பழத்தின் முன்னால், வெளியே தோன்றுதல், திரிந்த மெய்மை.
அலை, அலைதல். இடக்கை மேளம் எனும் பொருள் யாவும், மெய்யின் திரிபைக் குறிக்கும்.



## திருத்தணி திருப்பதி

***1.திருத்தணி = திரு + தணி.***
இடையில், ‘த்’ எனும் ஒற்று மிகுகின்றது, அது, ‘இன்’ எனும் பொருள் கொள்கின்றது. இறை + இன் + தணிவு. இறை அமைதி.
***2.திருப்பதி = திரு + பதி.***
இடையில், ‘ப்’ எனும் ஒற்று மிகுகின்றது, அது, ‘இன்’ எனும் பொருள் கொள்கின்றது. இறை + இன் + கொண்ட மிகுதி (இடம்). இறையின் மிகை / இறையின் இடம்.

## திருத்தி



***திருத்தி = திரு + தி.***
அழகு / செல்வம் இறை + தேகமாய் இருத்தல். அழகன். அழகி. செல்வன். செல்வி. இறைவன். இறைவி. திருமகள். அழகிய தேகம். வளம் மிக்கவன். செல்வந்தன்.



## திருமுகம்

***திருமுகம் = திரு + முகம்.***
திரு = அழகு. செல்வம். வளம். பெருமை.
முகம் = ம் + உக் + அம். மனம் + புறமெய் + தன்மை. மனத்தின் புற வெளிப்பாடு. (அகத்தின் அழகு முகத்தில் தெரியும்)
திருமுகம் = அழகிய + மன வெளிப்பாடு. மனத்தின் எழுத்து. எழுத்தோலை. கடிதம்.

## தீபகற்பம்



***தீபகற்பம் = தீப(ம்) + கல் + ப் + அம்.***
*தீவு + கல்லாய் + கொண்ட + தன்மை. தீவின் உறுதியான தன்மை. உறுதித் தன்மை கொண்ட தீவு.*



## தீவு தீபம்

***1. தீவு = தீ + உ.***
*தீயின் + வெளிப்பாடு. கடலில், எரிமலையின் வெளிப்பாடாகவே, தீவு உருவாகின்றது.*
***2. தீபம் = தீ + ப் + அம்.***
*தீ + கொண்ட + தன்மை. ஒளி, விளக்கு, தீவு.*

## துஞ்சல்



***துஞ்சல் = த் + உம் + ச் + அல்.***
*த்= நின்ற தேகம். உம் = "புறம் அதன்" எனும் பொருளுடைய சாரியை. ச் = இயக்கம். அல் = தொழிற் பெயர் விகுதி / அன்மை. துஞ்சல் = தேகத்தின் புறத்தில் இயக்கமின்மை / இயக்கமாதல். தூக்கம். இறத்தல்.*



## துணங்கை

***துணங்கை = த் + உண் + அம் + கை.***
*தேகம் + புறமிகைநெருக்கம் + ஆகும் + கை. தேகத்தை, புறத்திலிருந்து மிகவும் நெருங்கும் கைகள்.*
*பெண்கள் தங்கள் மடங்கிய கைகளைக் கொண்டு தங்கள் தோளை ஒற்றி குனிந்து நிமிர்ந்து ஆடும் கூத்து.*
*..வணங்கு இறை பணை தோள் எல் வளை மகளிர் துணங்கை நாளும் வந்தன..*
*..வளைந்து இறங்கும், மூங்கிலைப் போன்ற தோள்களைக் கொண்ட, ஒளியுடைய வளையணிந்த மகளிர், துணங்கைக் கூத்தாடும் நாளும் வந்தது..*
*(ஔவை- மருதம் - குறுந்தொகை 364)*

## துணி

**துணி = த் + உ + ண் + இ.**
த் = தேகம் / உடல்.
உ = புறம்
ண் = மிகை நெருக்கம்.
இ = இருத்தல்.
துணி = உடலின் புறத்தே மிக நெருக்கமாய் இருப்பது.
**ஆடை**
ஆடை = ஆ + ட் + ஐ.
ஆ = ஆதல்
ட் = ஒட்டித்தொடர்தல்
ஐ = பண்பு விகுதி. தன்மை.
ஆடை = ஒட்டித் தொடர்தலாகும் தன்மை.





## துணிவு

**துணிவு = த் + உ + ண் + இ + உ.**
**த் = நின்ற தேகம்.**
**உ = புறம்.**
**ண் = மிகை நெருக்கம்.**
**இ = இருத்தல்.**
**உ = புறம் / வெளிப்படல்.**
**துணிவு = உடல் புறத்தில் மிக நெருக்கமாய் இருந்து வெளிப்படல் /செயல்படல். மனிதனின் உறுதியான வெளிப்பாடு / செயலாற்றல்.**

## துயில்

***1. துயில் = துய் + இல்.***
அனுபவம் இன்மை. புலன்கள் ஊக்கமுடன் இயங்காமை. உறக்கம்.
***2. துயில் = து + இல்.***
தேக வெளிப்பாடு + இன்மை. உடல் வெளிப்படாமை. உறக்கம். தூக்கம்.
***3. துயில் = த் + உ + இல்.***
தேகம் + புறம் + இன்மை / இருத்தல். உடல் புறத்து இருத்தல். அறிதுயில். உணர்வுநிலை உடலுக்குப் புறத்து இருந்து தன்னையும் கவனித்தல்.
தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.
(குறள். 1103)
தனக்குரிய காதலியின் மென்மையான தோளில் சாய்ந்து துயில்வதைவிட இனிமையானதா என்ன? தாமரைக் கண்ணான் உலகம்!



## துரவு



**துரவு = த் + உர(ம்) + உ.**
த் = நின்ற தேகம்.
உரம் = வலிமை.
உ = புறம்.
நின்ற பயிர் மற்றும் மரத்திற்கு, புறத்திலிருந்து நீரால் சத்தி தருவது, கிணறு.



## தூதுவளை

**தூதுவளை = தூது + வளை.**
தூது = த் + ஊது. தேகம் + விரிவடைவது. நுரையீரல்.
வளை = வளைதல். சுருங்குதல்.
தூதுவளை = நுரையீரல் சுருங்குதல். சளியால் நுரையீரல் சுருங்குதல். தூதுவளைக்கீரை, நுரையீரல் சுருக்கம் நீக்கும்; நுரையீரல் சளியை நீக்கும்.

## தூவா



**தூவா = தூ + ஆ.**
தேகத்தின் நீளல் + ஆகாமல். முயற்சி இன்றி. தானாய். இயல்பாக.
"மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்".
(சிற்றினம் சேராமை. குறள் எண். 455)
"ஒருவரது மனத்தின் தூய்மையும், அவரது செயல்பாட்டின் தூய்மையும், அவர் சேர்ந்திருக்கும் மனிதர்களைப் பொறுத்து, எவ்வித முயற்சியும் இன்றி, தானாக, இயல்பாக வந்து அமையும்".



## தேசவாளி

**தேசவாளி = தேசம் + ஆள் + இ.**
தேசத்தை + ஆள்வதாய் + இருப்பவர். தேசத்தை ஆள்பவர். தேசத்தை ஆளும் அதிகாரி.

## தேயிலை காப்பி

**தேயிலை = தே + இலை.**
தே = தேகத்தின் மிக உயர்வு. இறைமை அல்லது இறைவனைக் குறிக்கும். தே + அன் = தேவன், தே + இ = தேவி (உடன்படுமெய்), **தே + அர் = தேவர்.**
புத்தப் பிக்குகள் தியானம் செய்கையில், உறக்கத்தைத் தவிர்க்க, மெய் உணர்வை நிலைநிறுத்த தேநீர் அருந்துவது வழக்கம்.
ஜப்பானிய பிக்குகள், தேநீர் அருந்தும் நிகழ்வை, தேநீர் சடங்காகவே ( Tea Ceremony) நிகழ்த்துவர்.
காப்பி எனும் தமிழ்ச்சொல், coffee எனும் ஆங்கிலச் சொல்லின், ஒலிபெயர்ப்பாகும்.
தென் எத்தியோப்பியா நாட்டின் kaffa எனும் இடத்தில் விளைந்த செடியினைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப்பட்டது. இதே பெயரே, மொழிக்கேற்றவாறு, சிறு சிறு திரிபுகளுடன் பல்வேறு மொழிகளில் ஒலிக்கின்றது. எனவே, இதே காப்பி எனும் பெயரே தமிழில் தொடர்வதில் குற்றமில்லை என்பது எம் எண்ணம்.





## தேவநகரி

**தேவநகரி = தேவ(ன்) + நகரி.**
இறைவன் + நகரத்திற்குரியது / நகர்வு.
தேவ நகரத்தின் மொழி.
**தேவனகரி = தேவன் + அகரி.**
இறைவன் + அகரத்திற்குரியது / பெயர்வு. தேவமொழி.
எது சரி?

## தொய்யில்

**தொய்யில் = தொய் + இல்.**
தொய்வு இல்லாதது. வன முலை. ஓவியம். (இடம் ஆகு பெயர்).
தொய்யில் எழுதுதல் = முலை மேல் ஓவியம் வரைவது,
"கரும்பு", "வல்லிக்கொடி" போன்றவற்றை வரைதல் உண்டு. இயற்கையான வண்ணக் கலவை கொண்டு வரைவது.
களவில் தலைவனோ, கற்பில் கணவனோ வரைவது.
'கரும்பும் வல்லியும் பெரும் தோள் எழுதி' - (சிலம்பு - மனையறம் படுத்த காதை -29)
"கரும்புப் படத்தையும், வல்லிக்கொடியின் படத்தையும், பெரிய மார்பகங்களில் எழுதி".
'திருமுலைத் தடத்திடைத் தொய்யில் அன்றியும்' - (சிலம்பு - மனையறம் படுத்த காதை -69)
அழகிய மார்பகங்களிடையில் ஓவியம் இல்லாமலும்.



## தொலைப்பேசி



**தொலைப்பேசி = தொலை(வு) + பேசி.**
**தொலைக்காட்சி = தொலை(வு) + காட்சி.**
புணர்சசியில், ஒற்று (ப், க்) மிகும்.



## தொழுகண்ணி

**தொழுகண்ணி = தொழு + க் + அண்ணி.**
வணங்கு + மெய் + மிக நெருங்கி இருத்தல்.
கண்ணி = வேர். கண் போல் ஆழ்ந்துள்ளது. தொழுகண்ணியின் வேர் சிறப்பு வாய்ந்தது.
இரட்டை இலைகள் நெருங்கி மூடுவது, வணங்கித் தொழுவதுபோல் இருக்கும். ஒரு வகைத் தாவரம். மூலிகை. இசைக்கு மயங்கும் தாவரம். காயகற்பம், அதாவது உடலை உறுதியாக்கும். கணவன் மனைவி உறவு பலப்படுமாம்.

## தோட்டம்

**1. தோட்டம் = த் + ஓட் + அம்.**
த் = நின்ற தேகம்.
ஓ = உயர்ந்து விரிதல்.
ட் = ஒட்டித் தொடர்தல் / நீளல்.
அம் = தன்மை.
உயர்ந்த செடிகளும், படரும் கொடிகளும் உயர்ந்து விரிந்து, ஒட்டித் தொடர்ந்து நீண்டு இருக்கும் தன்மை. காய்கறித் தோட்டம், பூந்தோட்டம்.
**2. தோட்டம் = த் + ஓடு + அம்.**
த் = உயரும் தேகம்.
ஓடு = ஓடும்.
அம் = தன்மை.
உயர்ந்து + ஓடும் + தன்மை. கிளை / இலை விரைந்து வளர்தல். தழைகள் மிகுந்து வளரும் தன்மையது.
இலைகளைக் கூட, பழம் மனிதர் தோடாக, காதணியாக அணிந்தனரா? அப்பெயரே பிற காதணிகளுக்கும் ஆனதா?
'அதன்' எனும் பொருள் கொள்ளும் 'ட்' எனும் ஒற்று இரண்டு சொற்புணர்ச்சிகளிலும் மிகும். "தோட்டம்" எனும் இச்சொல்லை, "தோள் + தம்" எனப் பிரிக்கலாகுமா?



## தோப்பு



**தோப்பு = த் + ஓ + (ப் எனும் மெய் மிகுதல்) + பு.**
த் = நின்ற தேகம்.
ஓ = உயர்ந்து விரிதல்.
ப் = வானில் / கொண்டு
உ = வெளிப்படுதல்.
நின்ற மனித தேகம் போன்ற மரங்களை வான் உயர வளர்த்து விரிவாய் வெளிப்படுத்தல். மரக்கூட்டம். தென்னந்தோப்பு. பனந்தோப்பு.



## தோளாச்செவியர்

**தோளாச்செவியர் = தோள் + ஆ + (ச்) + செவி + அர்.**
தோளுக்கு + ஆகும் + புணர்ச்சியில் ஒற்று மிகும் + காது + பலர்பால் விகுதி. தோள்வரை தொங்கும் காதினை உடையவர்கள்.

## நகரம்



**நகரம் = நகர் + அம்.**
இடம்பெயர் + தன்மை.
இடம் பெயரும் தன்மையுடைய மக்கள் உள்ள இடம். பண்பாகுபெயர். நகர்ந்து விரியும் தன்மை கொண்ட ஊர். நகரத்தில் உள்ள மக்கள் இடம் பெயர்வர். குறிப்பாக வணிகர்கள், வியாபார நிமித்தம் இடம் பெயர்வர். அருகிலும், தூரத்திலும் உள்ள மக்களும் இடம் பெயர்ந்து வருவது நகரம்தான்.
''நகரம்'' என்றால் ''வியாபாரிகள் சபை'' என்று ஒரு பொருள் உண்டு.
''நகரத்தார்'' என்பது வணிகருக்குண்டான சிறப்புப் பெயர்.



## நகை

**நகை = நகு + ஐ.**
சிரிக்கும் + பண்பு விகுதி. சிரிக்கும் தன்மை. பற்கள் போல், ஒளிரும் தன்மை.
புன்னகை இருக்க, பொன் நகை எதற்கு என்று மனைவியை திசை திருப்பியதில் யானும் ஒருவன்.

## நக்கன்



**நக்கன் = நகு + க் + அன்.**
சிரிப்பு + மெய் + ஆண்பால் விகுதி. சிரிக்கும் மெய்யினன்.
சிரிப்பால், முகமுடன் உடலும் மலரும், உள் உறையும் உயிரின் வாசமும், உடலை ஊடுருவி, புறம் வீசும். அதன் ஆனந்த ஒளி, எல்லையின்றி பரவும்.
நக்கன் = நகைமுகன். ஆடல்வல்லான். சிவன்.
நகி = நகைப்பவள்.
கண்ணகி = கண் + நகி. கண்ணால் நகைப்பவள்.



## நங்கு

**நங்கு = நம் / னம் + கு.**
னம் = ன் + அம். நெருக்கம் + தன்மை. நெருங்கிய தன்மை.
கு = க் + உ. மெய் + வெளிப்பாடு. உடலின் வெளிப்பாடு.
நங்கு = நெருக்கமான உடலின் வெளிப்பாடு.
நங்கு காட்டு = ஒருவரின் பேச்சு, செயலுக்கு நெருக்கமாக, அவரைப் போலவே, ஏளனமாக, கேலியாக, பரிகாசமாக செய்து காட்டிச் சிரித்தல்.

## நஞ்சுண்டான்



**நஞ்சுண்டான் = நஞ்சு + உண்டான்.**
1. நஞ்சு = நம் + சு. நம்முடைய + தூய்மை.
2. நஞ்சு = ன் + அஞ்சு. நெருக்கம் + அஞ்சுவது. விசம் / விடம்.
ஒரு சொல் எப்படி பகுக்கலாம் என்பதைப் பொறுத்து, அதற்கு பொருள் மாறுபடும்.
இரண்டாம் பகுப்பு, இங்கு பொருத்தமானது. விடத்திற்கு, உடலே அஞ்சும். அத்தகைய விடத்தை உண்டவர், அந்நஞ்சை நீக்க, நஞ்சுண்டான் கீரையை உண்ணலாம். நாம் உண்ணும் பல உணவுகளில் நஞ்சு உள்ளதால், அவ்வப்பொழுது, நஞ்சுண்டான் கீரையை உண்ணுதல் நலம்.




## நடுவிருக்கை

**நடுவிருக்கை = நடு + இரு + கை.**
இடையில் + இருக்கும் + மெய்யின் பண்பு. வகர உடன்படுமெய் தோன்றுகின்றது. ககர ஒற்று மிகுகின்றது.
(நடு, இரு - தொடர்மொழிகள். கை - ஓரெழுத்து ஒருமொழி)
நடுவிருக்கை = அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் இடையில் இருந்து பணிபுரிபவர். பொதுநலத் தொடர்பு அதிகாரி.

## நண்பன்



**நண்பன் = நள் + ப் + அன்.**
நடுமை / நேர்மை + கொண்ட + ஆண்பால் விகுதி.
நடுநிலைமை கொண்டவன், நேர்மையானவன். வாய்மையாளன். அறமுடையவன். தவறிழைத்தால் இடித்துரைப்பவன்.
புகைக்கும், மதுவிற்கும், பெண்ணை இழிவுபடுத்தும் செயலுக்கும் துணைநிற்பவர், உள்ளிரு பகை, உடனுறை நாகம்.
நண்பரைத் தேர்ந்தெடுப்பதில் கவனம் தேவை. தேர்ந்தெடுத்தப்பின், பழகியப்பின், விலகுவது கடினம்.
நண்பன் எனும் சொல், வேறு ஒரு வகையிலும் பிரிபடும்.
நண்பன் = ன் + அள் + ப் + அன். நெருக்கம் + மிகை + கொண்ட + ஆண்பால். நெருக்கம் மிகையாய் கொண்டவன். மிக நெருக்கமானவன்.



## நந்தன் நந்தினி

**1. நந்தன் = நம் + த் + அன்.**
நம் தேகத்தவன்.
**2. நந்தினி = நம் + த் + இனி.**
நம் தேகம் இனிமை. நம் இனிமையான தேகத்தினள். ஞானம் அடையும் வரை, உடல் தடையாக இருக்கும். ஞானத்திற்குப்பின், உடலும் நன்மையாகும், சுகமாகும், இனிமையாகும்.

## நந்தி



**நந்தி = நம் + தி.**
**நம்முடைய + தேகமாய் இருத்தல்.**
**மாடு, தீவனம் தின்றப் பிறகு, அசை போட்டுவிட்டு, தன்னில் ஒன்றியவாறு அமைதி காக்கும். அது, அதன் சமாதி நிலை.**
**அதைப் போல், உடலின், புலனின், மனத்தின், இடையீடு இன்றி, நாம் நம் தேகமாய், நந்தியாய், இருத்தலே, சமாதி நிலைக்கு இட்டுச் செல்லும்.**

## நளன்



***நளன் = நள் + அன்.***
*நடு + ஆண்பால் விகுதி.*
*நோக்குக: நள்ளிரவு = நடு இரவு.*
*ந(ள்)ண்பகல் = நடு பகல்.*
*நளன் = நடுவன். நேர்மையாளன். நடுநிலையாளன். வாய்மையாளன். பொய் பேசாதவன்.*



## நன்மம் நன்மயம்

***1. நன்மம் = நல் (ன்) + ம் + அம்.***
*நல்லதை + கொண்டு மூடும் + தன்மை. நல்ல எண்ணம். நல்ல பண்பு.*
***2. 1. நன்மயம் = நல் (ன்) + மை + அம்.***
*நல்லது + தன்மை + தன்மையாதல். நல்ல தன்மையாதல். முழுதும் நன்மையாய் இருத்தல்.*
***2. 2. நன்மயம் = நல் (ன்) + மையம்.***
*நல்ல மையம்.*

## நாவலந்தீவு

***நாவலந்தீவு = நா + வல் + அம் + தீவு.***
*நாவைப் போன்ற வடிவினதும், வலிமையான தன்மையுடையதுமான தீவு.*
*உலகில் உள்ள எல்லா கண்டங்களும், நிலப்பரப்புகளும் தீயின் வெளிப்பாடுகளே, தீவுகளே!*
*இந்தியத் துணைக்கண்டமும் தீவே. தீவு என்றால், எல்லாப் பக்கமும், நீரால் சூழவேண்டுமா? ஒரு வகையில், இந்தியத் துணைக்கண்டம், மூன்று கடல்களாலும், நீர்நதிகளாலும், பனிநீர் வழியும் மலைகளாலும் சூழ்ந்துள்ளது. ஆசியத்தீவின் (ஆசியக் கண்டத்தின்) ஒரு பகுதியாகவும் காணலாம்.*
*இந்தியத் துணைக்கண்டத்தை, வானில் நின்று நோக்கினால், முக்கடல்களின் அலைவீச்சைக் காணாது, நிலப்பரப்பை கூர்ந்து நோக்கினால், நாக்கு நீண்டு சுருங்குவதைப் போல் இருக்கும். அதே சமயம், நாவைப் போன்று வலிமையற்று இல்லாமல், வலிமையான நிலப்பரப்பைக் கொண்டதாய் உள்ளது.*
*எனவேதான், இந்தியத் துணைக்கண்டம், 'நாவைப் போன்றும், வலிமையுள்ள தன்மையும் கொண்ட தீவு' எனும் பொருளில், 'நாவலந்தீவு' எனப்படுகின்றது போலும்.*
*'நாவலந்தீவு' என்பதை, 'நா + அலம் + தீவு' எனவும் பிரித்து, நாவைப் போல் அசையும் தீவு என்றும் உரைக்கலாம்.*



## நாவல்

**நாவல் = நா + அல்.**
நாக்கு + அதிர்வின்மை. நாக்கின் அதிர்வின்மை.
நாவற்பழத்தை உண்டால், அதன் துவர்ப்புத் தன்மையால், நாக்கு சற்று மரத்துப்போகும். நாக்கு இயங்குவது கடினமாகும். துவர்ப்புச் சுவை, இனிப்புச் சுவையைக் கட்டுப்படுத்தும். அதனால்தான், நாவற்கொட்டைத் தூள், சர்க்கரை வியாதிக்கு மருந்தாகிறது போலும்.





## நிம்மதி

**1. நிம்மதி = நில் + மதி.**
**2. நில் + மதி > நின் + மதி.**
(மெல்லெழுத்து வருவழி லகரம் னகரமாதல்)
*(368. மெல்லெழுத் தியையின் னகார மாகும். நின்ற அறிவு / மனம்).*
**3. நின் + மதி > நிம் + மதி.**
*(343. மெல்லெழுத் தியையின் இறுதியோ டுறழும்).*
மனத்தின் எண்ணம் நிற்றலே, மனத்தின் அமைதியே, நிம்மதி.

## நிலம்

**நிலம் = நில் + அம்.**
நிற்றல் + தன்மை. நிலையான தன்மை. அசையாத மண்.





## நீராவியார்

**நீராவியார் = நீர் + ஆவி + ஆர்.**
நீர் = ஈரெழுத்து ஒருமொழி. கடல்.
ஆவி = தொடர்மொழி. உயிர்.
ஆர் = ஈரெழுத்து ஒருமொழி. பலர்பால் விகுதி.
நீராவியார் = கடல் வணிகத்தால் உயிர் வாழ்பவர். கடல் வாணிகர்.
சோழநாட்டில், இராசராசப் பெருநீராவியார் என்றொரு வணிகர்குழு இருந்தது.

## நீர்நிலம்



***நீர்நிலம் = நீர் + நிலம்.***
*நீர்நிலம் = நீரைக் கொண்டு பயிர் செய்யும் நிலம். நன்செய் / நஞ்சை நிலம்.*

## நெசவாளி



***நெசவாளி = நெசவு + ஆளி.***
*நெசவு = ன் + எச் + அ + உ. நெருக்கம் + உயர்ந்த இயக்கம் + அகம் + புறம்.*
*(இழைகளின்) நெருக்கம் வேண்டி, மிகையான இயக்கம் உள்ளும் புறமும் செய்தல்.*
*ஆளி = ஆள் + இ. ஆளாய் இருப்பவர்.*
*நெசவாளி = (இழைகளின்) நெருக்கம் வேண்டி, மிகையான இயக்கம் உள்ளும் புறமும் செய்யும் ஆளாய் இருப்பவர்.*

## நெற்றி



***நெற்றி = நெல் + தி.***
நெல்மணி + தேகம் / வடிவம் இருத்தல். நெல்மணியின் வடிவமாய் இருத்தல். இங்கு நெல் எப்படி வந்தது? நெற்றிக்கண் என்பது என்ன வடிவம்? ஒரு நெல்மணி, கூர்முனையில் நின்றால் என்ன வடிவமோ, அதுவே நெற்றிக்கண்ணின் வடிவமாகும். ஆக்ஞை சக்கரத்தின் வெளிப்பாடே, நெற்றிக்கண்.

## பஃறுளி



***பஃறுளி = பல் + துளி.***
*பல துளிகளைக் கொண்டு உருவானது. ஆறு.*
*'பஃறுளி ஆறு' என கேட்கும் போதும், படிக்கும் போதும், பத்தில் அது ஏதோ ஒரு ஆறு என்றே நினைக்கின்றோம். ஆனால், 'பஃறுளி' எனும் சொல்லை, பகுப்பாய்வு அல்லது அகழாய்வு செய்யும்போதே, அந்த ஆற்றின் சிறப்பு என்ன என்பது புலனாகும்.*
*எல்லா ஆறும், பல துளிகளால் ஆனவைதான். ஆனால், ஆற்றின் பெயரே, ' பல்துளி ' என்பதால், அது, அதன் தனிச்சிறப்பை குறிப்பதாய் உணர்தல் வேண்டும்.*
*உயர்ந்த மலைகளின் பனிப்பாறைகள் உருகி, பலப்பல துளிகளாகி, பெருக்கெடுக்கும் ஆறே, பஃறுளி என காணலாம்.*

## பசலை

***பசலை = பசல் + ஐ / பச் + அலை.***
*பச்சைத் தன்மை. பச்சை அலை.*
*பசலை நோய், இரத்தச் சோகையால் தோலில் வெளிப்படுவது. உணவு, உறக்கம் இன்மையால் ஏற்படும். குறிப்பாக, காதலர் பிரிந்ததால் காதலியர்க்கு ஏற்படுவதாய் கூறப்படுவது. பசலைக்கீரை, மிகவும் மென்மையான, நீர்ச்சத்து மிகுந்து, அலையலையாக, அடுத்தடுத்து விரைவாக வளரும் கீரைவகை. இது, இரத்தச்சோகையையும், தோலின் வரட்சியையும் போக்கும். சீரணத்தை விரைவாக்கும். குளிர்ச்சியையும் அளிக்கும்.*





## பசுங்கூட்டு

***பசுங்கூட்டு = பசு(மை) + கூட்டு.***
***குளிர்ச்சியானக் கலவை. சுண்ணாம்புச் சாந்து.***
***கூட்டு = கூள் + து. திரளுதல் + தேக / வடிவ வெளிப்பாடு. (பசு - தொடர்மொழி. கூள் - ஈரெழுத்து ஒருமொழி. து - குற்றெழுத்து)***

## பச்சைப்பணம்

***பச்சைப்பணம் = பச்சை + பணம்.***
*அறுவடையான நெல் அல்லது தானியங்களை, உலர்த்தாமல், பச்சையாகவே வரிக்கும் கூலிக்கும் தருவது.*






## பஞ்சாரம்

***1. பஞ்சாரம் = ப் + அஞ்சு + ஆரம்.***
*கொள்வது + ஐந்து + வட்டம். ஐந்து வட்டமான வரிசைகளைக் கொண்ட கழுத்தணி.*
***2. பஞ்சாரம் = ப் + அஞ்சு + ஆரம்.***
*கொள்வது + ஐந்து + ஆரங்கள். ஐந்து (5x2=10) ஆரங்களைக் கொண்ட கூடையாகலாம்.*

## படிக்கால்



***படிக்கால் = படி + கால்.***
*படிகளைக் கொண்ட கால். படிகள் = குறுக்கு வாட்டத்து மூங்கில் கழிகள் / சட்டங்கள். கால் = நெடிய மூங்கில் கழிகள்.*
*மூங்கில் கழிகள் அல்லது மரச்சட்டங்களைக் கொண்டு, படிகள் பெற்றது, ஏணி.*
*"குறும் தொடை நெடும் படிக்கால்".*
*(பட்டினப்பாலை.142)*
*"குறுகிய இடைவெளியுடன், நெருக்கமாக அமைக்கப்பட்ட படிகளைக் கொண்ட, உயரமான ஏணி".*

## பணி



***1. பணி = ப் + அண் + இ.***
*கொள்வது + மிகை நெருக்கம் + இருத்தல். கொண்டது மிகநெருக்கமாய் இருத்தல்.*
*கொண்ட வேலையுடன் மிக நெருக்கமாய் இருத்தலே சிறப்பு.*
***2. பணி = ப் + அணி.***
*கொள்வது + அழகு. வேலையைக் கொள்வதும் அழகாம்.*
*பாம்பும், தன் உடலை மிக நெருக்கமாய் கொண்டிருத்தலால், "பணி" எனும் பெயரைப் பெறுகின்றது.*
*"தூமப் பணிகள் ஒன்றித் தோய்ந்தால் என" ( சிலம்பு - மனையறம் படுத்த காதை - அடி.91)*
*பாம்புகள் இணையலாடி, இணைந்தபடி நிலைத்திருப்பதுபோல், கோவலனும், கண்ணகியும் ஒன்றி இருந்து மகிழ்ந்தனராம்.*

## பணிலம்



*'பணிலம்' என்றால் 'சங்கு' என பொருள்.*
*எல்லாச் சொற்களும் பொருள் குறித்தனவே!*
*எந்த காரணத்தால், இச்சொல் சங்கைக் குறிக்கின்றது?*
*இச்சொல்லைப் பகுத்தால் விடை கிடைக்குமா?*
*இச்சொல்லை எப்படி பகுப்பது?*
***பணிலம் = பண் + இல் + அம்.***
*இசை + இன்மை + தன்மை. இசைமை இன்மை.*
*பணிலம் = பண் + இல் + அம். இசை + உறையும் + தன்மை என பொருள் கொண்டால், இசைப் பண்பைக் கொண்டது சங்கு என்பது பொருந்தும்.*

## பண்ணத்தி வண்ணத்தி



***1. பண்ணத்தி = பண் + அத் (து) + தி.***
பண் அதன் தேகமாய் / வடிவமாய் இருத்தல். பண்ணின் வடிவம்.
***2. வண்ணத்தி = வண்ண (ம்) + அத் (து) + தி.***
வண்ணம் அதன் தேகமாய் / வடிவமாய் இருத்தல். வண்ணத் தேகம்.

## பதலை



***பதலை = ப் + அத் + அலை.***
கொள் + அதன் + அதிர்வு / வளைவு / மேலும் கீழுமாதல். கொண்டதன் மேலும் கீழுமான தன்மை. ( அருவப் பொருண்மை)
பருண்மைப் பொருண்மைகள்:
1. ஒரு வகைப் பறை. ஒலி அலைகளைத் தொடர்ந்து எழுப்பும் போலும்.
“நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி”.
(புறநானூறு. 6 - 4)
“நல்ல யாழ், ஆகுளியெனும் பறை, பதலையெனும் மற்றோர் பறையுடன் சுருக்குப் பையில் கட்டி”.
2. மலை.
3. தாழி.
“சைலப் பெயருந் தாழியு மோர்கட்
பகுவாய்ப் பறையும் பதலை யாகும்”.
பதலை என்பது:- மலை, சாடி, ஒருகண் பகுவாய்ப் பறை.
(பிங்கல நிகண்டு - 743)

## பதுமை



***பதுமை = ப் + அது + மை.***
கொண்ட + அது + மூடியத் தன்மை / அமைதி. பதுமை அமைதியானது.
‘ப்’ என்றால், ‘பத்து’ என பொருள். நிறைவு, முழுமை என்றும் பொருள் பெறும். “மை” என்பது பண்பு விகுதி.
நிறைவானது, முழுமையானது அமைதியானது.
இறைமை பதுமை.
பெண்மையும் பதுமையாம்.

## பரதர்

***பரதர் = ப் + அர் + அத் + அர்.***
கொண்டது + பிரி + அந்த + பலர்பால். கொள்ளும் நிலத்தைப் பிரிந்தவர். கடலில் இருப்பவர். மீனவர்.





## பரதம் இரதம்

***பரதம் = பர(ம்) + த் + அம்.***
இறை + தேகம் + தன்மை. இறையின் தேக அசைவுகள் / நிலைகள். இறையின் நடனம். தாண்டவம்.
பரதம் எனும் நாடகத்தமிழ்நூல் அழிந்துவிட்டதாய் அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.
***இரதம் = இர(ம்) + த் + அம்.***
இருக்கும் + தேகம் + தன்மை. உள்ள தேகத்தின் தன்மைகள். உள்ள தேக அசைவுகள் / நிலைகள். மனிதரின் மெய்ப்பாடு. நடன பாவம்.
இரதம் எனும் தமிழ்ப்படுத்தப்பட்ட சொல், தேரினைக் குறிக்கும்.

## பருத்தி

***பருத்தி = பரு + தி.***
***(இடையில், 'த்' எனும் ஒற்று மிகுகின்றது.)***
***பரு = ப் + அர் + உ.***
கொண்டதில் + பிரிந்து + வெளிப்படுவது. மிகையாய் வெளிப்படல்.
தி = தேகமாய் / வடிவமாய் இருத்தல்.
பருத்தி = மிகையாய் வெளிப்படுவதன் தேகம் / வடிவம்.





## பருவம்

***பருவம் = ப் + அர் + உ + அம்.***
கொண்டதில் பிரிந்து வெளிப்படும் தன்மை.
பருவம் = கொண்டதில் இருந்து பிரிந்து வெளிப்படும் தன்மை.
இது, இச்சொல்லின் அருவப் பொருண்மை (*Abstract Meaning*).
முளைக்கும் பருவம், கிளைக்கும் பருவம், பூக்கும் பருவம், காய்க்கும் பருவம், கனியும் பருவம், வாலைப் பருவம், குமரிப் பருவம், கன்னிப் பருவம், காளைப் பருவம், இளமைப் பருவம், முதுமைப் பருவம்,... இவை பருண்மைப் பொருண்மைகள் (*Concrete Meanings*).

## பலதளி

***பலதளி = பல + தளி.***
*பல தெய்வங்களுக்கு தனித்தனி சன்னிதிகள் கொண்ட கோயில்.*
*(பல, தளி - தொடர்மொழிகள்)*





## பல்லவி

***பல்லவி = பல் + அ(வ்) + இ.***
*பலவாக + அது + இருத்தல். பலமுறை வருதல். பாட்டில், பல்லவி பலமுறை வரும்.*

## பல்லியம்

***1. பல்லியம் = பல் + இயம்.***
*பல (இசைக்கருவிகள்) + இயம்புவது. பல கருவிகளின் இசை. சேர்ந்திசை. பல்லிசை. Symphony.*
***2. பன்னியம் = பன் (ல்) + இ + அம்.***
*பலவற்றின் + இருக்கும் + தன்மை. பாடலில் பல சொற்களும், பொருளும், இசையும், தாளமும் இருத்தல். பாடல் இயற்றல். பல இசைகளுடன் பொருந்தும் பாடல். பல்லிசைப் பாடல்.*
*Lyrics, வீணையைப் போன்ற Lyre எனும் கருவிக்கு உரியது.*
*பன்னியம் எனும் இசைப்பாடல், குழல், யாழ், குரல், முழவு, தாளம் முதலிய பல்லியத்திற்கு உரியது.*
*"பன்னிய பாத்தாளம் புணர்ப்புப் பொருணிறங்கள்....*
*நல்லிசையோர் கண்ட நெறி".(பஞ்சமரபு. வெண்பா.94)*



## பழனம்



***பழனம் = ப் + அழ் + அன் + அம்.***
கொள்வதில் + ஆழம் + 'அதன்' எனும் பொருள் கொண்ட 'அன்' எனும் சாரியை + தன்மை. கொண்டதில் ஆழமாய் இருத்தல். வயல், குளம்.

## பழனி பழநி



***1. பழனியின் சங்க காலப் பெயர், பொதினி.***
***பொதினி <- போதினி = போது + இனி.***
மலரும் பருவத்து அரும்பு + இனிமை. இனிமையான மலர்.
போதினும் முதிர்ந்தது பழம். எனவே, பழ(ம்) + இனி = பழனி. இனிமையான பழம்.
பொதினி, பழனி ஆகியவை இயற்கைக் காரணப் பெயர்கள். காலத்தால் முந்தையது.
***2. பழம் + நீ = பழநீ -> பழநி,***
இது வரலாற்றுப் பெயர் அல்ல. புராணப் பெயர். காலத்தால் பிந்தையது.
3. "பழனம்" என்பதன் மருவே, பழனி. "பழனம்" எனில் "குளம்" மற்றும் "வயல்" எனப் பொருள் உண்டு.
வயல்கள், குளங்கள் நிறைந்த இடம் பழனி எனப்பட்டது.

## பள்ளன் பள்ளி

***1. பள்ளன் = ப் + அள் + அன்.***
கொள்ளல் + மிகை + ஆண்பால் விகுதி. விதைகள் சில தூவி, விளைச்சல் மிகையாய் அள்ளுபவன். உழவன்.
***2. பள்ளி = ப் + அள் + இ.***
கொள்ளல் + மிகை + பெண்பால் விகுதி. விதைகள் சில தூவி, விளைச்சல் மிகையாய் அள்ளுபவள். உழத்தி. உழவி. உழவை எனினும் பொருந்தும் அல்லவா?
'முக்கூடற்பள்ளு' எனும் இலக்கியத்தில், 'பள்ளி' எனும் பெயர், 'பெண் உழவரை'க் குறிப்பதாய், அறி.செங்கைப் பொதுவன் குறிப்பிடுகின்றார்.



## பற்பம்



***பற்பம் = பல் + ப் + அம்.***
*பலவாய் + கொள்ளும் + தன்மை. தூள். நுண்மையான பன்மையான துகள்கள்.*



## பன்மம் பன்மயம்

***1. பன்மம் = பல் (ன்) + ம் + அம்.***
*பலவாய் + இருக்கும் + தன்மை. ஒற்றைப் பொருளே பலவாய் இருக்கும் தன்மை. திருநீறு. தூள். மாவு. பற்பம்.*
***2. பன்மயம் = பல் (ன்) + மை + அம்.***
*பன்மையம் -> பன்மயம். பலவற்றின் தன்மை. பலவும் ஒன்றிணைந்து இயங்கும் தன்மை. சூழலியல் பன்மயமானது.*

## பாசுரம்

***பாசுரம் = பா + சுரம்.***
*பாடல் + இசை. இசைப்பாடல்.*
*கவிதை, பாடல், இசையைக் காட்டிலும் இறை பக்தியை வெளிப்படுத்தும் சிறந்த வடிவம் வேறுண்டோ?*





## பாடகம்

***1. பாடகம் = பாடு + அகம்.***
*பாடுதல் + உள்ளே. சலங்கை, சிலம்பு போன்று உள்ளே ஒலிக்கும், மகளிர் அணியும் ஆபரணம்.*
***2. பாடகம் = பாடு + அகம்.***
*உழைப்பு + உள்ளே. உழைக்கும் நிலத்தின் பகுதி.*

## பாந்தள்



***பாந்தள் = ப் + ஆம் + த் + அள்.***
*கொள்வது + ஆகும் + தேகம் + மிகை. விழுங்கும் பெரிய உடல். மலைப்பாம்பு.*
*"பழுவும் பாந்தளும் உளப்பட பிறவும்".*
*(குறிஞ்சிப்பாட்டு. 259)*
*"செம்மண் / மஞ்சள் நிறமுடைய பாம்பும், மலைப்பாம்பும் உட்பட பிறவும்" உள்ள மலைக்காடு.*

## பாயம்



***1. பாயம் = பா + அம்.***
*பாட்டு + தன்மை. பாடுதல். பாடல்.*
*"நளிபடு சிலம்பிற் பாயம் பாடி".*
*(குறிஞ்சிப்பாட்டு. 58)*
*"உயர்ந்துப் பரந்த மலையில் பாடல் பாடி".*
*2. பாயம் = பாய் + அம்.*
*கொள்வதாகும் + தன்மை. புணர்ச்சி / புணர்ச்சி விருப்பம்.*
*"பிணவொடு பாயம் போகாது".*
*(பெரும்பாணாற்றுப்படை. 342)*
*"பெண் பன்றியுடன் சேர விருப்பம் இல்லாமல்".*

## பாயிரம்



***பாயிரம் = பா + இர் + அம்.***
*பா = பாக்கள், இர் = இருக்கும், அம் = தன்மை*
*பாயிரம் = பாக்கள் இருக்கும் தன்மை. படைப்பின் தன்மைகளைக் கூறுவது.*

## பாரதம்



***பாரதம் = பார் + அத்(து) + அம்.***
*பரந்து விரிந்த உலகம் + அதன் + தன்மை. உலக மக்களின் பண்பு. பன்முகத் தன்மை. உலகில் உள்ள பலவகை மக்கள் சேர்ந்து வாழும் நிலம். தச்சசீலம், நாலந்தா, விக்கிரமசீலம், வல்லபி, சகத்தலம், நாகார்ஜுன வித்திய பீடம், எனும் பல்கலைக்கழகங்கள், தம் அறிவு மற்றும் தத்துவ ஆற்றலால், உலக அறிவார்ந்த மக்களைக் கவர்ந்து இழுத்தது. அவை, பௌத்த தத்துவங்களுடன், உலகின் பிற எல்லா தத்துவங்களையும் விசாரணைக்குள்ளாக்கின. இன்றும் கூட, அகநோக்கில், சுயம் உணர்தலில், இறைமை பற்றிய கருத்தாக்கத் தெளிவில் பல உள் முரண்கள் இருந்தும், ஒரு பரந்த, பன்முக நோக்கை, இந்திய மண் கொண்டிருப்பதாலேயே, அதற்கு தனிச்சிறப்பு. ஒற்றைத் தன்மை கொண்ட இரான், பாகிஸ்தான், வங்காளம் போன்ற நாடுகள், பொது சுதந்திரம் அற்ற நாடுகளாகவே, உலக நாடுகளின் பார்வையில் தோன்றுகின்றன. அடிமைத்தனம் மிகுந்த நாடுகளாகவே உள்ளன. அரச பயங்கரவாதம் மிகுந்தே உள்ளன.*
*இந்தியாவும் / பாரதமும் அந்த வரிசையில் சேரலாமா?*
*பன்முகத்தன்மைதான், இந்தியாவின் உயிர்நாடி. அது அழிந்தால், இந்தியா ஒன்றாக இருக்காது.*

## பாரதி



***1. பாரதி = ப் + ஆர் + அத் + இ.***
*கொள்வது + பிரி + அந்த எனும் பொருள் கொண்ட சாரியை + பெண்பால் விகுதி. வெளியில் பிரிந்து வெளிப்பட்டவள். சிவத்தில் பிரிந்த சத்தி. பார்வதி. பைரவி. காளி.*
***2. பாரதி = பார் + அதி.***
*உலகம் + அவள். பருண்மை உலகமானவள். சத்தி.*
***3. பாரதி = பார் + அதி.***
*காண் + அவரை/ அவளை. (பாரதி சின்னப்பயல் பாடியது)*
***4. பாரதி = பார் + அதி.***
*உலகம் + மிகை. மக்களில் மிகை. பண்டிதன்.*
***5. பாரதி = பா + (இ)ரதி. பாட்டு + அழகி.***
*கலைமகள். பாரதியார் பெற்ற புகழ்ப் பெயர்.*
*ஒற்றைச்சொல், இவ்வாறு பலவாறு பிரிந்து, பல்வேறு பகுதிப் பொருட்களைத் தர, சொல், பல பொருண்மைகளைக் கொள்ளும்.*
*பாரதி யாடிய பாரதி யரங்கத்து (சிலப். 6, 39)*
*பைரவி ஆடிய பாரதி அரங்கத்தில், மாதவி ஆடினாள்.*



## பாலக்குருவி

***பாலக்குருவி = பால் + அ + குருவி.***
*('க்' எனும் மெய், புணர்ச்சியில் மிகும்)*
*பால் = ப் + ஆல். வான் + ஆதல் மேலும் கீழுமாய்.*
*அ = தன்மையது.*
***குருவி = க் + உரு + வி.***
*மெய்யின் சிறிய உருவாய், விரைவாய் இருத்தல்.*
*பாலக்குருவி = வானத்தில் சுழன்று விரைந்து கீழே இறங்குவதும் உயர்வதுமான, சிறிய விரைவான பறவை.*
*வானில், சுழன்று விரைவாக கீழே விழுவதுபோல் வந்து, மீண்டும் மேலே உயர்ந்து பறந்து தன்னுடைய இணையைக் கவரும் பண்புடையது.*
*தான் பிடித்த இரையை, மேலே தூக்கிப் போட்டு மீண்டும் பிடித்து உண்ணும்.*

## பாவம்



***பாவம் = ப் + ஆவ் + அம்.***
*கொள்வதாய் + ஆகும் + தன்மை. கொள்வதாகும் தன்மை. இது அருவப் பொருண்மை. பல பருண்மைகளை, இச்சொல் ஏற்கும்.*
*1. கொள்ளும் ஊழ்வினையால் ஒருவன் படும் துன்பங்கண்டு, இரக்கமுடன் சொல்வது: அவனைப் பார்த்தால் பாவமாய் இருக்கின்றது.*
*2. பிறப்பைக் கொள்ளும் செயல்கள் /வினைகள், பாவம்.*
*3. முகம் கொள்ளும் உணர்ச்சி வெளிப்பாடு. (முகபாவம்)*

## பிணிமுகம்



**பிணி = ப் + இண் + இ.**
கொண்டு + இருத்தல் மிக நெருக்கமாய் + இருப்பது. மிக நெருக்கமாய் கொண்டிருப்பது.
**1. பிணிமுகம் = முகத்துடன் நெருக்கமாய்** பிணைக்கப்பட்டிருக்கும் தும்பிக்கை. ஆனை.
**2. பிணிமுகம் = நோய் + முகம்.**
சுருக்கமுள்ள தும்பிக்கை, நோய்ப்பட்டதைப் போன்று தோற்றம் அளிக்கின்றது. ஆனை.



## பிலம்

**பிலம் = ப் + இல் + அம்.**
கொள்ளல் + இல்லாத + தன்மை. கொண்டு இல்லாமை. குழி. பள்ளம். பாதாளம். குகை. வெற்றிடம்.

## பிறப்பு



**பிறப்பு = பிற + ('ப்' மெய் மிகுதல்) + பு.**
வெளியைப் பிரிந்த + (அதன்) + கொண்ட வெளிப்பாடு. மற்றதன் வெளிப்பாடு.
விண்வெளியைப் பிரிந்தது உடலைக் கொண்டு வெளிப்படல். விண் உயிர், மண் உடல் கொண்டு வெளிப்படல்.



## பீடகம்

**பீடகம் = ப் + ஈடு + அகம்.**
வெளி + சமம் + அகம். அகம், வெளிக்கு சமமானது.
புத்தம், கடவுளை மறுப்பது. உலகமனத்தை ஏற்பது. அகத்தின் மூலமாகவே பிரபஞ்சம் முழுவதன் வெளியையும் உணரமுடியும் என கருதுவது.
ஏறக்குறைய, இந்த நுண்மையான வெளியை, வேதாந்தம், பிரும்மம் என்கிறது. அந்த 'பிரும்மம் அகமாய் இருக்கிறது' என்று மகாவாக்கியமாய் கூறுகின்றது. சைவம், பரம்பொருள் என்கிறது. எல்லா மதப் பிரிவுகளும், அதை தியானத்தால் உணரலாம் என்கின்றன. அவ்வெளியை அடைய உதவுவது, திரிபீடகம் என்பர்.

## பீரம்



**பீரம் = ப் + ஈர் + அம்.**
கொள்வது + ஈரத் + தன்மை. குளிர்ச்சியைக் கொண்டது பீரம் அல்லது பீர்க்கம். உடல் சூட்டை தணிக்கும்.



## புகல்வி

**புகல்வி = புகல் + பி.**
புகுதல் + கொண்டு இருத்தல். ஆண் விலங்கு, பெண் விலங்குள் புகுந்து இருத்தல். ஏறு. ஆண் விலங்கு.
“புழல் கோட்டு ஆமான் புகல்வியும் களிறும்”.
(குறிஞ்சிப்பாட்டு. 253)
“உட்துளை உள்ள கொம்புடைய ஆண் மானும், ஆண் யானையும்”.

## புதினா



**புதினம் = புது + இனம்.**
தமிழ்நாட்டிற்கு புதிதாய் வந்த தாவரம் போலும். துளசியைப் போன்றே, புதினக்கீரையும், சளியைப் போக்கவல்லது. பசியையும் தூண்டக்கூடியது. துளசியை, சாதியக் கட்டமைப்பால், பாமரமக்கள் வளர்க்க முடியாத சூழல் இருந்திருக்க வாய்ப்புள்ளது. ஏனெனில், சமுதாயத்தின் ஒரு பிரிவினர், துளசியை மிகவும் புனிதமாகக் கருதினர். எனவே, துளசிக்கு மாற்றாக, புதினாக்கீரை தமிழ்ச் சமூகத்தில் பரவலாக பயன்படுத்தப் படுகின்றது.

## புத்தம் தன்மம் சங்கம்



**புத்தம் = ப் + உத் + அம்.**
கொண்ட + புறத்தேகம் + தன்மை. வெளி, பொருள், உயிர், உலகம் பற்றிய தெளிவு. புறத் தன்மை.
தன்மம் = தன் + ம் + அம். தேகம் அதன் + கொண்டு மூடிய + தன்மை. தன்னைப் பற்றிய அறிவு. உடல், மனம், உயிர் பற்றிய தெளிவு. அகத் தன்மை.
சங்கம் = சம் + க் + அம். சேரும் + மெய் + தன்மை. அகமும், புறமும் இணையும் தன்மை. சங்கமம். முழுமை. ஒருமை.
“புத்த தன்ம சங்கம் என்னும்
முத்திற மணியை மும்மையின் வணங்கி”.
(மணிமேகலை - பவத்திறம் அறுக எனப் பாவை நோற்ற காதை- 3 - 4)
“புறம், அகம், சங்கமம் எனும் மூன்று அம்சங்களை உடைய “உலக உண்மை” எனும் விலைமதிப்பில்லா இரத்தின மணியை, மனம், மொழி, மெய்யால் வணங்கி”ச் சரணடைந்தாள், மணிமேகலை.

## புத்தி

***புத்தி = ப் + உத் + தி.***

விண்மை + 'அதன்' எனும் பொருளுடைய 'உத்' எனும் சாரியை + தேகமாய் இருத்தல். விண்மையின் வடிவம். இறைமையின் உருவம். புத்தியுடன் தொடர்புடையன இரண்டு. அவை, மனம் மற்றும் அகந்தை. மனம், வலிமை அற்றது. உறுதி அற்றது. சுய முரண்படுவது. தயங்குவது. அகந்தை, குருட்டுத்தனமானது. முரட்டுத் தனமானது. தான் அழிந்தாலும், தான் சாதிக்க நினைப்பதை அடைய முயல்வது. அசட்டுத் துணிவானது. புத்தி, நிதானமானது ஆனால் உறுதியானது. தெளிவானது. தான் மற்றும் தனது என்பதில் இருந்து பிரிந்து திற்பது. உண்மைக்கும், நன்மைக்கும், நியாயத்திற்கும் அரணாவது. எளிமையாக கூறின், புத்தி அறத்தை உணர்த்துவது.



நம் சிந்தை வெளியில், மனம், அகந்தை, புத்தி மூன்றுமே இயங்குகின்றன. பல சமயம், அவை மூன்றும் ஒரே சமயத்தில் இயங்குகின்றன. எது, என்ன சொல்கிறது என அறியமுடியாமல் குழப்பமாக உள்ளது.
எனவே, நமக்குள், வெவ்வேறு தன்மைகளுடன் இயங்கும், மனம், அகந்தை, புத்தி ஆகியவற்றை, நிதானமாக பிரித்து அறிந்து, இறைமையின் வடிவமான புத்தியுடன் சார்ந்து நிற்போம். அது காட்டும் அறவழியில் நடப்போம்.



## புயல் முயல்

***1. புயல் = பு + அல்.***

கொண்டதன் புறத்தே + அதிர்வு. அலைவு. கடலின் மேல் புறத்தே தோன்றும் அலைகள்.

***2. முயல் = மு + அல்.***

கொண்டு மூடியதன் புறத்தே + அதிர்வு. அலைதல். மண்ணின் புறத்தே அலைதல். துள்ளித் திரியும் விலங்கு. முயலகன் = முயல் போன்று அலைந்து திரியும் மனம் கொண்டவர் மனிதர். மனம் அடங்கினால், அமைதியும், இன்பமும் நிலைக்கும், பெருகும். உயிர்மை உணரப்படும். உண்மை விளங்கும். ஞானம் விளையும்.

## புரம்

***புரம் = ப் + உரம்.***

கொள்வது + உறுதி. கொள்வதன் உறுதி. உறுதியைக் கொண்டது. அரண் செய்யப்பட்ட ஊர் / நகரம்.
அந்தப்புரம் = அந்தம் + புரம்.
ஊரின் எல்லையில், அரண் செய்யப்பட்ட இடம்.



## புராணம்



**புராணம் = புரம் + ஆணம்.**
புரம் = ப் + உரம். கொள்வதன் + உறுதி.
ஆணம் = ஆள் + அம். ஆளும் + தன்மை.
புராணம் = சில கருத்துகளை மனதில் உறுதிப்பட வைத்து இயக்கும் தன்மை.
கட்டுக் கதைகளை, மனித மனங்கள் ஏற்று, உண்மை என்றே நம்புகின்றன. அவை, மீண்டும் மீண்டும் கூறப்படும்போது, கேள்வி கேட்காத மனம், அப்பொய்மைகளிலும் மாயச்சுகம் காண்கிறது. அச்சுகத்திற்கு ஊறு வந்தால், எதிர்க்கவும் துணிகிறது.

## புழுக்கின இறைச்சி சூட்டிறைச்சி



**1. புழுக்கின இறைச்சி = புழுக்கினம் + இறைச்சி.**
புழுக்கினம் = புழு + கினம்.
புழு = ப் + உழு. கொண்டதில் + உள்ளே ஆழ்ந்து வெளிப்படு. மண்ணில் உள்ளே ஆழ்வதும் வெளிப்படுவதுமான ஊரும் சிற்றுயிர்.
கினம் = க் + இன் + அம். மெய் + அதன் எனும் பொருளுடைய 'இன்' எனும் சாரியை + பண்புப் பெயர் விகுதி. மெய்த்தன்மை.
புழுக்கினம் = புழுவைப் போன்று இருக்கும் வெந்த சோறு.
இறைச்சி = இறை + சி. இறுக்கமாய் இருக்கும் + இயக்கமாய் இருத்தல். அடர்த்தியான ஆற்றல்.
புழுக்கின இறைச்சி = ஊன்சோறு. (பிரியாணி)

## பூதம்



**பூதம் = ப் + ஊத் + அம்.**
கொண்டது + நீண்டுப்பரவிய தேகம் + தன்மை. கொண்டது விரிதல், பருத்தல், பெருத்தல்.



## பூவா

**பூவா = பூ + ஆ.**
பூப்போன்று (மென்மை) ஆனது. நன்கு வெந்த சோறு. சாதம்.

## பெரும்பூ



**பெரும்பூ = பெரு (மை) + பூ.**
முக்கியமான + பயிர். மழைவரத்தில் பரவலாக பயிரிடப்படுவது. பொதுவாக, தமிழ்நாட்டில், நெற்பயிர்.
(பெரு - தொடர்மொழி. பூ - ஓரெழுத்து ஒருமொழி. மகர ஒற்று மிகுகின்றது)



## பெருவாயன்

**பெருவாயன் = பெரு(மை) + வாய் + அன்.**
அகன்ற + வாய் + ஆண்பால்விகுதி. அகன்ற வாயைக்கொண்ட கூடை. (திணைவழுவமைதி)
(பெரு - தொடர்மொழி. வாய், அன் - ஈரெழுத்து ஒருமொழிகள்)

## பொங்கழி



**பொங்கழி = பொன் + கழி.**
(பொன் போன்று ஒளிரும்) செந்நெல் + மிகை.
செந்நெல் குவியல்.
"பொங்கழி ஆலைப் புகையொடும் பரந்து
மங்குல் வானத்து மலையின் தோன்றும்".
(சிலம்பு - நாடு காண் காதை - 151 - 152 )
கரும்பாலைப் புகை சூழும், பொன் போன்ற செந்நெல் குவியல், வானத்து மேகம் சூழ்ந்த, மலைபோல் காட்சி அளிக்கும்.



## பொத்தகம்

**1. பொத்தகம் = பொத்து + அகம்.**
அடைத்தது + உள்ளே. வரிபெற்று சேர்த்தமைக் கணக்கு. வரிப்பொத்தகம்.
**2. புத்தகம் = புத்(து) + அகம்.**
புதிய மனம். புதிய எண்ணம், சிந்தனை. புதிய உள்ளடக்கம்.

## பொருநை



பொருனை', 'பொருணை', 'பொருநை' எனும் சொற்களில் எது சரியானது?
''தண் பொருநைப் புனல்நாடு' எனச் சேக்கிழாரும், ''பொன்திணிந்த புனல் பெருகும் பொருநைத் திருநதி' என்று கம்பரும் பாடியுள்ளதால், 'பொருநை' என்பதையே சரியானச் சொல்லாக கருதலாம்.
இச்சொல்லை எப்படி பகுப்பது?
**பொருநை = பொரு(தல்) + நை.**
பொரு = ப் + ஒரு. கொள்வது ஒன்று. ஒன்றையே பலரும் கொள்ள முயல்வது, போர். போரிடு, மோது, சண்டையிடு. 'பொரு', 'பொருதல்' என்பதுவே, மூலம். நை = நெருக்கமாக (நை நை, நைய)
பொருநை = நெருக்கமாக மோதும் நீர், நதி. வெவ்வேறு மலைகளில் இருந்து ஓடிவரும் நீரோட்டங்கள், ஒன்றை மற்றொன்று மிக நெருக்கமாக மோதுதல்.

## பொருள்



**பொருள் = ப் + ஓர் + உள்.**
கொண்டது + ஒன்று + உள்ளே. ஒரு சொல்லினுள், பொருண்மை ஒன்றாய் தெளிவாய் இருப்பது.
பொரு = ப் + ஒரு. 'கொள்வதில் ஒன்றாய் இருத்தல்' என்பதே, இச்சொல்லின் அருவப் பொருண்மை (Abstract Meaning). இப்பொருண்மை, பருண்மைப் பொருளாக (Concrete Meaning) பலவற்றைத் தரும். ஆனால், அவை யாவும், அருவப் பொருண்மையின் கருத்துக்குள் அடங்கும். பொருள் மாறுகிறது என்றால், வேறு வகையில் சொல்லைப் பிரிக்கலாகும் எனப் பொருள்.
பொருநன் = பொரு + நன். நன்மைக்கு கொள்வதில் ஒன்றாய் இருப்பவன்.
இங்கே, பருண்மைப் பொருட்களாக, 'வீரன்', 'போராளி', 'பாணன்', 'விறலி' போன்று, 'ஒன்றைக் கொண்டு இயங்குபவர்கள்' அனைவரையும், இச்சொல் குறிக்கலாகும். இதனால்தான், ஒருசொல் பல பொருள் தருகின்றது.

## பொற்பூ



**பொற்பூ = பொன் + பூ.**
பொன்னாலான சிறுமலர்.
(பொன் - ஈரெழுத்து ஒருமொழி. பூ - ஓரெழுத்து ஒருமொழி)
பொற்பூ, தேர்ச்சி பெற்ற மாணவர்க்கு அளிப்பது. கோயில் பூசனையிலும் பயன்படுவது. பாணர்க்கு அரசர் பரிசாக வழங்கும் தாமரை வடிவப் பொன்னணி.

## பொன்னாங்கண்ணி



***பொன்னாங்கண்ணி = பொன் + ஆம் + கண்ணி.***

*பொன் = ப் + ஒன். கொள்வது + ஒன்று. கொண்டது ஒன்றானது. தங்கமும் செம்பும் சேர்ந்து மட்டும் பொன்னாவதில்லை. சித்த மருத்துவத்தில், பலசரக்குகளையும் இரண்டறக் கலந்து ஒன்றாக்குவது, பொன்னாகும்.*

*ஆம் = ஆகும்.*

*கண்ணி = க் + அண் (ண்) + இ. மெய் + மிகநெருக்கமாய் + இருத்தல். பொன்னாங்கண்ணி = உடலின் பல்வேறு அமைப்பு மற்றும் இயக்கங்களை ஒன்று சேர்த்து, மிக நெருக்கமாக்குவது. வலிமையாக்குவது. காயகற்பம்.*

## பொன்னி சென்னி



***பொன்னி = பொல் + நீர்.***

*தங்க நீர். பொன் நீர் > பொன்னி. பொன் போன்ற நதி, காவிரி. காலை, மாலை ஒளிர்ப்பிலும், வளம் கொழிக்கும் மதிப்பிலும், காவிரி பொன் போன்றதே.*

*சென்னி = செல் + நீ > சென்னி. முன் செல். வழி நடத்து. தலைவன். சோழனுக்குரிய பெயர்.*

## போற்றி



***போற்றி = போல் + தி.***

*போன்று + தேக இருப்பு. ஒன்றைப் போல் தான் ஆக வேண்டும். "சிவா போற்றி" என்றால், 'சிவனைப்போல் என்தேகம் ஆகவேண்டும்' என பொருள்.*

*ஒன்றைப் போல் தான் ஆக வேண்டும் என வேண்டுதலும், ஆழும் நினைப்பும், மனத்தின் உறைதலும், உயிர்மையை உணர்வதோடு இறைமையையும் உணர்த்தி நிலைக்கும்.*

*"போற்றி" என்பது, இறைவனை வெறுமனே வாழ்த்தி வணங்குவதல்ல. தான் இறைமையாக உணர்வதற்கான சொல், மன முயற்சி.*

*நமகம் = நம் + அகம். நமகம் -> நமக -> நமஹ என திரிக்கப்பட்டது. சிவாய நமஹ என்றால், நம்மனம் சிவமாகட்டும் என பொருள்.*

*சிவா போல் ஆகுக என்தேகம் (சிவா போற்றி), நம்மனம் சிவமாகட்டும் (சிவாய நமஹ) என்பன, புறமந்திரம் அல்ல.*

## பௌவம்



***1. பௌவம் = ப் + ஔ + அம்.***

*கொள்வது + முழுதும் நீண்டு + பண்புப் பெயர் விகுதி. முழுதும் நீண்டு கொள்ளும் தன்மை. பெருங்கடல். நிலவு.*

***2. பௌவம் = ப் + அவ் + அம்.***

*கொள்வது + அந்த + பண்புப் பெயர் விகுதி. கொண்டதன் தன்மை. கடலின் தன்மை. நுரை, குமிழி, உப்பு.*

## மடம்



***மடம் = ம் + அட் + அம்.***
*ம் = கொண்டு மூடிய தன்மை. மனம்.*
*அட் = ஒட்டித் தொடர்தல்.*
*அம் = தன்மை (பண்பு விகுதி).*
*மடம் = மனம் தன் இயல்பில் தொடரும் தன்மை. மௌனம். பேசாமை. அடக்கம். அறியாமை. தவம். தியானம். அமைதி. அவை நிலவும் இடம், நபர்.*



## மணம்

***மணம் = மண் + அம்.***
*மண் + தன்மை. மண்ணின் முதன்மையான தன்மை, அதன் வாசம். மண்மேல் மழைநீர் பட்டவுடன் எழுவது அதன் மணமே!*
*இது மிகவும் எளிமையான சொல்.*
*கடினமான சொல்லையும், தொல்காப்பிய புணர்ச்சி விதிகளை பின்னோக்குப் பார்வையுடன் பயன்படுத்தி (Reverse Engineering), பொருளைக் கண்டறியலாம்.*

## மணவழகன்



***மணவழகன் = மண(ம்) + அழக்(கு ) + அன்.***
*1. ''மணம்'' எனும் பண்புப்பெயரின் திரிசொல், ''மண'' எனும் உரிச்சொல். ''மண'' என்பது, ''மண்'' எனும் பெயர்ச்சொல்லின் தொடர்மொழி எனலும் தகும்.*
*எச்சொல், இச்சொல்லானது, எப்பொருள் கொண்டது என வெளிப்படையாய்த் தெரியாத காரணத்தினால்தான்,*
*''388. மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா,'' (தொல். சொல்.உரியியல்) என்றார் போலும், தொல்காப்பியர்.*
*மண = வாசமான. நிலத்தின். திருமணத்தின்.*
*2. அழகு = அழ + கு. ''அழ '' என்பது, ''அழ்'' எனும் சொல்லின் தொடர்மொழி. ''கு'' என்பது, குற்றெழுத்து ஒருமொழி.*
*அ = அந்த.*
*ழ் = ஆழ்ந்த.*
*கு = க் + உ. மெய்யின் வெளிப்பாடு.*
*அழகு = அந்த ஆழ்ந்த மெய்யின் வெளிப்பாடு.*
*3. ''அன்'' என்பது ஆண்பால் விகுதி.*
*மணவழகன் = அ) வாசனைமிக்க அழகன். ஆ) நிலத்தின் அழகானவன். இ) திருமண அழகன், மாப்பிள்ளை.*

## மணிநாவல்



***மணிநாவல் = மணி + நாவல்.***
நாவல் மணி. நாவல் வண்ண கருநீல நிறத்தில் இருக்கும் மணிகளால் ஆன மாலை. கழுத்தில் அணியும் மாலை.



## மணிபல்லவம்

***மணிபல்லவம் = மணி + பல்லவம்.***
மணி = மண் + இ. மண்ணில் + இருப்பது. கல். இரத்தினக் கல்.
பல்லவம் = பல் + அவ் + அம். பன்மை + "அவற்றின்" எனும் பொருள் கொண்ட, "அவ்" எனும் சாரியை + பண்புப் பெயர் விகுதி. பலவற்றின் தன்மை.
மணிபல்லவம் = இரத்தினக் கற்கள் பலவும் கொண்ட தன்மையிலான இடம். இலங்கை.
"அந்தரம் ஆறா ஆறுஐந்து யோசனைத்
தென்திசை மருங்கில் சென்றுதிரை உடுத்த
மணிபல் லவத்திடை மணிமே கலாதெய்வம்
அணிஇழை தன்னை வைத்து அகன்றது தான்என்".

## மண்டகம் மண்டபம்

***1. மண்டகம் = மண் + த் + அகம்.***
மண் = நிலம் / இடம்.
த் = தேகம் / வடிவம் / நிற்றல்.
அகம் = உள் கொள்ளும் தன்மை.
மண்டகம் = நிலத்தில் வடிவத்தில் உயர்ந்து உள் கொள்ளும் தன்மை.
***2. மண்டபம்= மண் + த் + அப் + அம்.***
மண் = நிலம் / இடம்.
த் = தேகம் / வடிவம் / நிற்றல்.
அப் = அந்த கொள்ளும்.
அம் = தன்மை.
மண்டபம் = நிலத்தில், வடிவத்தில் உயர்ந்து கொள்ளும் தன்மை.
இரண்டு சொற்களிலும், தகரம் டகரமாய்த் திரிந்தது.



## மண்டலம்



***மண்டலம் = மண் + தலம் (த் + அல் + அம்)***
மண் = நிலம் / இடம்.
த் = தேகம் / வடிவம் / நிற்றல்.
அல் = தொழிற்பெயர் விகுதி. உழைத்தல் / இயங்கல் / ஆடல்.
அம் = தன்மை.
மண்டலம் = நிலத்தில் மக்கள் இயங்கும் தன்மை. நிலத்தில் பயிர்கள் நின்றாடும் தன்மை. இடத்தில் நின்ற வடிவம் இயங்கும் தன்மை.
சொற்களின் தொகுப்பில், தகரம் டகரமாய்த் திரிந்தது.



## மண்ணன்

***மண்ணன் = மண் + அன்.***
அசைவின்மை + ஆண் பால் விகுதி. மண் போன்றவன். மந்தன். சிந்தனை இல்லாதவன். எதிர்வினை ஆற்றாதவன். சோம்பேறி.

## மண்ணான்



***மண்ணான் = மண் + ஆன்.***
மண் ஆனவன் / உரியவன். "ண்" ஒற்று மிகும். மண்ணானவன். மண்ணுக்கு உரியவன். இறந்தவன். பறையர்களின் துணி வெளுப்பவன்.
"மண்ணு" என்றால் "கழுவு" எனும் பொருள் உண்டு. 'மண்ணான்' என்றால், 'கழுவுபவன்' எனும் பொருள் கொள்ள முடியுமா? ஆனால், "மண்ணுவான்" என்றொரு சொல் இல்லை.
மண்ணான், புதரவண்ணான் எனும் பெயரும் பெற்றவன். பகலில், குடியானவர் கண்ணில் படாமல், புதரில் ஒளிந்து வாழ வேண்டியவன்.
இராப்பாடி என்றும் அவனுக்கு பெயர். நள்ளிரவில், இருட்டில் பாடி, பிச்சை எடுத்து உண்டு வாழ்பவன்.
அருந்ததியர், மண்ணான் என்போர் எல்லாம், சாதியத்தின் கொடுமைக்கு வரலாற்றுச் சாட்சிகள்.

## மதம்




**மதம் = ம் + அத் + அம்.**
மனம், ஆன்மம் + அதன் + தன்மை.
மனம் மற்றும் ஆன்மத்தின் தன்மையை விளக்குவதே மதம்.

## மதம் 2



**மதம் = ம் + அத் + அம்.**
கொண்டு மூடியது + அதன் + தன்மை. மனம் / சித்தம் / ஆன்மாவதன் தன்மை.
**1. சமணம் = சம் + அண் + அம்.**
இணைதல் + நெருக்கம் + தன்மை. இணைதலின் நெருக்கம். இறைமையுடன் நெருக்கமாக இணையும் தன்மை.
**\2. பௌத்தம் = பௌ + தம்.**
கொள்வது நீண்டு விரிவது + தேகத்/வடிவத் தன்மை. அறிவு நீண்டு விரியும் வடிவத் தன்மை. அறிவு நீண்டு விரிந்து (புத்த) தேகமாகும் தன்மை. முழுமையான அறிவு.
**3. சைவம் = சை + அம்.**
சை = ச் + ஐ. இயக்கம் + பண்பு விகுதி. இயக்கம்.
சைவம் = இயக்கத்தன்மை. அகத்தின் இயக்கமும் புறத்தின் இயக்கமும் ஒன்றியத் தன்மை. தியானத்தால் ஒருமை. முழுமையான இயக்கம். இறைமை.
**4.வைணவம் = வை + (இ)ண் + அவ் + அம்.**
வை + மிக நெருக்கம் + அதன் + தன்மை. (அகத்தை), அதன் தன்மையானதுடன் மிக நெருக்கமாக இருத்து. அகத்தை, அதன் தன்மையான இறையுடன் மிக நெருக்கமாக வை. பக்தியால் ஒருமை. இறைமை.

## மதுரகீதம்

**மதுரகீதம் = மதுரம் + கீதம்.**
மதுரம் = மது + உரம். மயக்கம் + வலிமை. வலிமையான மயக்கம்.
கீதம் = க் + ஈத் + அம். மெய் + தரும் தேகம் / வடிவம் + தன்மை. மெய்யின் ஒரு வெளிப்பாடு. பாடல்.
மதுரகீதம் = வலிமையான மயக்கம் தரும் பாடல். மயக்கும் இசைப்பாடல்.
அதிரா மரபின் யாழ்கை வாங்கி
மதுர கீதம் பாடினள் மயங்கி.
( சிலம்பு. 8. 23 - 24 )
யாழ் நரம்புகளின் மேல் கைவிரல்கள் பட்டு ஒலிக்காதவாறு, யாழை கரங்களில் மெல்ல வாங்கி, மயக்கும் இசைப்பாடலைப் பாடினாள், கலங்கிய மாதவி.



## மந்திரம்



**மந்திரம் = ம் + அம் + திரம்.**
(கொண்டு மூடிய) மனம் + அதன் + உறுதி. மன உறுதி. மன உறுதியை, மன அசையாமையை ஏற்படுத்த உதவும் ஒலி.
உடலின் செயல்பாடும், உடலின் புலன்களின் செயல்பாடுகளும் அடங்கினால், எண்ணமும் மனமும் அடங்கிவிடும்.
மனம் என்பது, உடல் மற்றும் புலன்களால் உண்டாகும் பக்க விளைவே!
எனவே, மந்திரம் என்பது, உடல் அமைதியை உண்டாக்கி, மன அமைதியை உண்டாக்கி, மெய்யை உணரச்செய்வது.



## மம்மர்

**மம்மர் = ம் + அம் + அர்.**
கொண்டு மூடியது + "அதன்" எனும் பொருள் கொள்ளும் "அம்" எனும் சாரியை + பிரிதல். மனத்தைப் பிரித்தல். (அருவப் பொருண்மை)
துக்கம், துன்பம், மயக்கம், கல்லாமை, காமம். (பருண்மைப் பொருண்மைகள்).
"மருளுடை மாத ருற்ற
மம்மர்நோய் மறைந்த தன்றே".
அச்சமுடைய பெண் அடைந்த துன்பநோய், (சீவகன் பிறந்த) அன்றே மறைந்துவிட்டது.

## மயிலை காராம் சிவலை



**மை (வண்ணம்) + இலை (இன்மை) = மையிலை**
மயிலை. வண்ணம் இல்லாக் காளை. வெண்மைக் காளை.
கார் ( கருமை) + ஆம் (ஆகும், ஆன) = காராம். கருமையானக் காளை.
சிவம் + அலை = சிவலை / செவலை / செவிலி. சிவந்தக் காளை. மண்ணிறக் காளை.



## மரக்கால் சூலக்கால் செப்புக்கால்

கையின் அடி, நீட்டல் அளவைக் குறித்தது எனில், காலின் உயரம், கொள்ளல் அளவைக் குறித்தது போலும். கால் = கொள்ளல் அளவிடும் கருவி / கலம்.
முற்காலத்தில், மனிதக் காலின் உயரத்திற்கு இவ்வளவைக் கலம் இருந்திருக்கலாம்.
***1. மரக்கால் = மரம் + கால்.***
மரத்தாலான கொள்ளல் அளவிடும் கலம்.
***2. சூலக்கால் = சூலம் + கால்.***
சிவன் கோயிலின் சூலக்குறியிட்ட கொள்ளல் அளவிடும் கலம்.
***3. செப்புக்கால் = செம்பு + கால்.***
செம்பாலான கொள்ளல் அளவிடும் கலம்.

## மருத்துவன்



**மருத்துவன் = மரு + 'த்' எனும் ஒற்று மிகல் + து + அன்.**
மரு = ம் + அர் + உ. கொண்டு மூடியதில் இருந்து + பிரிந்து + வெளிப்படுவது. மண்ணில் இருந்து பிரிந்து வெளிப்படுவது. தாவரம்.
து = தேக வெளிப்பாடு. வேர், தண்டு, இலை, பூ, காய், கனி. பாகங்கள். அன் = ஆண்பால் விகுதி.
மருத்துவன் = தாவரத்தின் பாகங்களைக் கொண்டவன். தாவரத்தின் பாகங்களைக் கொண்டு நோய்களைப் போக்குபவன்.



## மருப்பு

**மருப்பு = ம் + அர் + உ + ப் + பு.**
கொண்டு மூடியது + பிரிந்து + வெளிப்படுவதன் + கொண்ட வெளிப்பாடு. உடலில் இருந்து பிரிந்து வெளிப்பட்டு கொள்ளும் வெளிப்பாடு. மான் கொம்பு, யானைத் தந்தம். சுறா மீனின் கூரான கொம்பு.
'மரு' என்பதும் உடலின் புறத்தில் பிரிந்து வெளிப்படுவதே.
"ஆய் களிற்று அசனி வேகம் அதன் மருப்பு ஊசி ஆக..." - *(சீவக சிந்தாமணி 1121)*
"கொல்லேற்றின் மருப்புப் போன்றன"- *(புறநானூறு 4 - வரி 4.)*
எறி சுறா வான் மருப்பு கோத்து நெறி செய்த...- *(கலித்தொகை - நெய்தல் - பாடல் 131- வரி 7.)*

## மழை

**மழை = ம + ழ் + ஐ.**
கொண்டு மூடியது + கீழாகும் + பண்பு விகுதி.
கொண்டு மூடிய மேகம், (நீராய்) கீழிறங்கும் தன்மை.
ஒவ்வொரு எழுத்தும், கருத்து உருவக் குறி என்று அறிந்துணரவும்.



## மறி

***மறி = மறு + இ.***
மறுத்து + இருத்தல். வழியை மறுத்து நிற்பது, மறி. ஆண் ஆடு.
***மறியல் = மறி + அல்.***
வழியை மறு + தொழில் பெயர் விகுதி. வழியை மறுத்தல்.





## மனம்

***மனம் = ம் + அன் + அம்.***
ம் = கொண்டு மூடியது.
அன் = "அதன்" எனும் பொருள் கொண்ட சாரியை.
அம் = தன்மை.
மனம் = கொண்டு மூடியதன் தன்மை. இந்த இயல்பை, கருத்தில் கொண்டு உருவாக்கப் பட்டதால், மனம் என்பது இயற்பெயர். தமிழில், இயற்பெயர்களும், காரணப் பெயர்களே!

## மன்மம் மன்மயம்

***1. மன்மம் = மன் + ம் + அம்.***
மனம் + கொண்டு மூடும் + தன்மை. மறைக்கப்படும் எண்ணம். வெளிப்படா உணர்வு.
***2.1. மன்மயம் = மன் + மை + அம்.***
மனம் + தன்மை + தன்மையாதல். மனத்தன்மையாதல். உடல், மனம், அறிவு யாவையும் அறிந்துணரும் மனத்தன்மை. நானற்ற உளநிலை. அனைத்தையும் தானாய் உணரும் அறிநிலை.
***2. 2. மன்மயம் = மன் + மையம்.***
மன்மையம் -> மன்மயம். மனத்தின் மையம். உள்மனம். ஆழ்மனம்.





## மன்றம்

***மன்றம் = மன்று + அம்.***
மன்று = ம் + அன்று. கொண்டு மூடியது + அல்ல. வெளிப்படையாவது.அம் = தன்மை.
மன்றம் = வெளிப்படும் தன்மை. மக்கள் தம் கருத்தை, மறைக்காமல், வெளிப்படையாய் உரைக்கும் இடம்.



## மன்னன்

**மன்னன் = மன் + நன்.**
மனம் + நல்ல. நல்ல மனமுடையவனே மன்னன், ஆட்சியாளன்.



## மாண்பு

**மாண்பு = ம் + ஆள் + பு.**
மனம் + வென்று + வெளியாய் வெளிப்படு. மனம் வென்ற தூய்மையாளர்.



## மாதிரம்

**மாதிரம் = மா + திரம்.**
பெரும் + உறுதி. மிகவும் நிலையானது. ஆகாயம்.
"வல மாதிரத்தான் வளி கொட்ப".
(மதுரைக்காஞ்சி.5)
"வலப்பக்கமாக ஆகாயத்தில், காற்று சுழல".
பூமியின் வலச்சுழற்சிக்கு ஏற்றவாறு, காற்றும் வலப்பக்கமாகச் சுழல்கிறதா?



## மாது

**மாது = ம் + ஆது.**
கொண்டு மூடியது + அது.மாது = கொண்டு மூடுபவள். குழந்தையை வயிற்றில் வளர்ப்பவர்.
மாது = மா + து. உயர்ந்த + தேக வெளிப்பாடு.
'மா', நெட்டெழுத்து ஒருமொழி + 'து', குற்றெழுத்து ஒருமொழி புணர்ந்து, 'மாது' என வருதலும் முறையே. பெண்மை, 'மிக உயர்ந்த தேக வெளிப்பாடு' என்பதும், சிறப்புப் பொருளே.

## மானம்



**மானம் = மான் + அம்.**
மானின் தன்மை. அமைதி.
“மானம் போனது” என்பது பிறரின் பேச்சோ, ஏச்சோ அல்ல. தனக்குள் நிகழும் எண்ணக் கலக்கம், போராட்டம். அமைதி இன்மை.
எனவே, “மானம்” என்றால் “அமைதி”.



## மிராண்டி

**மிராண்டி = ம் + இர் + ஆள் + தி.**
மௌனம் + இருக்கும் + ஆள் + தேகம்.
மௌனமாய் இருக்கும் மனிதன். பேசத் தெரியாதவன்.
காட்டுமிராண்டி = காட்டில் இருக்கும் பேசத் தெரியாத மனிதன்.

## முடக்கற்றான்



**முடக்கற்றான் = முடக்கு + அற்று + ஆன்.**
முடக்கு = முட(ம்) + கு. வளைந்த + மெய்யின் குறுக்கம். வளைந்த உடல். கை, கால்கள் நேராகாமை. வாதம் அல்லது வாயு ஆற்றலின் தடைப்படலால் ஏற்படும் நோய்.
அற்று = இன்றி
ஆன் = ஆண்பால் விகுதி.
முடக்கற்றான் கீரை = முடக்குவாத நோயைப் போக்கும் கீரை. அஃறிணையாயினும், அதன் சிறப்பு கருதி, உயர்திணையாய் அழைக்கப்படுகின்றது போலும்.



## முதல்

**முதல் = ம் + உத் + அல்.**
கொண்டு மூடியது + புறத்தேகமாய் + அதிர்தல். வெளிப்படல். உருவாதல். உருவாகும் இடம் / காரணம் / மூலம் / தனித்தது/ வேர் / அடிப்படை. தோற்றம். பொருளுக்கு பொருள் கூறின் வரம்பிலவே!

## முதிரை



***1. முதிரை = முது + இரை.***
*பழமையான + உணவு. பருப்பு வகைகளைத்தான், தமிழர், முதலில் உணவாக கொண்டனரோ?*
***2. முதிரை = முதிர் + ஐ.***
*முதிர்ந்த தன்மை. காய்ந்த அவரை, துவரை போன்ற பருப்பு வகைகள்.*
***3. முதிரை = மு(த்)து + இரை.***
*முத்து போன்று உள்ள + உணவு. அரிசி, பருப்பு போன்றவற்றை, முத்தோடு ஒப்பிடுவது, அன்றைய வழக்கம்.*
*இவ்வாறு, பகுத்தாய்வதன் மூலம், சொல்லின் தொன்மையான காரணப் பொருளை அறிய முனையலாம்.*
*''முதிரை வாலூன் வல்சி மழவர்''.*
*(பதிற்றுப்பத்து 55-7)*
*''துவரைத் துவையலில் ஒளிரும் இறைச்சியும் சோறும் (உண்ணும்) வீரர்கள்''.*

## முயலகன்



*'முயலகன்' மேல் நின்று நடராசர் ஆடுவதாய் சிலையும், சிற்பமும் கண்டதுண்டல்லவா?*
*கோயிலும், சிலைகளும் குறியீடுகளின் தொகுதி. அவற்றின் உட்பொருளை அறிதலே, கற்றதன் பயன்.*
***முயலகன் = முயல் + அகன்.***
*முயல் = ம் + உஇ(உய்) + அல். கொண்டு மூடியது + புறம் இருந்து + அதிர்தல் / இயங்கல்.*
*முயல்= ஓயாது இயங்குவது. அகன் = மனன். மனம்.*
*முயலகன் = முயலைப் போன்று ஓயாது இயங்கும் மனம். மனம் அடங்கினால் மட்டுமே உயிரையும், இறைமையையும் அறியமுடியும், உணரமுடியும்.*
*ஆடல்வல்லானைப் போல் ஞானியாகலாம், இறைமை அடையலாம், மனம் எனும் முயல் இயக்கம் அடங்கினால்!*

## முருகு



***முருகு = ம் + உருகு.***
*மனம் / மெய் உருகும். அழகு. காதல்.*
*முருகு = முரு + கு.*
*முரு = ம் + உரு. மனத்தின் உரு.*
*கு = க் + உ. மெய்யின் வெளிப்பாடு. மெய் உள்வாங்கல்.*
*முருகு = மனத்தின் உரு, மெய்யின் வெளிப்பாடாதல்.*
*மனத்தின் உருவை, மெய் உள்வாங்குதல்.*
*காதலன் / காதலியின் ஓயா நினைவால், மனம் பேதலித்தல். காதல் மயக்கம். தன்னைப் பிறிதாக கருதுதல் அல்லது பிறிதை தானாக கருதுதல். தனை மறத்தல்.*

## முருங்கை



**முருங்கை = முரும் + கை.**
திரியும் மெய் தன்மை. திரியும் காய்.
இரும்பு மற்றும் சுண்ணாம்புச்சத்து மிக்கது.
முருங்கைக்கீரை, உடல் சூடு தணிக்கும். மலச்சிக்கல் நீக்கும். கை, கால் உடம்பின் வலிகள் நீக்கும். இரத்த சோகை போக்கும். ஆண், பெண் இருபாலரின் மலட்டுத் தன்மையை அகற்ற, முருங்கைக்கீரை உதவலாம்.



## முளவு

**முளவு = முள் + அ + உ.**
முள் + அகம் + புறம். முள் உள்ளிருந்து வெளிப்படுவது. முள்ளம்பன்றி.
"மோழலம் பன்றியோடு முளவுமாக் காதி அட்ட".
*(சீவகசிந்தாமணி - பதுமையார் இலம்பகம் - 1233-2)*
"ஆண்பன்றியுடன் முள்ளம்பன்றிக் கறி இட்டு சமைத்த".

## முளைக்கீரை



**முளைக்கீரை = முளை + கீரை.**
முளை = ம் + உள் + ஐ. கொண்டு மூடியதன் + உள் + தன்மை. உடலின் உள்ளே உள்ளது. நரம்பு.
மனித உடலின் முதல் நரம்பு தண்டுவட நரம்பு. இதுதான் மனித உடலின் முளை. இதுவே, கிளைவிட்டு, எலும்பு, சதை, இரத்தம் கொண்டு உடலாகின்றது. நரம்பு மண்டலம் நலமுடன் இருந்தால்தான், உடல் முழுதும் நன்றாய் இருக்கும். உயிரே, நரம்பு மண்டலம் மூலம்தான் இயங்குகிறது
முளைக்கீரை, நரம்பு மண்டலம் மூலம், உடலைச் சீராக இயங்கச் செய்யும்.



## முள்ளங்கி

**முள்ளங்கி = முள்ளம் + கி.**
முள்ளம் = முள் + அம். முள் + தன்மை. குத்தும் தன்மை.
கி = க் + இ. மெய் + இருத்தல்.
முள்ளங்கி = குத்தும் தன்மையுடன் உடல் இருத்தல். சிறுநீரகக் கல் அடைப்புகளால் குத்தல் நேரும். அத்தகைய கற்களை அகற்றி, குத்தலை நீக்க, முள்ளங்கி உதவும்.

## முறுவல்

***1. முறுவல் = ம் + உறு + அல்.***

*கொண்டு மூடியது (இதழ்கள்) + மிகை + தொழிற்பெயர் விகுதி. இதழ்கள் மிகையாதல், பக்கவாட்டில் விரிதல். இதழ் விரித்துப் புன்னகைத்தல். சிறிய அளவில் பற்கள் தெரியலாம்.*

***2. முறுவல் = ம் + உறு + அல்.***

*மூடிய இதழ்கள் + புறம் பிரிந்து வெளிப்படு + தொழிற்பெயர் விகுதி. இதழ்கள் புறத்தில் பிரிந்து வெளிப்படல். புன்னகை.*

***3. முறுவல் = ம் + உறு + அல்.***

*மூடிய இதழ்கள் + அடைதல் + அதிர்தல். இதழ்கள் அதிர்வடைதல். கூர்ந்து கவனித்தால், புன்னகைக்கையில் இதழ்கள் அதிர்வதை உணரலாம்.*

*இவ்வாறு, 'உறு' எனும் சொல்லுக்கு, வெவ்வேறு பொருட்கள் இருந்தும், 'முறுவல்' எனும் இப்புணர்மொழியில், புன்னகையின் வெவ்வேறு பண்புகள், 1. இதழ் மிகையாதல், 2. இதழ் பிரிதல், 3. இதழ் அதிர்தல், வெளிப்படுகின்றன.*





## முன்தோன்றல் பின்தோன்றல்

***முன்தோன்றல் = முன்(பு )+ தோன்றல்.***

*தனக்கு முன்பு பிறந்தவன்/ள். அண்ணன் / அக்கை.*

***பின்தோன்றல் = பின்(பு ) + தோன்றல்.***

*தனக்கு பின்பு பிறந்தவன்/ள். தம்பி / தங்கை.*

## மூங்கை

***1. மூங்கை = ம் + ஊம் + கை.***

*மனம் + நீளும் + கை. மனத்தை வெளிப்படுத்து, கையால். கையசைவுகளால் மனத்தை வெளிப்படுத்தல். ஊமை.*

***2. மூங்கை = முகம் + கை.***

*(விரைந்து சேர்த்து ஒலிப்பதால், ''மூங்கை'' என மாறலாம்) முகம் மற்றும் கைகள் கொண்டு வெளிப்படுத்தி அறிவது.*

*''கையினால் சொலக் கண்களின் கேட்டிடு*
*மொய்கொள் சிந்தையின் மூங்கையும் ஆயினேன்''.*
*(சீவகசிந்தாமணி - குணமாலையார் இலம்பகம் - 997)*

*''கைகளால் சொல்ல, கண்களால் கேட்டு, விரைவாக பொருள் கொள்ளும் சிந்தை கொண்ட ஊமையாகிப் போனேன்'', என்றாள், குணமாலை.*



## மூரல்



**மூரல் = ம் + ஊர் + அல்.**
வாய்மூடிய இதழ்கள் + புறம் நீண்டு இருப்பது + தொழிற்பெயர் விகுதி. இதழ்கள் மூடியவாறே முன்குவிதல். பல் வெளிப்படாமல், புன்னகைத்தல். முத்துநகை. முத்தநகை.



## மூலிகை

**மூலிகை = மூல் + இ + கை.**
மூலம் + இருத்தல் + மெய்யாய் தோன்றி இருத்தல். மூலங்களான வெளி, நெருப்பு, காற்று, நீர், மண் ஆகிய ஐந்தின் தன்மைகளை முதன்மையாக கொண்டு தோன்றி இருக்கும் தாவரங்கள், மூலிகையாகும். ‘‘மூலி’’ என்பதுமுண்டு.
மனித உடல், ஐந்து மூலங்களால் உருவானது. உடலின் இயக்கம் யாவும், மூலங்களின் இயக்கமாக உள்ளது. உடலில் ஏற்படும் நோய்கள் யாவும், மூலங்களின் குறைவும், மிகையும் எனலாம். குறைவும் மிகையும், உண்ணும் உணவு, வாழும் சூழல், வாழ்க்கை முறை ஆகியவற்றால் ஏற்படுகின்றன. எனவே, நோயைப் போக்க, தக்க மூலங்களைக் கொண்ட தாவரங்களை உண்ணலாம்.
சித்தர்கள், தாவரங்களின் மூலப்பண்புகளையும், நோயின் மூலத்தன்மைகளையும் விளக்கி உள்ளனர்.

## மூவா



**மூவா = மூ + ஆ.**
மூப்பு ஆகாதது. முடிவில்லாதது. என்றும் நிலைப்பது.
‘‘ஆ’’, ‘‘ஆனது’’ என்றொரு பொருளையும், ‘‘ஆகாதது’’ என்றொரு பொருளையும் தரும்.
‘‘ஏவா மக்கள் மூவா மருந்து.’’ *( ஔவையார் – கொன்றைவேந்தன் 8)*
‘‘‘செய்’ என்று சொல்லும் முன்பே குறிப்பறிந்து செயலாற்றும் பிள்ளைகள் அமிழ்தம் போன்றவர்கள்’’.

## மெய் உணர்வு

***1. மெய் = ம் + எ + இ.***
*கொண்டு மூடி + உயர்ந்து + இருப்பது.*
***2. உணர்வு = உண்(ள்) + அர் + உ.***
*உள் செல்வது + பிரிந்து + புறமாவது. உள்படும் அதிர்வும், வெளிப்படும் அதிர்வும். குழந்தை கருவுற்றதும் தோன்றும் முதல் நரம்பு, தண்டுவடம். தண்டுவடமே நரம்பு மண்டலமாய் கிளைக்கின்றது. நரம்பு மண்டலத்தை மையமாகக் கொண்டே, தசையும், எலும்பும், தோலும், முடியும் என உடலின் அனைத்துப் பகுதியும் வளர்ந்து எழுந்து இருக்கின்றது. நரம்பு மண்டலத்தின் வலைப்பின்னலால்தான், நம்மால் எதையும் உணர்ந்தறிய முடிகின்றது. நம் புலன்கள் யாவுமே, நரம்பு மண்டலத்தின் விரிவாக்கம்தான்.*
*உடலின் செயல்பாடு, புலன்களின் செயல்பாடு, புலன்களின் செயல்பாட்டால் விளையும் மனத்தின் செயல்பாடு ஆகியவை அடங்கியப் பிறகுதான், (தோல், வாய், நாசி, கண், செவி ஆகிய மேல்) புலன்களின் உணர்வுகளுக்கு அப்பால் இருக்கின்ற மெல்லிய, நுண்ணிய ஆழ் நரம்பு மண்டலத்தின் உணர்வை உணர முடியும். ஆழ் நரம்பு மண்டலத்தை உணர்தலே, தானே ஆழ் நரம்பு மண்டலமாய் உணர்தலே, மெய் உணர்வாகும்.*
*அவ்வாறு உணர்கின்ற நிலைமையில், மொத்த நரம்பு மண்டலமும் வலிமையும் ஆற்றலும் பெறுகின்றது. அதனால், உடல் நலம் பெறுகின்றது, புலன்கள் கூர்மையடைகின்றன. அகம் (மனம்), புறம் (வெளி) பற்றிய புரிதல் மிகுகின்றது. சிந்தனை சிறக்கின்றது. முதல் நூல் முனைகின்றது.*





## மைகோதி

***மைகோதி = மை + கோதி.***
*மை = கொண்டு மூடிய தன்மை, கருமை, குறிப்பால் முடி.*
*கோதி = கோது + இ. கோதுவதாய் + இருப்பது.*
*மைகோதி = முடியைக் கோதுவது, சீப்பு.*



## மைதிலி

***மைதிலி = மை + த் + இல் + இ.***
*கொண்டு மூடிய தன்மை, இருள்மை, கருமை + நின்ற தேகம் + உறைவிடம் + பெண்பால் விகுதி. கருமை தங்கும் தேகத்தினள். கருமையானவள்.*

## மோதிரம்



***மோதிரம் = மோ + திரம்.***
*மோ = ம் + ஓ. கொண்டு மூடி + ஓங்கும்.*
*திரம் = த் + இர் + அம். தேகம் / வடிவம் + நிலைக்கும் + தன்மை. உறுதித் தன்மை.*
*மோதிரம் = கொண்டு மூடி உயரும் உறுதித் தன்மை. கணையாழி. உருவம் பொறித்த அல்லது கல் பதித்த விரலணி.*
*"சுறா ஏறு எழுதிய மோதிரந் தொட்டாள்".*
*(கலித்தொகை. 84. 23)*
*"ஆண் சுறாமீனின் உருவம் பொறித்த மோதிரத்தை அணிந்தவள்".*

## யாழ்



***யாழ் = இ + ஆழ்.***
இருத்தல் + ஆழ்ந்து. ஆழ்ந்து இருப்பது.
யாழின் இசை, உடலின் ஆழத்தில் உள்ள உயிர்நாடியையும் அசைக்கும்.
யாழும், வீணையும் அடிப்படையில் ஒன்றே!

## வங்கம்



***வங்கம் = வல் + க் + அம்.***
வலிமை / வளைவு + மெய் + பண்புப் பெயர் விகுதி.
வலிமையான பொருள் / வளைந்தப் பொருள்.
ஈயம், தகரம், துத்தநாகம், வெள்ளி போன்ற உறுதியான மற்றும் எளிதில் வளையக்கூடிய சில உலோகங்கள்.
வலிமையானதும், வளையும் தன்மையுடைய கடலலை.
அவ்வலைகளில், தாக்கு பிடிக்கும் உறுதியான கப்பல்.
மன உறுதியைக் குலைக்கும் வலிமையான வறுமை.
"மன்னுயிர் முதல்வன் மகர வேலையுள்
முன்னிய வங்க முங்கிக் கேடுற".
(மணிமேகலை - தவத்திறம் பூண்டு தருமங்கேட்ட காதை - 15-16)
"மனித உயிர்களுக்கு தலைவனான ஒருவன், கப்பலில், திமிங்கலத்தின் (மகரம்) முன் சென்று, மூழ்கி அழிய".
ஆனை, புலி போன்றவற்றையும், வலிமையான மெய்யைக் கொண்ட தன்மையால், வங்கம் எனலாமா?"



## வணக்கம்

***1.வணக்கம் = வண்(ள்) + அக் + கம்.***
வளமான + அந்த + மெய்யின் தன்மை. மெய்யுணர்வு வளமாகுக.
***2.வணக்கம் = வண் + அக் + கம்.***
அகமும் புறமும் / முழுமையாய் மிக நெருக்கம் + உடைய + மெய்யின் தன்மை.
அகத்தாலும், உடல் இருப்பாலும் மிக நெருங்கி இருக்கும் மெய்யின் தன்மை.
வணக்கம் = முழுமையாய் நெருக்கமாய் உள்ளேன். முழுமையாய் அணுக்கமாய் இருங்கள்.

## வல்லாரை



***வல்லாரை = வல் + ஆர் + ஐ.***
வலிமையான + ஆரத் + தன்மை.
வல்லாரைக் கீரை, வட்ட வடிவத்தில் ஒரு கோண அளவை இழந்ததுபோல் இருக்கும். அதன் ஆரம், வெளிப்படுவதாய் தோன்றும். வல்லாரைக்கீரையின் தள அமைப்பு, ஏறக்குறைய, மூளையின் தள அமைப்பை ஒத்திருப்பதாய்க் காணலாம். வல்லாரைக்கீரை, தண்ணீரில் வளரும். மூளையும், மண்டைக்குள் நீர்மைத் தன்மையில் வளர்கிறது. வல்லாரைக்கீரை, மூளை, ஞாபகம், சிந்தனையை வலிமையாக்கும் என கருதப்படுகின்றது.
பொதுவாக, தாவரம், காய், கனிகள் யாவும் மனித உறுப்புகளுடன் ஒப்பிடப்பட்டு, அவை அவ்வுறுப்புகளுக்கு சக்தியும், வலிமையும் தரும் என்று கருதப்பட்டு, நடைமுறையில் சோதிக்கப்பட்டு, மக்களிடையே சித்தர்களால் பரப்பப்பட்டுள்ளன. பொருள் பொதிந்தப் பெயர்களையும், அவர்கள் சூட்டி உள்ளனர்.



## வற்பம்

***வற்பம் = வல் + ப் + அம்.***
வலிமை + கொண்ட + பண்புப் பெயர் விகுதி. வலிமைத் தன்மை. உறுதியான வடிவம். வலிமையான பொருள்.
"மன்னிய வயிரமாய் செறிந்து வற்பமுமாம்".
*(மணிமேகலை - சமயக்கணக்கர்தம் திறம் கேட்ட காதை - 135)*
*(மரம்)* திண்மையான வயிரம் பாய்ந்து, கல்போன்று இறுகி, வலிமையான பொருள் ஆகலாம்.

## வன்மம் வன்மயம்



***1. வன்மம் = வல் (ன்) + ம் + அம்.***
வலிமை + கொண்டு மூடும் + தன்மை. வலிய எண்ணம். தீங்கு விளைவிக்க நினைக்கும் எண்ணம்.
***2. 1. வன்மயம் = வல் (ன்) + மை + அம்.***
வலிமை + தன்மை + தன்மையாதல். அகமும் புறமும் வலிமையாதல். முரட்டுத்தன்மை.
***2. 2. வன்மயம் = வல் (ன்) + மையம்.***
வலிமையான மையம்.



## வாக்கியம்

**வாக்கியம் = வாக்கு + இயம்.**
வாக்கு = வா(ய்) + கு. வாயின் மெய் வெளிப்பாடு. சொல்.
இயம் = இ + அம். இருக்கும் + தன்மை. இயல்பு.
வாக்கியம் = சொல்லின் இயல்பு, சொற்றொடர் ஆவது.

## வானவல்லி



**வானவல்லி = வானம் + வல்லி.**
வானம் = வான்(ல்) + அம். நீளும் + தன்மை. விரிவது, வானம்.
வல்லி = (வலிமை) வல் + இ. வலிமையாக + இருத்தல்/ இருப்பவள். வலிமையானவள்.
வானவல்லி = விரிந்த வானத்தின் வலிமையாய் இருப்பவள். மின்னல்.
மீன் ஏற்றுக் கொடியோன், மெய் பெற, வளர்த்த,
வானவல்லி வருதலும் உண்டுகொல்!
- ( சிலம்பு - இந்திர விழவு ஊர் எடுத்த காதை - 210-211)
(புகாரில்) மகரக் கொடி ஏற்றும் மன்மதன் வளர்த்த, மின்னலும் வருதல் உண்டோ?



## வாய்மை

**வாய்மை = வாய் + மை.**
மை = பண்பு விகுதி.
வாய்மை = வாயின் பண்பு. வாயின் இயல்பான பண்பு உண்மையை உரைத்தல் மட்டுமே.

## விந்தை



***1. விந்தை = வில் + தை.***
*"369. அல்வழி எல்லாம் உறழ் என மொழிப."*
*(தொல். புள்ளி மயங்கியல். நூற்பா.369)*
*லகர ஒற்று இறுதியை அடுத்து, அல்வழியில், வல்லினம் வந்ததால், இறுதி முழுவதுமாய் திரியும். லகரம், னகரமாகி, வருமொழியின் தன்னினமான நகரமாய் திரிந்தது.*
*2. வில் = வி + ல். வி = வ் + இ.*
*வ் = உ + அ + ஃ. புறம் + அகம் + இறுகல். முழுமை.*
*இ = இடை. இன்மை. இருத்தல்.*
*வி = முழுமையாய் இருத்தல்.*
*ல் = மேலும் கீழுமாதல். வளைதல்.*
*வில் = முழுமையாய் வளைந்து இருத்தல்.*
*3. தை = த் + ஐ. தேகம் + தன்மை.*
*தேகமாய் இருத்தல். இருப்பு. வடிவம். உருவம்.*
*இணைதல்.*
*4. வில் + தை = முழுமையாய் வளைந்த வடிவமாய் இருத்தல். வானம், பூமியோடு வண்ணமாய் இணைதல். மனிதன் கண்ட முதல் விந்தை, வானவில்லோ?"*




## விரலம்

**விரலம் = விரல் + அம்.**
விரல் <- பிரல். பொருள் தெளிவிற்கு, பகரம், வகரமாகும்.
**1. பிரல் = ப் + இர்(ரு) + அல்.**
கொள்வதில் + இருந்து + மேலும் கீழுமாதல். கையில் இருந்து மேலும் கீழுமாவது, பிரல், விரல்.

## விருந்தாவனம்



**விருந்தாவனம் = விருந்து + ஆ + வனம்.**
புதுமை + ஆன + தோட்டம். அழகால் வியப்பூட்டும் சோலை.
விருந்தாவனம், பிருந்தாவனம் என்றாகி உள்ளது.



## விரும்மம்

**விரும்மம் = வ் + இரும் + அம்.**
புறமும் அகமும் + இருக்கும் + தன்மை. எங்கும் எல்லாவற்றிலும் இருக்கும் தன்மை. இறைமை. மனிதரின் அகமும் புறமும் இருக்கும் தன்மை.
'விரும்மம்' எனும் இச்சொல், பூலாங்குறிச்சி கல்வெட்டில் வருகின்றது. 'வெளியில் இருக்கும் தன்மை' என பொருள் கொண்ட 'பிரும்மம்' எனும் சொல்லாக பெயர்க்கப்பட்டு பயன்படுத்தப் படுகின்றது.
பிரும்மம் = ப் + இரும் + மம். வெளியில் + இருக்கும் + கொண்டு மூடிய தன்மை.
வெளியெங்கும் கொண்டு மூடிய தன்மை. வெளிப்படாத தன்மை. ஆனால், மேற்கூறிய 'விரும்மம்' என்பது, பிரும்மம் என்பதைவிட, மேலும் உயர்ந்த, முழுமையான, தெளிவான பொருளை வழங்குகின்றது.

## விவேகம்



**விவேகம் = வி + ஏகம்.**
அப்பால் + ஒன்று. ஒன்றுக்கு அப்பால். மனம் ஒருமை நிலையை எய்தியப் பின் உள்ள மனநிலை. ஞானம்.



## வீடு

**வீடு = வ் + ஈடு.**
**வ் = வ + ஃ, வ = உ + அ, உ = புறம், அ = அகம்**
**வ = முழுமை, ஃ = உயிர்மெய்ச் சுருக்கம்.**
**வ் = முழுமையின் சுருக்கம்.**
**பிரபஞ்ச வெளியின் அகமும் புறமும், மனித உயிரின் அகமும் புறமும் ஒத்தத் தன்மையன. ஞானம்.**
**ஈடு = சமம்.**
**வீடு = இல்லறம், முழுமைக்கு, ஞானத்திற்குச் சமம்.**

## வெட்கம்



**வெட்கம் = வெள் + கம்.**
வெண்மை + மெய்யின் தன்மை. வெளிரும் / ஒளிரும் உடல் தன்மை. அச்சத்தால் அல்லது நாணத்தால் வெட்கம் உண்டாகும்.

## வெண்டலை



**வெண்டலை = வெண்(மை) + தலை.**
வெள்ளைத் தலை. மண்டை ஓடு.
ணகர ளகர ஈற்றின் முன்னர் தகர நகரங்கள் திரிதல்.
151. ணளவென் புள்ளிமுன் டணவெனத் தோன்றும்.
(தொல். எழுத்து. தொகை மரபு)
இங்கு, ''ண்'' எனும் புள்ளியை அடுத்து, ''த'' வந்து' ''ட'' எனத் திரிந்தது.
''வெண்டலை பயின்ற காட்டுள்
விளங்கிழை தமிய ளானாள்''.
(சீவகசிந்தாமணி - நாமகள் இலம்பகம் - சீவகன் பிறப்பு - 303)
''மண்டை ஓடுகள் மிகுந்த சுடுகாட்டில் ஒளிமிக்கவள் தனித்தவள் ஆனாள்'', விசயை, சீவகனின் தாய்.

## வெந்தயம்



**வெந்தயம் = வெம் + த் + அயம்.**
வெம் = வெம்மை. த் = தேகம்.
அயம் = அ + அம். அன்மை + தன்மை.
வெந்தயம் = வெம்மை தேகம் அன்மை.
வெந்தயக்கீரை, உடலின் வெப்பத்தை நீக்கும்.

## வெருகு



**1. வெருகு = வ் + எர் + உ + கு.**
**(அகமும் புறமும்) முழுமையாய் + உயர்ந்து இருந்து + வெளிப்படும் + மெய் வெளிப்பாடு. மனமும் உடலும் மிக கவனமாய் இருக்கும் மெய்யின் வெளிப்பாடு. காட்டுப்பூனை.**
**2. வெருகு = வெரு + கு. அஞ்சும் + மெய்யின் வெளிப்பாடு. அஞ்சும் பூனை. காட்டுப் பூனை. அஞ்சவைக்கும் பூனை எனினும் தகும்.**
**"வெருக்கு விடை அன்ன வெருள் நோக்கு கயம் தலை".**
**(புறநானூறு - 324)**
**"ஆண் காட்டுப்பூனையின் பார்வை போன்ற, அஞ்சத்தக்கப் பார்வையுடைய பெரிய தலை".**

## வெற்றி

**வெற்றி = வெல் + தி.**
வெல்லும் + தேகமாய் இருத்தல். தேகத்தை வெல்லுதல்.
மற்போரில் இருந்து, இச்சொல் உருவாகி இருக்கலாம். தமிழ்ச்சொல், தானாகவே பொருளை உட்கொண்டு இருப்பதோடு அல்லாமல், பொருண்மையின் வரலாற்றையும் கூறவல்லதாம்.





## வெற்றிலை

**வெற்றிலை = வெல் + த் + இலை.**
வெல் + தேகம் + இலை. இலையால் தேகத்தை வெல்லல். வெற்றிலையால் உடலின் பல சிக்கல்களை வெல்லலாம்.

## வேங்கடம்

**வேங்கடம் = வேம் + கடம்**
வேம் – வெம்மை.
கடம் = க் + அட் + அம். மெய் + ஒட்டித்தொடரும் + தன்மை. மலைத்தொடர்.
வேங்கடம் = வெம்மையான மலைத்தொடர்.





## வேனில்

**வேனில் = வேல்(ன்) + இல்.**
வேலைப் போன்று + இருத்தல். வேல் ஆயுதம் போன்று கூர்மையான கதிர் பாய்தல்.

## அகரம்

***அகராதி = அகரம் + ஆதி.***
***அகரம் = அ + கரம்***
*கரம் = கர் + அம். மெய்பிரிதல் + தன்மை.*
*ஆதி = ஆத் + இ. ஆகி + இருத்தல்.*
*அகராதி = "அ" எனும் எழுத்து ஒலியின் திரியும் தன்மையால் (இ, உ) , திரிந்த எழுத்துக்கள் இணையும் தன்மையால் (எ, ஒ, ஐ, ஔ), என பிற எல்லா உயிர் எழுத்துகளும், மெய் ஒலியுடன் பிணைந்து ஆய்தமும், மெய் ஒலிகளுடன் இணைந்து உயிர்மெய் எழுத்துக்களும், இவை எல்லாவற்றின் சேர்க்கையால், சொற்களும் ஆகி இருக்கின்றன. எனவே, அகரமே எல்லா எழுத்துக்களின், சொற்களின் மூலம்.*
*அகரம் ஆத்ததே, தமிழும் மொழியும்.*

## அணியது, அணிவது

***அணியது = அணி + அது.***
*நெருக்கமாய் இருப்பது. (அணி, அது - பெயர்ச்சொற்கள்)*
*அணிவது = அணி + அது. அணியப்படுவது. (அணி - வினைச்சொல். அது - பெயர்ச்சொல்)*
*இங்கே, 'ய', 'வ' எனும் இரண்டு உடம்படுமெய்களும், புணர்ச்சியில் தோன்றி, வெவ்வேறு பொருட்களைப் பெற வைக்கின்றன.*

## பிடகம்

***பிடகம் = ப் + இடு + அகம்.***
*கொள்வது + வை + அகம். வெளியில் (Space) அகத்தை வை. அகவெளியில் உறைவதற்கான வழிகாட்டி.*
*புத்தம், சூன்யத்தை, நிர்வாணாவை, சமாதியை, பிரபஞ்ச மனத்தையே ஞானமாக ஏற்கிறது.*
*பின்னாளில், மூன்று பிடகங்கள் உருவாக்கப்பட்டு, திரிபீடகங்கள் என திரிந்தது.*
*உண்மையில், பிடகம் எனும் சொல் பிராகிருத மொழியில் உள்ளது. அதை, பாலி/ பாளி/ பாழி மொழியிலும் பயன்படுத்துகின்றனர்.*
*செய்தி என்னவெனில், தமிழில் மட்டுமல்ல, வேறெந்த மொழிக்கும், இச்சொல் பகுப்பாய்வு பொருந்தி, அதன் மூலப் பொருளை வெளிப்படுத்தும். குறிப்பாக, தமிழியில் இருந்து கிளைத்த அனைத்து மொழிகளுக்கும் பொருந்தும். சமக்கிருதத்தின் பல சொற்களும் விலக்கல்ல.*

## ஐந்தமிழ்

***ஐந்தமிழ் = ஐம் + தமிழ்.***
*ஐந்து தமிழ்.*
*இயல், இசை, நாடகம், ஓவியம், சிற்பம் ஆகியவை ஐங்கலைகள், ஐந்தமிழாம்.*
*இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழோடு, ஓவியத்தையும், சிற்பத்தையும் சேர்த்து ஐந்தமிழையும் இரசிப்போம், கற்போம், வளர்ப்போம்.*
*ஐந்தமிழின் பயன்பாடு, தன்னை அறிதலாம், இறைமை உணர்தலாம், வாழ்வின் பயன் எய்தலாம்.*

## மறை, முறை

***1.மறை = ம் + அற் + ஐ.***
*மனம் + அறுக்கும் + தன்மை.*
*மனம் என்பது ஐந்து புலன்களின் உள்ளீடுகளால் உருவானாலும், உலக வாழ்க்கைக்கு அவசியமாயினும், இறையை உணர்வதற்கு தடையாய் உள்ளது. மனம் அழிவதன் மூலமே, தான், தனது எனும் எண்ணங்கள் அடங்குவதன் மூலமே, மெய்மையை, இறைமையை உணரலாகும். மறைகள் அல்லது திருமறைகள், மனத்தை அழிக்கும் வழிகளைக் காட்டுகின்றன.*
***2.முறை = ம் + உற் + ஐ.***
*மனம் + பற்றும் + தன்மை.*
*மனத்துடன் ஒன்றுவதன் மூலமும், தான், தனது இல்லாமலாகி, மெய்மையை உணரலாகும். முறைகள் அல்லது திருமுறைகள், மனத்துடன் ஒன்றும் வழிகளைக் காட்டுகின்றன.*
*மெய்மையை, இறைமையை உணர இரண்டு வழிகள்.*
*1. மனத்தை அழித்தல். (மறை) (ஞானம்)*
*2. மனத்துடன் ஒன்றுதல். (முறை) (பத்தி)*

## இயவுள், கடவுள்

***இயவுள் = இயல் + உள்.***
*நமது உரு, உணர்வு, உள்ளம், அறிவு, காலம் போன்ற இயல்புகளின் இயக்கமாக உள்ளது / உள்ளவன்.*
*கடவுள் = கடவு / கடம் + உள். நாம் அறிந்த உடல், உரு, உணர்வு, உள்ளம், அறிவு, காலம், போன்ற இயல்பையெல்லாம் கடந்து உள்ளது / உள்ளவன்.*

## உயிரிணைகள்

***1. தம்மிணைகள்: ஆ, ஈ, ஊ, ஏ, ஓ.***
*குறில்கள் தத்தமக்குள் இணைந்து நெடில்களாகின்றன.*
*அ + அ = ஆ, இ + இ = ஈ, உ+ உ = ஊ, எ + எ = ஏ, ஒ + ஒ = ஓ.*
***2. ஈருயிர் இணைகள்: ஐ, ஔ, ய, வ.***
*அ + இ = ஐ, அ + உ = ஔ (அல்லது, அ+ ஊ= ஔ),*
*இ + அ = ய, உ + அ = வ. (ய, வ மெய்யுடன்படும்)*
***3. உயிர் மெய் இணை: ஃ.***
*அ+ க் = ஃ.*

## மெய்யிணைகள்

***ங், ஞ், ண், ந், ம்***
*1. ன் + க் = ங்*
*2. ன் + ச் = ஞ்*
*3. ன் + ட் = ண்*
*4. ன் + த் = ந்*
*5. ன் + ப் = ம்*
*நீங்களே, மேற்கூறிய எழுத்துகளை விரைவாக சேர்த்து ஒலித்துப் பாருங்கள். நீங்களே சான்றாவீர்கள்!*
*இந்நெருக்கமான இணைப்பால்தான், 'க்ங்', 'ச்ஞ்', 'ட்ண்', 'த்ந்', 'ப்ம்' ஆகியன, தத்தம் இன எழுத்துகளாகின்றன.*
*மேல் அண்ணத்தில், இந்த இன எழுத்து ஒலிகள் தோன்றும் இடங்களும் அடுத்தடுத்து இருப்பதை அறிந்துணரவும். சொல்லோட்டத்திற்கும், இசையோட்டத்திற்கும் இவை பெரிதும் உதவுகின்றன.*

பல சொற்கள் அரிதாகவும் ஏதோ புதியது போலும் தோன்றினாலும் நாம்தான் இவ்வரிய சொற்களை காலப்போக்கில் இழந்து விட்டோமோ என்று ஏங்க வைக்கிறது, இந்நூல். உதாரணமாக சாவேறு, கடகம், சாக்கை மற்ற பிற. ஒவ்வோர் சொல்லுக்கும் உகந்ததோர் சித்திர இணைப்பில் ஆசிரியரின் கடின உழைப்பும் ஆராய்ச்சியும் தெரிகிறது. இந்நூலைப் படிப்பதால் என்ன சொல்கிறோம் என்று விளங்காதவரும் அதை ஏன் அப்படிச் சொல்கிறோம் என்பதும் எப்படிச் சொல்கிறோம் என்பதையும் மிக எளிதாக மனதில் உணர வழிவகை செய்கிறது. இது போன்ற நூல்கள் மாணவப் பருவத்தில் இருந்தே சிறார் கல்வித் திட்டத்தில் அமையப்பெறின் அது தமிழன்னைக்குச் செய்யும் உவப்பு மிகு தொண்டாகும் என்றால் அது மிகையல்ல.

ஹரிஹரன், சென்னை



சொல்லாக்கியம்
வெளியீடு

விலை ரூ. 500